சாம்ராஜ் வெளியீடு
முதற்பதிப்பு: செப்டம்பர் 1962

விலை ரூ. 1-95

அச்சிட்டது :
ஜெனரல் பிரிண்டர்ஸ்
14, பூவிருந்தவல்லி ஹைரோடு
சென்னை-3.

தென்மொழிகள் புத்தக டிரஸ்ட்
ஆதரவில் பதிப்பிக்கப் பெற்றது.

# மும்மொழிச் சிறுகதைகள்


*ஆசிரியர்கள் :*

கே. வி. எஸ். அச்சுதவல்லி
பாலகும்மி பத்மராஜு
ராவி. கொண்டலராவ்
மஞ்சுஸ்ரீ
ஸ்ரீ காந்தா
'சதுரங்கா'
எம். டி. வாசுதேவன் நாயர்
டி. பத்மநாபன்
ஸ்ரீ அசுவத்தா
யு. ஆர். அனந்தமூர்த்தி






14, பூவிருந்தவல்லி ஹைரோடு, பெரியமேடு, சென்னை-3

FIRST EDITION 5000 COPIES
SEPTEMBER 1962
TAMIL

# Mummozhi Sirukathaikal

(Tamil Version of Selected Short Stories from Telugu, Malayalam & Kannada.)



**Price : Rs. 1-95.**

Published under the auspices of
The Southern Languages Book Trust, Madras-34
SECOND SERIES - NUMBER 17.



**SAMRAJ PRASURAM**
14, POONAMALLEE HIGH ROAD
MADRAS-3

# அணிந்துரை

## சி. சுப்பிரமணியம்

மொழி, நாகரிகம், கலை முதலியவற்றில் பெரிதும் ஒற்றுமையுடையவர்கள் தென் பகுதி மக்கள் சரித்திர காலத்திற்கு முன்பிருந்தே இவ்வொருமைப்பாடு வேரூன்றி இருந்தது. ஆனால், சில நூற்றாண்டுகளுக்கு முன்னால் இவ்வொற்றுமை உணர்ச்சி குறைந்து போய்விட்டது. காலம் செய்த இவ்விடையூற்றை நீக்கி, தென் பகுதி மக்களிடையே ஒரு பகுதியினரின் கருத்துக்கள் மற்றப் பகுதியினருக்கும் பரவும் வகையில் தென்மொழிகள் புத்தக டிரஸ்ட் பாடுபட்டு வருவதைக் கண்டு நான் மிகவும் மகிழ்ச்சியடைகிறேன்.

1955ல் சென்னையில் நமது நாட்டின் தலைமை அமைச்சர் ஸ்ரீ ஜவகர்லால் நேரு அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட டிரஸ்ட் நாள்தோறும் நல்ல முறையில் முன்னேறி வருவது மிகவும் பாராட்டுக்குரியது. இந்நிறுவனம் குழந்தைகள் முதற் கொண்டு பெரியவர்கள் வரை எல்லோருக்கும் பயன்படும் வகையிலே பல புத்தகங்களை வெளியிட்டிருக்கின்றது. குறிப்பாகத் திருக்குறள் போன்ற நூலை, கன்னடத்தில் மொழி பெயர்த்து வெளியிட்டிருப்பது மிகவும் போற்றுதற்குரியது.

கருத்துப் பரிமாற்றத்தில்தான் மனித இனத்தின் அறிவு வளர்ச்சியும் உலக அமைதியும் அடங்கியிருக்கின்றன. இவ் வுண்மையை அடிப்படையாகக் கொண்டு தென் பகுதியிலே உள்ள சிறந்த நூல்களைக் குறைந்த விலையிலே மற்ற மொழி யாளரும் அறிந்து கொள்ளும் வகையிலே ஆக்கப் பணி புரியும் டிரஸ்டின் சேவை மேலும் மேலும் வளர்ந்து பயன் படும் என நினைக்கிறேன். புத்தகங்கள் வெளியிடுவதோடு மட்டுமல்லாது கருத்தரங்கிற்கு ஏற்பாடு செய்வதிலும், ஆராய்ச்சி வேலைகளிலும் இப்புத்தக டிரஸ்ட் ஈடுபட்டிருப் பது மிகவும் மகிழ்ச்சிக்குரியது. குறிப்பாக, குழந்தைகளின் புத்தகம் படிக்கும் பழக்கத்தைப் பற்றி அவர்கள் ஆராய்ச்சி நடத்தியிருப்பது நாட்டிற்கு மிகவும் நன்மை பயக்கும் என்று எண்ணுகிறேன். புதிதாக அவர்கள் தமிழில் வெளியிட இருக்கும் நூல்கள் தமிழ்ப் பெருமக்களிடையே பெரும் ஆதர வோடு திகழும் என்று எண்ணுகிறேன்.

இத்துறையில் அவர்கள் மேலும் மேலும் சிறந்த நூல் களை எளிய விலையில் வெளியிட்டுத் தென்பகுதி மக்களும் நாடு முழுமைக்கும் பயன்படும் வகையில் முன்னேற இறை வன் அருள்வாளுக.

[signature]

# பொருளடக்கம்

1

# மழை பெய்த நாள்

**கே. வி. எஸ். அச்சுதவல்லி.**

''சீச்சீ!! சனியன் பிடித்த மழை! பொழுது விடிந்ததிலிருந்து ஒரே ஊதல் காற்றும் சாரலுமாக இருக்கிறது! தரித்திரம்! பிடிக்கவேஇல்லை!'' என்று நினைத்த வண்ணம் மாடி ஜன்னலின் கண்ணாடிக் கதவுகளைத் திறந்து விட்டு, ஜன்னலில் உட்கார்ந்தான் ஜயராம். எதிரில், பூவரசமரத்தடியில் உடைந்த சட்டியோட்டைத் திருப்பிவைத்து அதில் உமியை நிரப்பி, மக்காச் சோளக் கதிரைச் சுட்டுக்கொண்டே நெருப்பை ஊதிக்கொண்டு உட்கார்ந்திருந்தாள் எல்லம்மா. மரத்தின் இலைகளின்

1.

நுனியிலிருந்து நழுவிய நீர்த்துளிகள் விழுந்தபோதெல்லாம் சட்டிக் கும்மட்டியிலிருந்து 'சொய்' என்ற ஓசையுடன் வருவதையும் எல்லம்மா மறுபடியும் குச்சியால் உமியைக் கிளறிவிட்டுக் கன்னங்கள் உப்பிவர ஊதுவதையும் ஜயராம் பார்த்துக்கொண்டே இருந்தான். கிட்டத்தட்ட மணி ஒன்பதாயிற்று. இன்னும் பஸ் வரவில்லை. எங்கே, எந்தப் பாலமாவது இந்த மழைக்கு இடிந்திருக்கும். காலை ஏழு மணிக்கே வரவேண்டிய பஸ் இன்னும் வரவில்லை. பாவம்! அவ்வளவு குளிரிலும் எல்லம்மாவின் மக்காச்சோளக் கடையும் அப்பா ராவின் டீக் கடையும் சிறிதும் சளைக்காமல் நிலை நின்றன.

"என்னடா அப்பனு!" என்பான் ஜயராம்.

"என்னெ அப்பனு இன்றைதீங்க சாமீ! அப்பா ராவுன்னு சொல்லுங்க" என்று வெற்றிலைக் காவியால் சிவப்பேறிய பற்களும் பீடிப் புகையால் கறுத்துவிட்ட உதடுகளும் தெரிய நீட்டி முழக்குவான் அவன்.

ஊதல் காற்றில் கடைக் கூரையின் பனை ஓலைகள் பறந்து போகாவண்ணம், நனைந்த கோணிப் பைகளைப் பூவரச மரமேறி மூடிக்கொண்டிருந்தான் அப்பனு.

பாழுங்குளிர்! இருபத்தைந்து ரூபாய் கொட்டி வாங்கிய உல்லன் ஸ்வெட்டருக்குள்ளே நான் கிடுகிடுவென்று நடுங்குகிறேன்; உடம்பில் துணி கூட இல்லாமல் அப்பனு எப்படி இருக்க முடிகிறது? எல்லி மட்டும் என்ன? இளநீர் அபிஷேகத்தில் பளபளக்கும் 'சொல்லங்கி'* ஆஞ்சநேயர் விக்கிரகம் போல் இருக்கிறாள். தலையிலிருந்து உடம்பில் வழியும் மழைத்துளிகளைச் சட்டைசெய்யாமல் உரித்த மக்காச் சோளக்கதிரின் இலைகளைக் கும்மட்டியில் போட்டு எரியவிட, வீண்பாடு படுகிறாள் அவள்.

---

* ஒரு க்ஷேத்திரம்

இரும்புப்பெட்டி போன்ற அறையில் உட்கார்ந்திருக்கும் ஜயராம்—இருபத்தைந்து ரூபாய் மதிப்புள்ள உல்லன் ஸ்வெட்டரில், வாயில் 'பைப்'புடன் உட்கார்ந்திருந்த ஜயராம்—இந்த மழைநாளில் அவர்கள் செய்யும் வேலைகளையே பொழுதுபோக்குக் காட்சியாகப் பார்த்துக் கொண்டிருந்தான்.

எல்லி ஏனோ தானே சிரித்துக்கொள்ளுகிருள். நான் அவளைப் பார்ப்பதைத் தெரிந்துகொள்ளவில்லையே! அவளுடைய கறுத்து உருண்ட கன்னங்களில் குழி விழுகின்றன. உடுத்தியிருக்கும் சாண் அளவு துணியால் மறைக்க முடியாத உழைப்பின் அழகு, சுற்றிலும் உள்ள ரிக்ஷாக்காரர்களுக்கு இந்த மழை நாளில் ஊக்கத்தை உண்டாக்கிக் கொண்டிருக்கிறது.

ஜயராமின் உள்ளத்தில் இன்னதென்று புரியாத ஓர் எண்ணம்—மனச்சோர்வு—நுழைந்து விட்டது. 'இந்தப் பெண்களை இவ்வளவு அழகாகப் படைத்த கடவுளை என்னவென்று சொல்வதோ தெரியவில்லை. எனக்கு வீட்டில் நரக வேதனையாய் இருக்கிறது. இந்தச் சுனந்தையோடு நான் ஜன்மம் முழுதும் பற்றில்லாமல் கழிக்கவேண்டியது தானு? என் தலைவிதிக்கு யார் என்ன செய்ய முடியும்?

சுனந்தை மட்டும் என்ன, அந்தக் கா[illegible] எவ்வளவு அழகாக இருந்தாள்! என் கண்ணை நானே நம்பமுடியவில்லை! இளம் ஜாதி மல்லிக்கொடி போன்ற உடல்! காசித்தும்பை போன்ற வாய்! அப்பப்பா! ஏதாவது சொன்னுல், 'என் அழகையெல்லாம் அழித்தது நீதான்' என்கிருள். என்ன பிரயோஜனம்? அவள் உடல் மிகவும் பலமற்றுப்போய் விட்டது. எப்பொழுதும் முக்கி முனகிக் கொண்டே இருக்கிருள். குளிர் காலம், கோடைக்காலம், மழைக்காலம் எல்லாவற்றிலுமே

அவளுக்கு நோயில்லாமல் இருக்காது. இவ்வளவு செல்வமும் சிறப்பும் இருந்தும் அவள் உடல் ஆரோக்கியம் பெறவில்லை. எப்பொழுதும் ஏதோ ஒரு நோய் இருந்து கொண்டே இருக்கிறது. வர வரச் சந்தேக நோயும் பிடித்துக் கொண்டிருக்கிறது.

காலை முதல் மாலை வரையில் 'தன் எதிரிலேயே உட்கார்ந்திரு' என்கிருள். 'போகட்டும்' என்று உட் கார்ந்தால், ஏதாவது குற்றமுங் கொடுமையும் சொல்லித் துன்புறுத்துகிருள். அவள் பேச்சைக் கேட்டுக் கொண் டிருந்தால் எனக்கும் ஏதாவது நோய் தொற்றிக் கொள்ளும் என்று பயமாக இருக்கிறது. முதலில் இருந்த தைப் போல் ஆடிப்பாடிக் காலம் கழிக்கலாம் என்ருல் அவள் உடல் பூஞ்சையாக இருக்கிறது. தானும் கூட வரமாட்டாள்; நான் தனியாகப் போனலும் சந்தேகம். வீட்டுக்குத் திரும்பி வந்தவுடன் இல்லாததும் பொல்லா ததும் சொல்லி வதைக்கிருள். இவளை மணந்து கொண்டதனலேயே நான் என் மன அமைதிக்குச் சாவு மணி அடித்து விட்டேன். என் வாழ்க்கை துன்பம் நிறைந்ததாகி விட்டது. சுகப்படும் தகுதியைக் கடவுள் என் தலையில் எழுதவில்லை. இதைவிட, இந்த மாளிகை யையும் செல்வத்தையும் உதறிவிட்டு ரிக்ஷா இழுத்தால் இன்பமாய் இருக்கும். மன அமைதியைக் கொடுக்காத சுகபோகங்கள் யாருக்கு வேண்டும்? என்னைவிட அந்த ரிக்ஷாக்காரர்களே மேல். வேதனையும் விசாரமும் இல்லாத வாழ்க்கை அவர்களுடையது. வீட்டுக்குப் போகும் வேளையில் மனைவி ஆதரவுடன் பேசுவாள். குழந்தை குட்டிகள் சூழ்ந்து கொள்வார்கள். 'ஹாய்'யாக அப்பனுவிடம் ஓர் அணு 'டீ' குடித்துவிட்டு எல்லியிடம் சோளக்கதிர் வாங்கிக்கொண்டு பஸ் வரும்வரை அவர் களோடு அர்த்தம் இல்லாத கேலிச் செய்திகளைப் பேசிக் கொண்டிருப்பார்கள். பஸ் வந்தவுடன் அவர்களுக்கு

வாடிக்கை கிடைத்துவிடும்?" எல்லம்மாள் சாளரத்தின் பக்கம் பார்க்காத போதெல்லாம் அவளையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான் ஜயராம்.

"அப்பப்பா! ஒரே மயை! சனியன்! குளிர் நடுக்குது. இவ்வளவு பொயுதேறியும் இன்னக்கி பஸ் ஏன் வரலியோ தெரியல்லியே! வந்திச்சுன்னு, பாதி சோளக்கதிர் பறந்து போவும். பொறவு, மிஞ்சின கதிருங்களைச் சுடலாம். மொதல்லெயே சுட்டுவச்சுட்டா, மிஞ்சிப் போயிடிச்சுன்னு நாளக்கி நல்லா இருக்காது. அந்த ரெட்டியார் வயலுக்குக் காவல் போட்டுட்டான். இனி அங்கே வுடமாட்டான். வூட்டுலே இருக்குறுனே, அவன் போக்கு ஒரு தினுசு. கையாலாகாதவன். கட்டை கணக்கா குந்திக்கெடக்கருன். 'ரிச்சாவாச்சியும் இயுக்கக் கூடாதா'ன்னு கேட்டா, 'இந்த ஒடம்பு கஸ்டத்துக்குத் தாங்காதே' எங்குது. இன்னு, போ அண்ணன் மவன்னு கொடுத்திச்சு. குடுத்தத்துக்கு, ரண்டு தோலாப் பொன்னை நாசமாக்கிட்டான். நானு வூட்டுக்குப் போறப்ப, வாயெத் தெறந்துக்கிட்டுக் குந்திக்கினு இருந்தா நான் என்னு செய்யட்டும்? நேத்தி ராவிலெ கூழு கூட இல்லெ. இப்ப, சோளக் கொண்டை எல்லாம் வித்துப் போவணும். ஒரு ரூவா கொடுத்து நொய்யரிசி வாங்கிட்டுப்போய்க் கஞ்சி காச்சோணும். மிச்சத்தைச் சுட்டுப் பொயுது சாயறப்பொ சிறு பயலுவ வெள்ளாடற எடத்துக்கு எடுத்திட்டுப் போனு, பிச்சுக்குவாங்க என்று" எண்ணமிட்டாள் எல்லம்மாள். 'விர்'ரென்று குளிர் காற்று வீசியது. எல்லம்மாவின் உயிர் நடுங்கியது.

"அடே, அப்பன்ன மாமா! ரவ டீத்தண்ணி ஊத்தய்யா! வயிறு கிள்ளுது; பாழுங்குளிர் பொறுக்காமெ" என்று கத்தினுள்.

''ரண்டு சோளக் கொண்டைங்களை இப்படிப் போடு, தாரேன், உனக்கு'' என்றான் அப்பனு. நனைந்த துவாலையைப் பிழிந்து கொண்டு எல்லம்மா இரண்டு சோளக் கதிர்களைக் கொண்டுவந்து கொடுத்தாள்.

''ரண்டு கரி தா மாமா! தீ அணைஞ்சிட்டுது'' என்றாள் எல்லி, ''என்னம்மே! போ, போ! ரெட்டியார் காட்டுச் சோளக் கொண்டைங்களையும் என் கரியையும் சேத்து நீ துட்டுச் சம்பாதிச்சிடறே! கரி மரக்கால் அஞ்சணு ஆவுது. வாங்கமுடியாமெ சாவறேன்!'' என்றான் அப்பனு.

''ஐய! என்ன இப்பிடிச் சொல்றியேடா! ஒன்னெ வெட்டிப் போட! ஒன் வாய்க்கி இல்லேன்னு கேட்டப்பொ எல்லாம் பொயெலெ கொடுக்கல்லே நானு? வாறப்பொ ரண்டணுவுக்கு வாங்கியாந்தேன். ஒனக்கே பாதி கொடுத்திட்டேன். மானங் கெட்டவன்!'' என்று சிடு சிடுத்தாள் எல்லி.

''என்னய்யோவ்! நீங்க இப்பிடிச் சண்டை மாட்டிக் கிட்டுக் கெடவுங்க! பஸ் வந்திடிச்சு'' என்றார்கள் ரிக்ஷா வாலாக்கள்.

எல்லம்மா, விடுவிடென்று மேலாக்கை இழுத்துச் செருகிக் கொண்டு இந்தப் பக்கம் வந்தாள். பின்னா லேயே அப்பனுவும் வந்தான். ரிக்ஷாக்காரர்கள் கேலி யாகக் கை கொட்டி விசில் அடித்தார்கள். எல்லம்மா வின் முகம் சிவந்து கன்றியது. அப்பனு அவர்களைப் பழிப்பது போல் ஒரு பார்வை பார்த்து, ''என்னடாது! சம்மனட்டிங்களா!'' என்றான்.

''அதுக்குச் சொல்லல்லே, நீங்க ரண்டு பேரும் இப்பிடிச் சண்டை போட்டுக் காதிங்க! கழுத்துல ஒரு பூவுத்தைக் கட்டிட்டு ஒரு ஓட்டலு தெருவுங்க. எல்லியெ

இட்டிலி போடச் சொல்லு. நீ டீகாச்சு. சரியாப்போவும்'' என்றான் ஒரு ரிக்ஷாக்காரன்.

''ஐயோவ்! சாக்கிரதையாப் பேசு. எங்க சூரையா கேட்டிச் சுன்னா முதுகுத்தோலை உரிச்சிடும்!'' என்று முகத்தை ஒரு முழமாக்கிக்கொண்டு எல்லி சொன்னாள்.

''என்னடி, எல்லி! நல்லாப் பேசிறியே! ஒயைச்சுக் கூழு ஊத்த முடியாதவன், சோறு போடற ஆளை நீயே தேடிக்கிட்டா, அடிப்பானா? எப்பிடி அடிப்பானோ பாத்துடமாட்டேன்! ஒன்னைப்பாடுபடவச்சுத் துன்றதும் இல்லாம, அடிக்கறது கூடவா? கம்மனாட்டித் தடியன்!'' என்று அதிகாரத்தோடு சொன்னான் அப்பனு. தான் ஒரு ராஜாபோலவும் எல்லி தான் கொடுக்கும் மகாராணிப் பட்டத்தைக் காலால் உதைத்துத் தள்ளிவிட்டது போல வும் எல்லியைப் பார்த்தான். எல்லம்மா விருட்டென்று மரத்தடிக்கு வந்து தன் கரியடுப்பண்டைத்தொப்பென்னு உட்கார்ந்தாள். தன் முயற்சி இல்லாமலே மாடிச் சாளரத்தைப் பார்த்தாள். தன்னையே பார்த்துக் கொண் டிருந்த ஜயராம் தென்பட்டான்.

'இன்னக்கி ஐயா சன்னலண்டை குந்தியிருக்காரு. தெனமும் அந்த அம்மா குந்து வாங்க. சின்னமா சில்க்குச் சேலை கட்டிக்குனு தலையை விரிச்சிக்குனு இருப்பாங்க. அவங்க டைவர் வீராசாமி வல்லையாங் காட்டியும். இன்னக்கி ஐயா வெளியே போவல்லே. அவன் வந்தா, ஒரு கொண்டை தான்னு அரைரூவாக் காசு கையிலெ போடுவான். ''எல்லீ! சம்பளம் வந்ததும் ஒனக்கு வாயில் சேலை வாங்கித் தாறேன் எங்க ஐயாவும் அம்மா வும் ஊட்டிக்குப் போறப்போ, ஒன்னெக் காருலெ சினி மாவுக்கு இட்டுக் கிட்டுப் போறேன். அப்போ, நீ வாயில் சேலை கட்டிக்கிட்டு வரோணும்; தெரியுமா? எங்கே, ஒரு

கொண்டேயே இப்பிடிப் போடு," இன்னு சொல்லு வான்.'

குடித்துக் குழிவிழுந்த அவன் கண்களில், எல்லி யோடு காரில் சினிமாவுக்குப் போகும் எண்ணம் ஜீவஒளி போல் பளிச் சென்று மின்னும்.

"ஊட்டி என்னடா, ஊருக்கு எம்பியா" என்பாள் எல்லம்மா.

பெரிய மனுசருங்க, படிச்சவங்க எல்லாம் ஊரை ஊட்டி இம்பாங்க" என்று அவன் விவரமாய்த் தெரிவிப் பான். 'எதோ, இன்னும் பஸ் வல்லெ. அப்படா! நேர மாயிடுச்சி! அவன் ஊத்திய டீத் தண்ணி அப்பொவே செரிச்சுப் போச்சு. வூட்டாண்டை சூரையா முக்காட்டை எடுத்துட்டுப் பசிதாங்காம, குதியாக் குதிப்பான். ஒண் ணுக்கும் உதவாதவன். அவன் மேலே பாசத்தை நான் ஒழிச்சிட்டு வரல்லே!' எல்லிக்குச் சிரிப்பு வந்தது. குளிருக்கு, முழங்காலைச் சுற்றிக் கையைக் கட்டிக் கொண்டு கும்மட்டிக்கருகே வந்து உட்கார்ந்து சிரித்துக் கொண்டாள்.

'அப்பா! ஒரே குளிரு! மழை! கதி கெட்ட பொழப்பு! இதுவரைக்கும் எத்தினி வாட்டி டீயைச் சுட வச்சேனே அத்தினி வாட்டி ஆறி ஜில்லுன்னு போயிடிச்சு. இன்னும் பஸ் வரக் காணோம். வாங்கியாந்த கரியெல் லாம் தீந்து போச்சு. ரிக்ஷாக்காரனுக நாலு கப் வாங்கிக்கினனுக. அதுலெ ரண்டு பேருக்குக் கடன் வியாபாரம். ஒருத்தன் அரையணா வரவு வச்சான். கையிலே இருக்கிறது ஆறு காலணா. ஒரணா பீடியாச்சி யும் குடிக்காட்டி இந்தக் குளிருலே நம்மாலே வேலெ செய்ய முடியாது. வூட்டாண்டை இருக்கற தவட்டம்மா வர்றப்போ சாமந்திப் பூ வாங்கியாரச் சொல்லிச்சு.

அவங்க ஸ்கூலுலெ ஏதோ மீடிங்காம். பொம்மனாட்டியா னாலும் மாசத்துக்கு நாப்பதுருவா சம்பாதிக்கரு. கறுப்பா இருந்தாலும் எப்பவும் வெள்ளைத் துணியே கட்டிகிட்டுச் சிரிச்சிக்கினு இருக்கிரு.''

“என்ன விசேஷம் அப்பாராவ்!” இன்னு அவ கேக்கற பொயு தெல்லாம் என் நெஞ்சுலெ ஷாக் அடிச்ச மாதிரி இருக்கும். ஊஹூம். நான் அப்பிடி நெனைக்கக் கூடாது, என் பொறப்பே தரித்திரம் புடிச்ச பொறப்பு. தவட்டம்மா படிச்ச பொண்ணு. எந்தப் போலீசு ஐயா வானும் கண்ணுலெ ஒத்திக்கிட்டு கல்யாணங்கட்டிக் குவாங்க. நான் இந்தக் கேடுகெட்ட வேலெயிலெ ஒரு நாளக்கி ரண்டுருவா கூட, சம்பாதிக்க முடியலெ. இதை விட லாபமான வேலெ ஒண்ணும் எனக்குத் தெரியல்லெ. வூட்டுலெ கிழவி இத்தினி கஞ்சி காச்சி ஊத்துது. அத னலே சரியாப் போவுது. அது கொட்டாவி விட்டிச்சின்ன என்கதி என்ன ஆவறது? யாரைக் கேட்டாலும் ரண்டு, இல்லாட்டி மூணுதோலா பொன்நகை போட்டாட்டி பொண்ணு தரமாட்டேன்றுங்க. எங்கிருந்து கொண்டா றது?'

யோசித்தவண்ணம், தன்னையுமறியாமல் மாடி ஜன் னலைப் பார்த்தான் அப்பனு. “இன்னக்கி அம்மா அவுங்க இல்லையாங்காட்டியும்! ஐயா குந்தியிருக்காரு, சன்ன லண்டை. அவருக்கென்ன! கொடுத்து வச்ச மகா ராசா. ஆயிரம் ஆயிரமாப் பணம் கையிலே கொடுத்து, நவரத்தினம் கணக்காப் பொண்ணுங்களெ அவங்க காலடியிலே கொண்டு வர்ருங்க. அவரு படிக்கற காலத் துலேயே அவங்க வீட்டைச் சுத்திச் சுத்தி வருவாங்க. ரட்டைப் பின்னலுப் பொண்ணுங்க! ராசாத்திங்க போலே! அதிட்டக்காரரு! அம்மா அவங்களைப் பாத்தா எத்தினி அழகா இருக்காங்க! அவங்க சன்னல்லே குந் தியிருந்தா, சினிமாவோ, கனவோ பாத்தமாதிரி மனசுக்

குத் தோணுது! அவங்களெப்போலெ காருலே சுத்தாட்டிப் போவட்டும். வூட்லே கஞ்சி காச்சி ஊத்தவே கதியில்லாதெ இருக்குது. சீ! போக்கத்த பொறவி! கடவுள் ஏந்தான் பொறக்க வச்சானோ! ச்சு!"

பெஞ்சின் அருகே வந்து தேநீர்த் தூக்கின் அடியிலுள்ள கரியடுப்பைக் கிளறிவிட்டு, மறுபடியும் அர்த்தம் இல்லாமல் சாலையைப் பார்த்துக்கொண்டே உட்கார்ந்தான், அப்பனு.

"உஷ்......அப்பாடா! என்ன இவ்வளவு குளிர்! டெம்பரேச்சர் வந்துவிட்டதா, என்ன? இந்த மழை விடாதுபோல் இருக்கிறது! அதோ, என்ன, உங்களைத் தானே! நீங்கள் இங்கேதான் இருக்கிறீர்களா? இன்னும் ரேடியோ ரூமில் இருக்கிறதாக நினைத்தேன். சற்றே போயியைக் கூப்பிட்டு, வெந்நீரும் டவலும் கொண்டு வரச் சொல்லுங்கள். கொஞ்சம் முழங்காலுக்கு எண்ணெய் தடவி ஒத்தடம் கொடுக்க அன்னம்மாவை மேலே வரச்சொல்லுங்கள். சமையற்காரனிடம் சிறிது ஓவல்ட்டின் கலந்து அனுப்பச் சொல்லுங்கள். இதோ, உங்களைத்தான். அப்பாடா..... ஐயோ! காதில் வாங்கிக் கொள்ளமாட்டீர்களோ. கர்மம்! இன்றைக்கு, ஜன்னலண்டை காவல் காக்கிறீர்களே, ஏன்? மனோரஞ்சனி வருவதாகச் சொன்னாளா, என்ன? நான் வைர் கொடுக்கச் சொல்லுகிறேன், போங்கள்! மகாப்பிரபுவே! உங்களோடு கத்தமுடியாமல் நாக்கு வரண்டு போகிறது! அந்தப் பஸ் வந்து தொலையுமா? என்பது உங்கள் ஆசை. எனக்குத் தெரியாத ராமாயணமா? ஏதாவது சொன்னால் என்னை எள்ளும் கொள்ளும் வெடிக்கப் பார்க்கிறீர்கள். இல்லாவிட்டால் என்ன சொல்லட்டும், சொல்லுங்கள் இயற்கைக் காட்சிகளைப் பார்க்கிறதாக நினைக்

துக்கொள்ளவா? இந்தக் கொட்டும் மழையில் இயற்கைக் காட்சியாவது, மண்ணாங்கட்டியாவது? அந்த நாளில் 'காதலோ காதல்' என்று என்னைச் சுற்றிச் சுற்றி வந்ததால் 'ஊம்' என்றேன். ஆனந்தபுரம் இளவரசன் மூன்று வருஷகாலம் எனக்காகத் தவம் கிடந்தான். இப்பொழுது என்ன சொல்லி என்ன லாபம்? என் தலையில் இப்படி எழுதியபின்!"

ஜயராம் மெதுவாக நகர்ந்தான்.....

சுனந்தை சாளரத்துக்கருகே நாற்காலியை இழுத்துக்கொண்டு உட்கார்ந்தாள். மழைச்சாரல் சிறிது அதிகமாயிற்று. எதிரில், பூவரச மரத்தடியில் எல்லம்மாவை ரிக்ஷாக்காரர்கள் சூழ்ந்துகொண்டார்கள். அப்பனு பீங்கான் கிண்ணத்து 'டீ'யை சாஸரில் ஊற்றிக்கொண்டு லோபியைப்போல் சிறிது சிறிதாக உறிஞ்சிக்கொண்டிருந்தான்.

எல்லம்மா சிரித்துக்கொண்டே சுட்ட சோளக்கொண்டைகளை ரிக்ஷாக்காரர்களுக்குப் பங்கிட்டுவிட்டாள். "ஏ, மாமா! அந்த டீத் தண்ணியை இவங்களுக்கெல்லாம் ஊத்திடறியா! இன்னக்கி பஸ் வர்றதையே காணோம். இருக்க, இருக்க, மழை ஜோரா ஊத்துது" என்றுகுரல் கொடுத்தாள்.

"உனக்கென்னம்மே! தரும தேவதை! ஒன்னைப்போலெ எனக்கும் வெட்டியிலே கெடச்சா நானும் தான தருமம் செய்வேன். இன்னக்கி ராவு வரையிலே இருந்தாலும் சரி! நான் என்னோடெ டீத் தண்ணியைச் சொம்மா ஊத்தமாட்டேன்" என்றான் அப்பனு.

"ஹூம்! அவர்களே மேல்! அவர்களுடைய வாழ்க்கையில் உணவுப் பிரச்சினைக்குப் பின் வேறு பிரச்

சினேயே இரா. நமக்கு உணவுப் பிரச்சினை இல்லை; ஆனால் மற்ற எல்லாமே பிரச்சினைதான். முக்கியமாகக் கணவன் செய்யும் அலட்சியத்தைப் பொறுக்கவே முடிகிறதில்லை. தொலையட்டும். சாகலாம் என்றாலும் முடியாது. நம்மை நடைபிணம் ஆக்கிவிட்டார்கள்.

''இவ்வளவு சுக போகங்களும் என் உள்ளத்துக்கு இன்பத்தையும் அமைதியையும் கொடுக்கவில்லை என்றால், என் மனசில்தான் ஏதோ குறை இருக்கவேண்டும். நான் சொல்லும் பேச்சுக்களையெல்லாம் கேட்டுக்கொண்டு 'கம்'மென்றிருக்கும் அவர், ஏதாவது சொன்னாலும் நன்றாய் இருக்கும். ஒரு தடவையாவது, 'ஏன் இப்படி லொட லொடவென்று கத்துகிறாய்?' என்று கோபித்துக் கொண்டால் என் மனசுக்கு ஆறுதலாய் இருக்குமோ, என்னமோ? இப்படி ஒளி இல்லாமல், பற்றில்லாமல் பார்க்கும் பார்வையை என்னால் தாங்கவே முடியவில்லை. தாம் செய்யும் செயல்களை விடமாட்டார். அப்பொழுதும் அந்த மனிதரிடமிருந்து நான் விரும்புவது என்ன? அலட்சியமும், வெறுப்பும், கருவமுமா?

''என்னமோ! இவர்கள் பகலெல்லாம் உழைத்து வயிற்றுக்காக—'பக, பக'வென்னும் வயிற்றுக்காக—அரை, குறை வாழ்வை நிரப்பிக் கொள்வதற்காக உலகத்தோடு போராடுகிறார்கள். அந்தப் போராட்டத்தில் அலுத்துச் சலித்து, களைத்துப் போய் இரவாகும்போது நித்திரா தேவியின் மடியில் கவலையற்று விழுந்துவிடுகிறார்கள். எனக்கு உடலுழைப்பு இல்லையென்றாலும் உள்ளத்தின் உழைப்பு அதிகமாகிவிட்டது. உடல், உள்ளம் இரண்டுக்குமே அமைதியற்றுப் போய்விடுகிறது. நான் என்றாவது இவர்களைப்போல் வாழ்வேனா? என்னை இந்தப் பாழும் நோய் விடுமா? தன்னையும் மீறி அவள் கண்களில் கண்ணீர் பெருகியது......அதைத்

துடைத்துக்கொள்ளவும் சக்தியிழந்ததுபோல் அவள் உட்கார்ந்திருந்தாள். சுனந்தையின் கன்னங்களில் வெள்ளமாகப் பெருகியோடிய கண்ணீரைப் பார்த்துப் பொறுக்காமல் பூவரச இலைகள் சலசலத்தன.

இலை நுனிகளிலிருந்து மழை நீர் 'கல, கல'வென்று கீழே உதிர்ந்தது.

தமிழாக்கம் :

**எஸ். கே. சீதாதேவி.**

2

# வசந்தம் வந்தால்...

**பாலகும்மி பத்மராஜு.**

காலையில் தூங்கி எழுந்ததும் ரவி தன் அறைக் கதவுகளை மூடிவிடுவான். அப்பொழுது அந்த அறை அவனுடைய உள்ளத்துக்கும் உடலுக்கும் பயிற்சிச் சாலையாகிவிடும்.

அந்த அறையில் பழங்காலத்து கூரை போட்ட கட்டில் ஒன்று இருக்கிறது. அறையின் இருபுறங்களிலும் துளைகள் போன்ற ஜன்னல்கள் இரண்டு உண்டு. அவற்றின் கதவுகள் எப்பொழுதும் மூடப்பெற்றிருக்கும். மேலே, காற்றைவிடச் சத்தம் அதிகமாக வரும் விசிறி

ஒன்று சுற்றிக்கொண்டிருக்கும். கட்டிலுக்கு எதிரில் நிலைக் கண்ணடி. அந்தக் கண்ணடியின் அருகே, கருங் காலி மரத்தால் செய்த, தாத்தா காலத்துப் பீரோ ஒன்று. அதன் பக்கத்தில் சிறு கதவு ஒன்று. அதன் வழியே குனிந்து சென்றால், தண்ணீர்க் குழாய் ஒன்றும், கக்கூஸ் முதலியவையும் உள்ள சிற்றறை ஒன்று. கட்டி லுக்கும் பீரோவுக்கும் நடுவில் பிரதான வாயில் இருந் தது. ரவி தூங்கி விழித்தவுடன் சில மணிநேரம் தவிர, அதன் கதவு திறந்தே இருக்கும். அதுதான் ரவிக்கும் வெளி உலகுக்கும் தொடர்பை உண்டாக்கும் பொருளு மாகும். அது அவனுடைய ஆசைகள், ஏமாற்றங்கள், கனவுகள், அவற்றின் பயன் ஆகியவைகளுக்கு ஏற்பட்ட ஒரே ஒரு வழி. ஏனென்றால், அந்தக் கதவுக்கு எதிரே, ஹாலின் மற்றொரு புறத்தில் மற்றொரு கதவு இருக்கிறது. அதுவும் இது போன்றதே. அதற்குப் பின் மற்றொரு அறை இருக்கிறது—இதே அச்சில். அந்த அறையில் கவிதை இருக்கிறாள். கவிதை அவனுடைய மனைவி.

அந்த அறைக் கதவு அவனுக்குள்ளே வித விதமான உணர்ச்சி வேகத்தையும் கற்பனைகளையும் துளிர்க்கச் செய்யும். சில வேளைகளில் அந்தக் கதவு அவனுக்குச் சொர்க்க வாசல் ஆகும். அவனுடைய சூட்சும உடலில் ஒரு பகுதி அதன் வழியாகச் சென்று, ரோஜா இதழ் களைப் பரப்பிய சின்னஞ்சிறு வழியில் நடந்து, தெய்வப் பெண்கள் அரை நிர்வாணமாக உலவும் அபூர்வமான நந்தவனத்துக்கு மென்மையான காற்றில் மிதந்து போகும். களைத்துப்போகும் வரையில் அங்கே நட மாடும்; ஆனந்தத்தால் மயங்கிவிடும். திரும்பி வரும் நிகழ்ச்சி அவனுக்கு நினைவு இருக்காது. அப்பொழுது அவன் தூங்கியிருப்பான்.

வேறு சில சமயங்களில் அதே கதவு பிளக்க முடி யாத கோட்டைக் கதவாகிவிடும். அவனுடைய தனிமை

யாகிய பிறப்புரிமையைக் காக்கும் கவசமாகும். வெளி உலகத்து உறவுகளும் பொறுப்புகளும் அவனுடைய தனிமையின்மேல் படை எடுக்கும். தாழிட்ட கதவை யாராவது தட்டிஞல் அந்த ஓசை அவனுடைய கோட்டையின் மேல் எதிரிகளின் பீரங்கியின் முழக்கம் ஆகும். படிப்படியாக அவனுடைய கற்பனையில் அந்த அறையைச் சுற்றி ஒரு அகழியும் அதன்பின் தூரத்தில் எதிரிகளின் கூடாரங்களும், யானை, ஒட்டகம் முதலியவைகளும், இன்னும் எவ்வளவோ உருவாகிவிடும். பயங்கரப் போர்க் காட்சிகள் திரைப்படம்போல் தோன்றி மறையும். எல்லாக் காட்சிகளிலும் அவன் ஒண்டியாய் ஆயிரக்கணக்கான வீரர்களை எதிர்ப்பான். ஆனால் அந்தக் காட்சிகளில் வெற்றி எப்பொழுதும் அவனுக்குத் தான். அதனல் காட்சி எவ்வளவு பயங்கரமாக இருந்தாலும் அவன் பயப்படமாட்டான். தீவிரமான உணர்ச்சிப் பெருக்கிஞல் அவன் களைத்து வருவான். அவ்வளவு தான்.

எல்லாவற்றையும்விட, அவனுக்குப் பிடித்தமான கற்பனை ஒன்று இருக்கிறது. அது கிட்டத்தட்ட ஒரு கனவு; திரும்பத் திரும்ப வரும் கனவே. தான் காதலித்த அபூர்வ அழகி ஒருத்தி ஒரு கோட்டையில் இருக்கிருள். அவளுடைய தந்தையான அரக்கன் அந்தக் கோட்டை வாயிலை எப்பொழுதும் காவல் காக்கிருன். ரவி அந்தக் கன்னியைப் பார்க்கிருன். அந்தப் பார்வையில் அவ்விருவருடைய உள்ளங்களும் ஒன்றிவிடுகின்றன. ஆனல் அவர்களுடைய காதல் நிறைவேருமல் தடையாக இருக்கிருன் அந்த அரக்கன். ரவி காத்திருக்கிருன்.

அப்படி இருக்கும்போது ஒருநாள், அரக்கன் தலைகால் தெரியாமல் கள்ளைக் குடித்துவிட்டு இரண்டு யானைகளையும் ஒரு காண்டா மிருகத்தையும் அடித்துத் தின்று

விட்டு, வாயிலுக்கருகே ஒருபுறமாய்க் குறட்டைவிட்டுத் தூங்கிக்கொண்டிருந்தான். ரவி மெதுவாக அந்த வாயில் வழியாக உள்ளே நுழைந்துவிட்டான். பிறகு கோட்டையில் பல வகையான தடைகளை விலக்கி முன்னேறும் காட்சிகள் சில மனசுக்குள்ளே வர முயலும். ஆனால் ரவிக்கு வரப்போகும் நிகழ்ச்சிகளின்மேல் ஆசை அதிகமாகையால் நீர்மேற் குமிழிகள் போல் அவையெல்லாம் தோன்றும்போதே அழிந்துவிடும். அவன் எல்லா எதிர்ப்புக்களையும் தாண்டி அவள் தூங்கும் அறைக்குப் போய்விடுகிறான். ஆனால் அவளை எழுப்பக்கூடாது. அவள் என்னதான் அவனைக் காதலித்தாலும் அவனோடு வெளியேற விரும்பமாட்டாள். அவளுடைய தகப்பன் கொன்றுவிடுவான் என்று பயம். அப்பொழுது அவன் என்ன செய்வான் தெரியுமா? தன் இடுப்பில் செருகி வைத்திருக்கும் சொக்குப்பொடிப் பொட்டணத்தை அவிழ்ப்பான். அது ஏற்கனவே இடுப்பில் செருகிக் கொண்டு வந்ததன்று. அந்தப் பகுதி வரும்போதுதான் அதன் தேவை நினைவுக்கு வரும். ஒவ்வொரு முறையும் அப்படித்தான். சரி! அந்தச் சொக்குப்பொடியை அவள் மேல் தெளிப்பான். அவளை இரு கைகளாலும் எடுத்துக் கொள்வான். மூடியிருக்கும் அவளுடைய கண்களை முத்தமிடுவான். அவனுடைய உடல் தள்ளாடும். அவளுடைய கனத்தால் அன்று. அவளுடைய ஸ்பரிசத்தால். மெதுவாக இந்தப் பக்கம் வருவான். தூங்கும் அரக்கன் அப்பொழுது வாயிலுக்குக் குறுக்கே புரண்டு கிடப்பான். மலைபோன்ற அவனுடைய உடல் வாயிலை ஏறக்குறைய அடைத்துவிடும்.

இதற்குமேல் கனவு நாளுக்கொரு தினுசாக மாறும். என்னதான் மாறினாலும் மாறாதவை இரண்டு. ஒன்று: அந்த வாயில் தனது அறையின் வாயிலாகிவிடும். இரண்டு: கையில் இருக்கும் அழகி தன் மனைவியான

கவிதையாகிவிடுவாள். மூன்றுவதைப்பற்றி நிச்சயமாகச் சொல்ல முடியாவிட்டாலும் அது சில சமயங்களில் ஒரே மாதிரியாக நடக்கும் நிகழ்ச்சி. அந்த அரக்கன்—அவனுடைய மாமனைரான பிரம்மானந்தமாக மாறிவிடுவான். கனவுக்கும் நனவுக்கும் இடையில் ஏற்படும் குழப்ப நிலையில் ரவி, அந்த அரக்கனை பிரம்ம ராட்சஸனாக நினைத்துக்கொள்வதும் உண்டு.

ஆனால், கவிதைக்கும் அவனுக்கும் குறுக்கே நிற்கவில்லை பிரம்மானந்தம். பார்க்கப்போனால் அவ்விருவருக்கும் நடுவில் தடையாயிருப்பவர்களே இல்லை. ரவி தானாகக் கற்பனை செய்துகொண்டதுதான் அது. வேறு வேறு படுக்கை அறையில் படுக்கும் நிபந்தனையை ரவியின் பிடிவாதத்தால் கவிதை ஒப்புக்கொண்டாள்.

ரவிக்கும், வேட்டகத்து மனிதர்களுக்கும்—ஏன்? உலகத்தில் உள்ள எல்லோருக்குமே—என்று வைத்துக் கொள்ளுங்களேன்! வாழ்க்கை, காதல், தாம்பத்தியம் ஆகியவற்றைப் பற்றிக் கொள்கை மாறுபடும். ரவிக்கு வாழ்க்கை ஒரு கற்பனை; மற்றவர்களுக்கு அது வியாபாரம். காதல் ரவிக்கு வாழ்க்கையின் இலட்சியம் என்றால், மற்றவர்களுக்கு அது சாதத்துக்குத் துணையான ஊறுகாய், கறி, கூட்டுப் போன்றது. தாம்பத்தியம் என்பது மற்றவர்களுக்குத் தினசரி விவகாரம். ரவிக்கு மட்டும் அது ஒவ்வொரு கணமும் இன்ப ஊற்றாகப் புத்தம் புதிய தாய், தலைவன், தலைவி இருவருடைய உள்ளங்களை ஐக்கியமாக்கும் புனிதக் கட்டுப்பாடு. கணவன் மனைவி இருவரும் கணந்தோறும் ஒருவர்க்கொருவர் புதுமையாகக் காட்சி அளிக்க வேண்டும்; அதற்காகவே கவிதையை வேறு அறையில் தங்கச் சொன்னான் ரவி. ஆனால், கவிஞனின் மனப்போக்கை அறியாத கவிதை வீண் தர்க்கம் எதற்கென்று சம்மதித்தாள். கணத்துக்குக் கணம் இன்பத்தைச் சாதிக்க வேண்டுமென்று ரவி தன்னால்

இயன்றவரை முயன்றபோது கவிதை இரண்டு, மூன்று முறை கொட்டாவி விட்டதால் அவன் தன் முயற்சியைக் கை விட்டான். விழிப்பில் சாதிக்க இயலாதவற்றையெல்லாம் அவன் தன் கனவில் சாதித்துக்கொள்வான். அதனாலேதான், அவனுடைய கனவுகளில்—இரவிலோ, பகலிலோ, எப்பொழுதானாலும் சரி!—வேறு எந்த அழகியுடன் அவன் காதல் புரியத் தொடங்கினாலும் வாயிலைத் தாண்டி அறையில் காலை வைத்தவுடன் அவள் கவிதையாக மாறிவிடுவாள்.

ரவி கவிதையை மணந்துகொள்வதற்கு முக்கியமான கவர்ச்சி அவளுடைய பெயர்தான்.

பிரம்மானந்தம், தம் ஒரே பெண்ணுக்கு அப்பெயர் வைப்பதற்குக் காரணம் அவருக்குக் கவிதைகளின் மீது உள்ள ஆசை அன்று; கவிஞர்களிடம் அவருக்குத்தன்னை அண்டியவர்களிடம் உள்ளது போன்ற ஒருதலைப் பட்சம் உண்டு; அவருடைய ஆஸ்தானத்தில் ஏழைக்கவிஞர் ஒருவர் இருந்தார். 'குழந்தைக்கு அழகான பெயர் ஏதாவது சொல்லுங்கள்' என்று பிரமானந்தம் அவரைக் கேட்டார். கவிஞர் 'கவிதை' என்று வைக்கச் சொன்னார். சுருக்கமாய் அழகாய் இருக்கிறதென்று பிரம்மானந்தம் ஒப்புக்கொண்டார்.

வாய்ப்பாடுப் புத்தகமாயிருந்தாலும் யாப்பில் அமைத்தால் கவிதையோ என்ற மயக்கத்தைக் கொடுக்கும். கவிதை என்ற பெயர் உள்ள பெண்ணிடம் கவிதை சிறிதாவது இருக்கும் என்று தோன்றும். ரவிக்கு இன்னும் அந்த எண்ணம் போகவில்லை. அவளுடைய உள்ளத்தில் ஒளிந்திருக்கும் சுவைக் கடலை வெளிக் கொணர, ரவி பத்து வருடகாலமாகப் பாடுபடுகிறான். ஆனால் இன்னும் அந்தச் சுவைக்கடல் வடதுருவத்துச் சமுத்திரம்போல் இறுகித்தான் கிடக்கிறது

பிரம்மானந்தம், ரவியை மாப்பிள்ளையாக ஏற்றுக் கொண்டாரென்றால் கவிஞர்களிடம் மட்டும் அன்று; கவியாகப் போகும் அறிகுறிகள் உள்ள இளைஞர் மீதும் சிறிது நல்லெண்ணம் அவருக்கு உண்டென்று கொள்ள வேண்டும். அவர், மாப்பிள்ளையிடம் இரண்டுவிதத் தகுதிகளை எதிர்பார்த்தார். ஒன்று; அவன் அழகனாக இருக்கவேண்டும். இரண்டு அவன் தம் வீட்டோடு தங்கி விடவேண்டும். ஆனால் அவர் ரவியை 'என் வீட்டோடு வந்து இரு' என்று கேட்கவில்லை. ரவிக்கு ''வேட்டகத்து மாப்பிள்ளை'' என்றால் எரிச்சலாக வரும். அந்தப் பெயரை மட்டும் எடுத்து விட்டால், அதற்குச் சம்பந்தப் பட்ட மற்ற விஷயங்கள் எல்லாமே அவனுக்குப் பிடித்தவையே.

ரவி சிறந்த கற்பனைத்திறன் உள்ளவன். கல்லூரியில் படிக்கும் காலத்தில் அவன் நாலைந்து செய்யுட்களை இயற்றினான். அவற்றை எல்லோரும் புகழ்ந்தார்கள். அவற்றின் சிறப்புக்காக மட்டும் அன்று; அவற்றில் அவன் பெரிய கவிஞன் ஆகக்கூடிய அறிகுறிகள் சில தென் பட்டன. வருங்காலத்தில் கவியாக வருவதற்கு முதல் லட்சணமாக அவன் தலைமுடியை மாற்றி அமைத்துக் கொண்டான். முழங்காலுக்குக் கீழே வரும் ஜுப்பா, கச்சம் தரையைப் பெருக்கும் வேட்டி, மேலாக்கைப் போல்நழுவி விழுந்து கொண்டே இருக்கும் அங்கவஸ் தரம் கையில் அழகிய புத்தகம் ஒன்று ஆகியவற்றோடு ஒளிர்ந்தான்.

பிரம்மானந்தம் இந்த இளைஞனைக் கண்டு மோகித்து விட்டார். அவனுடைய கவிதைப்பித்து, மாப்பிள்ளை யாவதற்குரிய மற்றொரு நல்ல தகுதி என்று அவர் நினைத்தார். பொதுவாக, படித்த இளைஞர்கள், ''இதைச் செய்து விடுவோம், அதைச் செய்வோம்; இங்கே போவோம், அங்கே போவோம்'' என்பார்கள்.

இருந்தால், சாதாரணமாக, உபயோகம் உள்ள வேலை எதையும் செய்வேனென்று பிடிவாதம் பிடிக்கமாட்டான். புத்தகங்களை வாங்கி நிரப்பிவிட்டால், ஒரு மூலையில் உட்கார்ந்து படித்துக்கொண்டும் எழுதிக்கொண்டும் இருப்பான். அவ்வளவு தொல்லை இருக்காது.

ரவி, கவிஞனாக முடியாமல் போனது அவனுக்குக் கற்பனைத்திறன் இல்லாததால் அன்று; அவனுடைய கனவுகள் இருக்கும் மட்டும் மிகவும் தெளிவாகவே இருக்கும். ஆனால் அவற்றைச் சொற்களில் அமைக்கும் திறமை மட்டும் அவனுடைய பார்வைக்கெட்டிய தூரத்தில் கண்ணாமூச்சி விளையாடித் தப்பித்துக்கொண்டு ஓடும்.

ரவி, கவிஞன் ஆகாததற்காகக் கவிதையோ, பிரம்மானந்தமோ அவ்வளவாக வருந்தவில்லை. கவிஞனின் லட்சணம் எல்லாம் இருந்து, ஒருகவிதை இயற்றும் திறன் இல்லாவிட்டால் பெரிய ஆபத்து ஒன்றும் இல்லை. உண்மையில் அது இல்லாமல் இருப்பதே சிறிது மேல். கவித்துவம் மனிதனோடு இரண்டறக் கலந்து விட்டால் தவறான விளைவுகள் நேருமென்பது பிரம்மானந்தம் அவர்களின் கொள்கை.

ஆனால் பிரம்மானந்தம் அவர்களுக்கு மட்டும் அன்று; அவர், அவருடைய மனைவி, கவிதை ஆகிய எல்லோருக்கும் மாப்பிள்ளை என்றால் தீராத ஒரு குறை இருந்து வந்தது. அவன் வேட்டகத்துக்கு வந்து பத்து வருடங்கள் சென்றும் அவனால் ஒரு குழந்தைக்கேனும் தந்தையாக முடியவில்லை. இதை ரவியும் நன்றாய் அறிவான். ஆனால் இந்தக் குற்றத்தை நேருக்கு நேராக அவன்மேல் யாரும் சுமத்த முடியாது. அதனால் அவன் அதற்குக் காரணம் சொல்லும் சந்தர்ப்பம் வராது. மனத்துக்குள்ளேயே பல முறை அவன் இவ்விஷயம் குறித்து எல்லோரிடமும் விவாதம் செய்திருக்கிறான். ஒவ்வொரு

முறை ஒவ்வொரு சித்தாந்தத்தை அடிப்படையாகக் காட்டுவான்.

பார்க்கப்போனல் குழந்தைகளைப் பெறுவது மிருகத் தன்மை என்றும் காதலுக்குக் காதலே கடைசி இலக்காக இருக்கவேண்டுமே தவிர, அது குழந்தைகளைப் பெறும் லௌகிக லாபத்துக்குக் காரணமாக இருக்கக் கூடாதென்றும் ஒரு சித்தாந்தத்தைச் சொல்லுவான். தன்னிடம் குறை எதுவுமே இல்லை; கவிதையிடம் தான் ஏதோ குறை இறுக்கிறது என்பது இரண்டாவது முடிபு. எது எப்படியிருந்தாலும் மனத்துக்குள் எதிரிகளை வென்று விட்டாலும் மனத்தின் ஒரு மூலையில் தோல்வி தன்னுடையதே என்பது அவனுக்குத் தெரியும். அதனுலேயே, பிரம்மானந்தம், அவருடைய மனைவி ஆகியோரிடம் அவனுக்கு மறைவான பகை இருந்து கொண்டிருந்தது. அதனுல் அதிகமாக, அவனுடைய கற்பனை வாழ்க்கையில் அவர்கள் அரக்கர்களாகி விடுவார்கள்.

அவன் தூங்கியெழுந்து காலைக் கடன்களை முடித்துக் கொண்டபின், கீழேயிருந்து காலை உணவுக்கு அழைப்பு வருவதற்குள் அவன் தன் அறைக்கதவை மூடிவிட்டுப் பல அவதாரங்கள் எடுத்துக்கொண்டிருப்பான். அந்த ஒரு மணி நேரமும் அவன் நிறைவு பெற்றவன். மற்றொருவருடைய தொடர்பு அவனுக்கு வேண்டாம். அவனுக்கு விருப்பமான வேடத்தை அவன் அணியலாம். முதலில் அவன் தன் சுற்றுவேட்டியைக் களைந்து விட்டுக் கண்ணுடியின் முன் நிற்பான். தன் உருவைப் பார்த்துக்கொண்டு, அன்றைய அவதாரத்தை நிச்சயித்துக் கொள்வான். அவன் உடைகளை அணியும் முறையில் அன்றைய அவதாரம் புலப்பட்டுவிடும். உடை மாருவிட்டாலும் அவற்றை அணியும் முறையில் அவன் மனநிலை உறுதிப்படும்.

உடை அணிதலைக் கீழேயிருந்து முறையாகத் தொடங்கின அன்றைக்கு அவன் ரவீந்திரகவி யாவான். முதலில் நியாயமாக அரைக்கால் சட்டையில் தொடங்கித் தலை வாரிக்கொள்வதில் முடிப்பான். மற்றொருநாள் தலை வாரிக் கொள்வதில் தொடங்குவான். அன்றைக்கு அவன் புரட்சிக்காரன், அல்லூரி சீதாராம ராஜு, சுபாஷ் சந்திர போஸ் எல்லோரும் கலந்த ஒரு வடிவம். மற்றொரு நாள் ஒரு பனியனை மட்டும் முதலில் அணிவான். மேலே கலைந்த தலை, கீழே ரோமங்களுடன் கூடிய கால் ஆகிய எல்லாம் மகிழ்ச்சியுடன் கூடிய அராஜகத்தின் சின்னங் கள். நீதி, நியமம், ஆசாரம், விவகாரம், மரபு எல்லா வற்றையும் பானைபோல் உடைத்து நொறுக்கி மனம் போன போக்கில் திரியும் உற்சாகமே உருவான ரௌடி யாக அன்று மாறிவிடுவான். அந்த உருவில் கோபால கிருஷ்ணனும் 'டான் யூ ஆன்' போன்ற பாரத்திரங்களும் சேர்ந்திருக்கும்.

அன்று அவன் அந்த வேஷத்தைப் போட்டுக் கொண் டான். கவிதை, கதவைத் தட்டிப் பலகாரம் தயாராய் இருக்கிறதென்று சொன்னாள்.

"ஹஹ்ஹா! இன்று என் குஷியைப் பார். டைனிங் டேபிள் எல்லாம் தாறுமாறாகப் போகின்றன. கிண்ணங் களை விழுங்கிவிட்டுக் காப்பியை வைத்துவிடுவேன். மேஜையின்மேல் உட்கார்ந்து கொண்டு டிபனை நாற்காலி யில் வைத்துக் கொள்வேன்" என்பன போன்ற சொற் களைத் தனக்குள்ளேயே சொல்லிக்கொண்டு, கவிதை யிடம் "வருகிறேன்" என்று மட்டும் சொன்னான். பிறகு 'எதற்கும் நல்லது' என்று லேசாகத் தலையை வாரிக் கொண்டான்.

பலகாரத்தைச் சாப்பிட வேண்டிய முறைப்படிதான் சாப்பிட்டான். முதலில் உப்புமா, பிறகு இட்டலி அப்

புறம் காப்பி. பொறுப்பற்ற தன்மையைக் கொஞ்சமா வது காண்பிக்க வேண்டுமென்று டிபனுக்குப்பின் தண் ணீர் குடிக்க வில்லை.

அதற்குப்பின் தினசரிவேலை, கிளப்புக்குப்போய்ச் சீட்டாடுவது, சீட்டாட்டத்தில் மட்டும், அன்று அவன் தன் உள்ளத்திலுள்ள உற்சாகத்தைச் சிறிது காண் பித்துக் கொண்டான். அலட்சியமாக ஆடியதாலோ என்னமோ, அவன் வெற்றிபெறத் தொடங்கினான்.

மத்தியானப் பொழுதுக்குச் சாப்பிடப் போக வேண் டும். ஆனால் மற்ற நண்பர்கள் இருக்கச் சொல்லிப் பிடி வாதம் பிடித்தார்கள். கல்கத்தாவிலிருந்து ஒரு நண்பன் வந்திருந்தான். அவன் திரும்பிப்போய்விடுவான். அதனால் கிளப்பிலேயே சாப்பிட்டுவிட்டு மாலை வரையில் சீட்டாட வேண்டும் என்றார்கள் நண்பர்கள். ரவி சரியென்று ஒப்புக் கொண்டான். அவ்வளவு பணத்தை ஜெயித்து விட்டு, வீட்டுக்குப் போகிறேனென்றால் அவனை மற்றவர்கள் போக விடுவார்களா?

மற்ற நண்பர்கள் "சாப்பாட்டுக்கு வீட்டுக்கு வரப் போவதில்லை" என்று சொல்லி அனுப்பச் சொன்னார்கள். ஆனால், ரவி தன் மனத்துள் பொங்கிவரும் பொறுப்பற்ற உணர்ச்சியின் சின்னமாக அதை மறுத்தான்.

சாப்பாடு ஒரு நண்பனுடைய வீட்டிலிருந்து வந்தது. சிறிது பாயசமும் புளியோதரையும் கூட இருந்தன. முதலில் கிண்ணங்களில் பாயசத்தை ஊற்றி எல்லோருக் கும் கொடுத்தார்கள் அதைக் குடித்தால்தான் சாப் பாடு என்றார்கள். எல்லோரும் பாயசம் சாப்பிட்டார் கள். ரவியும் சாப்பிட்டான்.

சாப்பிடும்போது, ரவியின் காதில் இன்னதென்று சொல்ல முடியாத பயங்கர ஓசை ஒன்று கேட்கத் தொடங் கியது. படிப்படியாக ஒரு சோற்றுப் பருக்கை ஒரு

பனங்காயின் அளவாய் மாறியது. கறித்துண்டுகள் குட்டிமலைகளாயின. புளியோதரையில் கிடந்த மிளகாய்கள்' 'கல, கல' வென்று சிரித்தன. "நிறுத்துங்கள்" என்றன ரவியின் விரல்கள். அவனுக்கும் சாதத்துக்கும் போர் தொடங்கியது. அதில் அவனுக்கே வெற்றி!

கல்கத்தா நண்பன் "பங்கி, பங்கி" என்பது ரவியின் காதில் குழப்பத்துடன் விழுந்தது. அவனுக்கு இவையெல்லாம் கனவாகத் தோன்றின. ஆனால் அவன் வழக்கமாகக் காணும் கனவுபோல் இல்லை. அவை அவன் விருப்பப்படி மாறும். இந்தக் கனவு அவன் வசத்தில் இல்லை. அவனுடைய டைரக்ஷன் இல்லாமலேயே இது நீண்டு கொண்டிருந்தது. ஆனால் இதை நிறுத்த வேண்டுமென்ற ஆத்திரமும் அவனுக்கு இல்லை. அதோடு அடித்துக் கொண்டுபோகத்தான் அவனால் முடிந்தது. திரும்பவும் சீட்டாட்டம் தொடங்கியது.

வாழ்க்கையே ஒரு சூதாட்டம். அதில் வெற்றி பெற்றால் எகிறிக்குதித்து, தோல்விபெற்றால் திகிலடைபவர்கள் கீழ்த்தரமான மனிதர்கள். சூதாடுவதுதான் முக்கியம்; சூது ஓர் ஆவேசந்தான். அதில் ஜெயித்தாலும் தோற்றாலும் மகிழ்வதே தீரனுக்கு இயற்கையாகும். மற்றவர்களுக்குச் சூது திருட்டுத்தனமான சேற்றுக் குட்டை. வர, வர, அதில் அவர்கள் முழுகியே போய் விடுவார்கள். ரவிக்கு மட்டும் அது ஒரு தாமரைக் குளம். அதில் அவன் தாமரையிலைத் தண்ணீர்.

சீட்டுக்கள் தாமரை இலைகளைப் போலவும் சிவந்த குறிப்புக்கள் தாமரை மொட்டுக்களைப் போலவும் ரவிக்குத் தோன்றின. ரூபாய் நோட்டுக்கள் தினசரிப் பத்திரிகைகளாகத் தோன்றின.

ஆட்டம் முடியும் போது ரவி நூறுரூபாய் கடன் பட்டிருந்தான். வீட்டுக்குத் திரும்பி வந்தான். ஹாலில்

பிரம்மானந்தம் இரவுச் சாப்பாட்டை முடித்துக்கொண்டு வெற்றிலை பாக்குப் போட்டுக் கொண்டிருந்தார்.

"எங்கே போயிருந்தாய் அப்பா?" என்று கேட்ட அவர் குரல் இடி முழக்கம்போல் பத்துத்திக்கிலும் எதிரொலித்தது. "என் இஷ்டம்! நான் எங்கேயாகிலும் போவேன். நீ யார் கேட்பதற்கு?" என்ற பதில் அவன் மனதுக்குள்ளேயே எதிரொலித்தது. கோயில் கருவறையில் சொல்லிய மந்திரம் போல், "கிளப்புக்கு" என்ற தெளிவற்ற சொல் ஒன்றுதான் பிரம்மானந்தம் அவர்களின் காதில் கேட்டது.

அவன் இருப்பது அந்த வீட்டினுள் அன்று; அந்த வீட்டின் பின்புறத் தோட்டத்தில் உள்ள இரண்டு அறைகள் உள்ள மாடிவீடு. கொல்லை வாயிலுக்கெதிரில் துளசி மாடம் விந்தியமலைபோல் அவனைத் தடுத்தது. ஆனால் அகஸ்திய மகாமுனிவரைப் போல் அவன் அதைத் தாண்டித் தன் இருப்பிடம் போய்ச் சேர்ந்தான்.

அவன் மாடிப் படி ஏறும்போது கடியாரம் அவன் வரவைக் குறித்து எச்சரிக்கும் ஜயபேரிகை போல், ஒன்பது அடித்தது. மாடியின் மேல், வேலையற்ற வேளையில் ஹிந்தி வாத்தியார் கவிதைக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தார். அவர்கள் சம்பாஷணையின் நடுவில் சந்தர்ப்ப வசமாக அவர் சிரித்தார்.

ரவிக்கு அந்தச் சிரிப்பு, கனவில் வரும் அரக்கனுடைய அட்டகாசச் சிரிப்பாக ஒலித்தது. "குடிக்கத் தண்ணீர்!" என்று அவன் அனுவசியமாகத் தொண்டையைக் கிழித்துக் கொண்டு கத்தினான். கவிதை, சிறிது எட்ட உட்கார்ந்திருந்த வேலையாளிடம், "ஐயாவுக்குத் தண்ணீர் கொண்டு வாடா!" என்றாள். "ஆ!" என்று தன்னையும் அறியாமல் பதறினான் ரவி. தன் அறைக்குள் போய் விட்டான். கவிதைக்கு அவனுடைய போக்குச்

சிறிது விபரீதமாகக் காணப் பட்டிருக்கவேண்டும்; அவள் அவனைத் தொடர்ந்து அறைக்குள் சென்றாள்.

அதன் பின் நடந்த நிகழ்ச்சிகள் ரவிக்கு அவ்வளவாக நினைவில் இல்லை. அவள் உள்ளே வந்தவுடன் அவன் கதவைக் காலால் உதைத்து மூடினான். அவளை அப்படியே கனவில் செய்வது போல் இரண்டு கைகளிலும் தூக்கிக் கொண்டான். கவிதை துணுக்குற்றாலும், உரக்கப் பேசினால் வெளியே இருக்கும் ஹிந்தி வாத்தியாருக்குக் கேட்டுவிடும் என்பதால், "என்ன இது, உங்களுக்குப் பைத்தியமா?" என்று மெதுவாகச் சொன்னாள். அதற்குப் பின் அந்தச் சுமையுடன் கட்டிலின் பக்கமாகப் போய் விழுந்ததுதான் ரவிக்குத் தெரியும். அவன் தன் லட்சியத்தைச் சாதித்தானா, இல்லையா என்பது தெளிவாக நினைவில்லை.

மூடியிருந்த கதவு சிறிது திறந்து கொண்டது. அந்தச் சந்தின்வழியே அரைகுறையாகத் தெரிந்த காட்சியைக் கண்டு ஹிந்தி வாத்தியார் இரண்டு முறை எச்சிலைக் கூட்டி விழுங்கினார். குடி தண்ணீர் கொண்டுவந்த வேலைக்காரனைக் கையால் ஜாடைகாட்டித் தடுத்துவிட்டார். அந்தத் தண்ணீரை வாங்கித் தாமே குடித்தார். வேலைக்காரனைத் தன்னுடன் அழைத்து வந்து கீழே இறக்கி விட்டார்.

பிறகு சில நாட்களில் கவிதைக்கு மாதவிடாய்க் கெடு தவறியதென்ற செய்தி கேட்டு, பிரம்மானந்தமும் அவர் மனைவியும் மிக மகிழ்ந்தார்கள். மாப்பிள்ளையிடம் அவர்களுக்கு அளவிட முடியாத மதிப்பு வளர்ந்தது.

தமிழாக்கம் :

**எஸ். கே. சீதாதேவி**

3

# இரண்டு பிணங்கள்

**ராவி. கொண்டலராவ்**

**கோ**ழி கூவும்போதே விழித்தெழுந்த ரங்கையா, தன் கத்தரித் தோட்டத்துக்கு நீர் பாய்ச்சினான். களைத்துப்போன உடம்பை ஆற்றில் முழுக்கவேண்டுமென்று ஆற்றங்கரைப்பக்கமாக நடந்தான். போகும்போது, வழியில் இருந்த பாழுங் கிணற்றைத் தன்னையும் அறியாமல் ஒருமுறை எட்டிப்பார்த்தான். திடுக்கிட்டுத் தலையை இழுத்துக்கொண்டு... கண்ணை அகலத் திறந்து பார்த்துவிட்டுக் கூக்குரலிட்டான். ரங்கையாவுக்கு நினைவு தவறிவிடும் போல் ஆய்விட்டது. தான் காண்பது கனவா, நனவா என்று மயங்கி, மூச்சையும் உதடுகளையும்

இறுக்கி மற்ெறாரு முறை கிணற்றை எட்டிப் பார்த்தான். இந்தத் தடவை அவன் முழுத் தெளிவுடன் பார்த்தான். கிணற்று நீரில் மிதந்த வண்ணம் இரண்டு பிணங்கள் காணப்பட்டன.

ரங்கையாவின் உடம்பு கொஞ்சம் அதிகமாக வேர்த்தது. ஏதோ சொல்ல நினைத்தான். உரக்கக் கத்த முயன்றான். உதடுகள் திறந்து கொண்டனவே தவிர, நெஞ்சிலிருந்து ஓசை வெளிப்படவில்லை. ரங்கையாவின் உடம்பு கட்டைபோல் மரத்துக் கொண்டது. சமாளித்துக்கொண்டு, பின்னால் திரும்பிவந்து அங்கும் இங்கும் பார்த்தான். கண்ணுக்கெட்டிய வரையில் யாரையும் காணோம். சில...பர்லாங்குகளுக்கப்புறம் அவனுடைய ஊர்மட்டும் தெரிந்தது. ரங்கையா செய்வதறியாதவன்போல், தன்னை யாரோ துரத்துவதுபோல் ஊரை நோக்கி ஓடத் தொடங்கினான்; மூச்சு வாங்கியது.

''தேகப்பயிற்சி தொடங்கியிருக்கிறாயா என்ன, ரங்கையா?" என்று, பாதையின் அருகில் நின்று சிரித்துக் கொண்டே கேட்டான் கர்ணத்தின் மகன் வேணு. அவன் குரலைக்கேட்டு, ரங்கையா காலுக்குக் கட்டு போட்டது போல் 'டக்' கென்று நின்றான்.

''கோரம், சின்னையா! கோரம்'' என்றான் ரங்கையா, கிணற்றைப் பார்த்தபடியே.

வேணு, 'என்ன செய்தி?' என்று கேட்கும் முன்பே ரங்கையா சொல்லத் தொடங்கினான்.

''நேரத்தோடேயே எழுந்திருச்சு யார் மொவத்திலெ முழிச்சேனோ! ராம, ராம! கெணத்தடியிலெ போயி எட்டிப் பார்ப்பேனோ! ரெண்டு பொணங்க சாமி! ரெண்டு!'' என்றான் தடுமாற்றத்துடன்.

வேணுக்கு ஒன்றும் புரியவில்லை. "என்ன, ரங்கையா? பொணங்களா? கெணத்துலேயா?" என்று ஓடத் தொடங்கினான். அவன் பின்னாலேயே ரங்கையாவும் ஓடினான். இருவரும் கிணற்றங்கரையில் நின்று உள்ளே எட்டிப் பார்த்தார்கள். இரண்டு பிணங்கள் அசையாமல் ஒன்றுடன் ஒன்று உரசிய வண்ணம் அழுக்குத் தண்ணீரில் மிதந்தன.

ஒருமணி நேரத்துக்குள் அந்தச் செய்தி ஊரெங்கும் பரவிவிட்டது. "ஊருக்கு வெளியே இருக்கும் பாழுங் கிணற்றில் இரண்டு பிணங்கள்" என்ற செய்தியைத் தவிர, ஊரில் வேறு பேச்சே இல்லை. ஊரில் பாதி கிணற்றுக்கருகே வந்துவிட்டது. பெண்கள், ஆண்கள், கிழவர்கள் எல்லோரும் கூடி ஒருமுறை கிணற்றை எட்டிப் பார்த்துவிட்டு, "ராம, ராமா!" என்றோ, "நாராயணா!" என்றோ சொல்லிக்கொண்டிருந்தார்கள்.

"என்ன அதிசயமடி!" என்று வெங்கம்மா அக்கம்மா விடம் சொன்னாள்.

"போங்காலந்தான் ... ஐயோ!" என்று அக்கம்மா கன்னத்தில் கை வைத்தாள்.

"கலியுகம்!" என்று நரசிம்மலு நாராயணனிடம் சொன்னான்.

"யாருக்கு இந்தப் புத்தி தோன்றியிருக்கும்...!" என்றான் நாராயணன்.

"புருஷன் மனைவி இரண்டுபேரையும் கழுத்தை நெரித்துக் கிணற்றில் எறிந்திருக்கிறான். அவனுக்கு எப்படித்தான் மனம் வந்ததோ?" என்று நினைத்தாள் சுப்பம்மாள்.

வெங்கடேசுவர்லு, துப்பறியும் இலக்கியம் தனக்குக் கொடுத்த அறிவு காரணமாக, "கொலையா, தற் கொலையா?" என்று ஆராய்ந்தான்.

காதல் கதைகளையே படிக்கும் சுப்பாராவ், "இது ஏதோ காதலில் ஏமாற்றம்!" என்று புலம்பினான்.

பாழும் கிணற்றில் இரண்டு பிணங்கள் மிதந்த செய்தி அக்கம்பக்கத்து ஊர்களுக்கும் பரவியது. எள் போட்டால் விழாத அளவுக்குக் கூட்டம் கூடிவிட்டது. அவ்வளவு பரபரப்பு, ஆர்ப்பாட்டம், பெரிய சத்தம், கூச்சல் எல்லாம் சேர்ந்து கொண்டன.

ஊரில் உள்ள அத்தனை மக்களும் கூடியிருந்தார்களே தவிர, அந்தப் பிணங்களின் முகம் சரியாகத் தெரியாத தால் யாருக்கும் அவற்றின் அடையாளம் தெரியவில்லை. 'யாராய் இருக்கும்? ..யாராய் இருக்கும்...!' என்று யோசித்தார்கள். யாரும் அங்கே அழுதுகொண்டு வராததால் 'இந்த ஊர்க்காரர்கள் அல்லவோ என்னவோ?' என்று யாரோ சொன்னார்கள். "திக்கற்றவர்கள் போல் இருக்கிறது" என்று ஒருவன் சொன்னான். "பட்டினிச் சாவு" என்றான் மற்றொருவன்.

முனிசீப், கணக்கப்பிள்ளை, போலீசார் ஆகியோர் வந்தார்கள். கூட்டத்தைத் துரத்தியடித்துக் கட்டுப் படுத்தினார்கள். இரண்டு பிணங்களையும் வெளியே எடுக்கச் செய்தார்கள். அவற்றுள் ஒன்று ஆண்பிள்ளை யின் பிணம். இளம் வயது தான். இருபத்தைந்து வயது இருக்கலாம். கால்சட்டையும், சட்டையும் அணிந்திருந் தான். மற்றொன்று பெண். புடவை, ரவிக்கையும் கையில் இரண்டொரு வளையல்களும் இருந்தன. வயது இருபதுகூட இருக்காது.

கணக்கப்பிள்ளையின் மகன், உடனே ஆணின் பிணத்தை அடையாளம் கண்டுபிடித்து விட்டான். அது ஆனந்தராவ் என்னும் இளைஞனுடையது. ஆனந்த ராவ் கணக்கப்பிள்ளையின் மகனை வேணுவுக்குத் தெரியும். இன்னும் யாரோ ஒருவர் அந்தப் பெண்ணின்

சடலத்தை அடையாளம் கண்டுபிடித்தார். அவருடைய வீட்டுக்கு அடுத்த வீட்டில் இருக்கும் நாகபூஷணத்தின் மனைவி லஷ்மி...சிறிது நேரத்தில் அந்தப் பிணங்கள் இரண்டும் யாருடையவை என்பது ஊருக்கெல்லாம் தெரிந்துவிட்டது.

போலீசார், சடலங்கள் இரண்டையும் பஞ்சாயத்துக்கு அனுப்பினர்கள். பிணங்களின்மேல் கத்திக்குத்தாவது வேறுவிதமான அடிகளின் சின்னமாவது இல்லை. கழுத்தை நெரித்துக் கிணற்றில் எறிந்திருப்பதாக ஊகிக்கவும் இடம் தரவில்லை. முதல்நாள் இரவு பன்னிரண்டு, ஒருமணிக்கு இடையில் அந்தச் சாவுகள் நேர்ந்திருக்கும் என்றும் தற்கொலையாய் இருக்கலாம் என்றும் பஞ்சாயத்தார் முடிவு செய்தார்கள். ஆனந்தராவின் ஜேபிகளைச் சோதனை போட்டதில் மிக மட்டரகமான சிகரெட்பெட்டி, ஒரு நெருப்புப்பெட்டி, கொஞ்சம் சில்லறை ஆகியவை கிடைத்தன. ரவிக்கை, வளையல்கள், தலையில் இரண்டு பூக்கள் இவற்றைத் தவிர, லட்சுமியிடம் வேறு பொருள்கள் கிடைக்கவில்லை.

பிணங்களை அவற்றின் சுற்றத்தாரிடம் ஒப்பிக்கப் பார்த்தார்கள் போலீசார். யாராவது அழுதுகொண்டு வருவார்கள் என்று வெகுநேரம் எதிர்பார்த்துக் காத்திருந்தார்கள். எத்தனை நேரமாகியும் யாரும் வரவில்லை. ஆனந்தராவைப் பற்றி வேணுவிடம் பல கேள்விகள் போட்டார் சப் இன்ஸ்பெக்டர்.

''ஆனந்தராவுக்கும் எனக்கும் அப்படி யொன்றும் சிநேகம் அதிகம் இல்லை. ஆனல் நன்ருகத் தெரியும். சாதாரணமாக வாசக சாலையில் சந்திப்போம். அவன் ஒண்டியாகத்தான் இங்கே இருந்தான். ஏதோ ஓர் ஆபீசில் வேலை. நான் எப்பொழுதும் அவன் வீட்டுக்குப் போனதில்லை. ஆனல் பெரிய சாலைக்குக் குறுக்கே

போகும் ரங்கநாதம் தெருவில் சின்ன அறை ஒன்றில் இருப்பதாக அவன் என்னிடம் சொல்லியிருக்கிறான். ஓட்டலில் சாப்பாடு. இருபத்தைந்துவயது இருக்கும். ஆசாமி மிக நல்லவன். முன்னேற்றக் கொள்கைகள் உள்ளவன். ஓயாமல் சிகரெட் பிடிப்பான். எப்பொழுதும் புத்தகங்களைப் படித்துக் கொண்டிருப்பான். சீட்டாட்டம், கேரம் போன்ற எந்த ஆட்டத்துக்கும் வருந்தி அழைத்தாலும் வரமாட்டான். தனக்குக் கல்யாணம் ஆகவில்லை. தாய் இருக்கிறாள், தகப்பனார் இல்லை என்றெல்லாம் சொல்லியிருக்கிறான். தாயார் எங்கேயோ தன் அண்ணாவிடம் இருக்கிறாளாம். இதற்குமேல் எனக்கு ஒன்றும் தெரியாது'' என்றான் வேணு.

''ஆனந்தராவ் உங்களிடம் இந்தப் பெண்ணைப் பற்றி ஒருபொழுதும் பிரஸ்தாபித்ததே இல்லையா?'' என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

''அவனைக் கல்யாணம் செய்துகொள்ளும்படி வற்புறுத்தி அவனுடைய தாயார் கடிதம் எழுதியிருந்தால் அப்பொழுது இவனுடைய அபிப்பிராயம் என்ன என்பது பற்றி உங்களுக்கு ஏதாவது தெரியுமா?''

''நானே கல்யாணத்தைப்பற்றிக் கேட்டிருக்கிறேன். அவன் சிரித்து மழுப்பிவிடுவான்.''

''கல்யாணம் செய்துகொள்ள வேண்டுமென்றோ, வேண்டாம் என்றோ உங்களிடம் சொல்லவில்லை, அப்படித்தானே!''

''ஆம்; சொல்லவில்லை.''

''இந்தப் பெண் யார் என்று உங்களுக்குத் தெரியுமா?''

''எனக்குத் தெரியாது. நான் எப்பொழுதும் பார்த்ததே இல்லை. இப்பொழுது கேள்விப்பட்டபின் இன்ன

தெரு என்று ஊகிக்க முடிகிறது. அந்தத் தெருவில் ஒரொரு சமயம் ஆனந்தராவைப் பார்த்திருக்கிறேன்." என்றான் வேணு.

"ஆகா!" என்ற இன்ஸ்பெக்டர், "இந்தக் கிணற்றில் முதல் முதலாகப் பிணங்களைப் பார்த்தவர் நீங்கள் தானே?" என்றார்.

"இல்லை; முதலில் ரங்கையா பார்த்தான். அவன் என்னிடம் சொன்னதால் நானும் பார்த்தேன்."

இன்ஸ்பெக்டர் ரங்கையனைச் சில கேள்விகள் கேட்டார்.

காலையில் தான் பிணங்களைப் பார்க்க நேர்ந்ததையும், தான் வேணுவுக்குக் காண்பித்தையும் நடந்தது நடந்தபடியே சொன்னான் ரங்கையா.

போலீசார் ஆனந்த ராவின் அறையைச் சோதித்தார்கள். தற்கொலை செய்துகொள்ளப் போவதாக எழுதி வைத்த சீட்டுக் கீட்டு ஒன்றும் கிடைக்கவில்லை. சிறிய அறை. அறையில் பாய் ஒன்று, ஒரு சிறிய பெட்டி, சில புத்தகங்கள், காகிதங்கள் இவை தவிரச் சொல்லும்படி வேறு பொருள்கள் ஒன்றும் இல்லை. கடிதங்கள் சில கிடைத்தன. ஆனால் லட்சுமி எழுதியதாக ஒரு கடிதமும் கிடைக்கவில்லை. அவை சாதாரண நண்பர்களும் அவன் கல்யாணத்தைப் பற்றி அவனுடைய தாயும் எழுதியவையே.

இந்தச் செய்தியை அவனுடைய தாய்க்குத் தெரிவிக்க விரும்பிப் போலீசார் அவளுடைய முகவரியைத் தேடினார்கள். கிடைக்கவில்லை. கார்டின் தலைப்பில் ஊரின் பெயர் மட்டும் எழுதப்பெற்றிருந்தது. ஆனந்த ராவின் ஆபீசில் அவனுடன் வேலை செய்யும் குமாஸ்தாக்களிடமும் அவனுடைய தாயாரின் முகவரியைப் பற்றியும் மற்ற விஷயங்களைப் பற்றியும் விசாரித்தார்கள். தாயார

ரின் முகவரி தங்களுக்குத் தெரியாதென்று அவர்கள் சொன்னார்கள். மற்ற விஷயங்கள், வேணு சொல்லியது போலவே சொன்னார்கள். ஆனந்த ராவ், தனக்கு ஒரு காதலி இருக்கிறாள் என்று சொன்னதாகவும் ஆனால் இன்னார் என்று சொல்லவில்லை என்றும் ஒரு நண்பன் சொன்னான்.

லட்சுமியைப் பற்றி விசாரித்ததில், அவளுடைய கணவனை நாகபூஷணம் நாலு நாட்களாக ஊரில் இல்லை என்று தெரிந்தது. லட்சுமியின் அடுத்த வீட்டுக்கார ரான சூரியநாராயணாவும் அவருடைய மனைவியும் இதைச் சொன்னார்கள்.

"நாகபூஷணம் எங்கள் வீட்டுக்கு அருகே இருந்தா லும் அவனுடன் எனக்கு அதிகமாக நட்பு ஏற்படவில்லை. நானே அதிகமாகப் பழகமாட்டேன் என்று வைத்துக் கொள்ளுங்களேன் .. ..அவன் போக்கே தனி!" என்று சூரியநாராயணா நீட்டி முழக்கினான்.

"அது என்ன போக்கு?" என்று கேட்டார் இன்ஸ் பெக்டர்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. அதாவது மனுஷனிடம் 'கல, கல'வென்று பழகும் தன்மையும் நல்ல குணமும் இல்லை. நினைத்தபோது வீட்டுக்கு வருவான். பெண் டாட்டியிடம் சண்டையிடுவான்; திட்டுவான்......"

"அவன் வேலை?"

"தற்சமயம் வேலை ஒன்றும் இல்லை. ஒரு மாத கால மாகச் சும்மாத்தான் இருப்பதாகத் தோன்றுகிறது. காலா காலத்தில் வீட்டுக்கு வருவதில்லை; போவதில்லை. முன்பு, ஏதோ மில்லில் குமாஸ்தாவாய் இருந்தான்."

"லட்சுமி எப்படிப்பட்ட பெண்?" என்றார் இன்ஸ் பெக்டர்.

"லட்சுமி தங்கமான பொண்ணு. என்னிடம் சலுகையுடன் பேசுவாள்; 'சித்தி!' என்று முறை வைத்து அழைப்பாள். குழந்தை மாதிரி நடந்துகொள்வாள். அறுபது நாழியும் வீட்டுப்பாடே சரியாய் இருக்கும் அவளுக்கு! பாவம்! அவளுடைய புருஷனிடம் அவளுக்கு இருந்த பயம் கொஞ்ச நஞ்சம் அன்று!" என்றாள் சூரியநாராயணாவின் மனைவி.

"நாகபூஷணம் எங்கே போனான் என்பது தெரியாதா?" என்று கேட்டார் இன்ஸ்பெக்டர்.

"தெரியாது. நாலு நாளாக ஊரிலேயே இல்லை. வேலையாக அயலூருக்குப் போயிருப்பதாக மட்டும் லட்சுமி சொன்னாள். 'எந்த ஊருக்கு?' என்று நான் கேட்கவில்லை. அந்த வம்பெல்லாம் நமக்கேன்?" என்றாள் சூரியநாராயணாவின் மனைவி.

"சரிதான். நாகபூஷணம் ஊருக்குப் போனவன் இன்னும் திரும்பி வரவில்லை அல்லவா?"

"எனக்குத் தெரிந்தமட்டில் வரவில்லையென்றுதான் நினைக்கவேண்டும்" என்றான் சத்தியநாராயணா.

லட்சுமியின் வீடு முழுவதும் தேடினார்கள். ஒரு சின்ன அறையும் சமையல் அறையும்! சமையல் அறையில் பழம் பாத்திரங்கள் இருந்தன. மற்றோர் அறையில் கந்தல் புடவைகள் இரண்டு, பீத்தல் பாய்கள் இரண்டு, பழந் துணிகள், பழைய பத்திரிகைகள் தவிர வேறொன்றும் அகப்படவில்லை. பழைய கடிதங்கள் சில கிடைத்தன. ஆனால் ஆனந்தராவ் லட்சுமிக்கு எழுதியவை ஒன்றும் அகப்படவில்லை.

நாகபூஷணத்துக்கு அவன் மனைவி இறந்ததைப் பற்றித் தெரிவிக்கப் போலீசார் அண்டை, அயல் ஊர்களில் தேடினார்கள். ஆள் அகப்படவில்லை.

ஊரில் எங்கே பார்த்தாலும் கிணற்றில் மிதந்த இரட்டைப் பிணங்களைப் பற்றியே பேச்சு. கணக்கப்பிள்ளைச் சாவடி, முன்சீப்பின் திண்ணை, பார்க், ஓட்டல் முதலிய இடங்களில் இப்படியெல்லாம் பேசிக்கொண்டார்கள்.

"ஆனந்தராவ் லட்சுமியைத் தீவிரமாகக் காதலித்திருக்கிறான். அதில் சந்தேகம் இல்லை. லட்சுமிக்குக் கல்யாணம் ஆகும் முன்பே ஆனந்தராவுக்கு அவளைத் தெரியுமாம். உனக்குத் தெரியுமா?"

"ஆமாம். எனக்குத் தெரியாதா என்ன? அவர்கள் இருவரும் கல்யாணம் செய்துகொள்ள வேண்டும் என்று ஆனமட்டும் முயன்றார்கள். சந்தர்ப்பம் கூடி வரவில்லை. லட்சுமியின் தகப்பனாருக்கு ஆனந்தராவைப் பிடிக்கவில்லை. அதனால் அவளை நாகபூஷணத்துக்குக் கொடுத்தார். இந்த ஊரில் நாகபூஷணத்துக்கு வேலை; லட்சுமி இங்கே வந்தாள். அவளோடு கூடவே ஆனந்தராவும் டேராவைத் தூக்கிவிட்டார்—

"வெகு நாட்களுக்கு நாகபூஷணத்துக்குச் சங்கதி தெரியாமல் இருந்தது. சமீபத்தில்தான் தெரிந்து கொண்டு, லட்சுமியைக் கண்டபடி திட்டி அடித்து நொறுக்கினான். ஆனந்தராவைத் தீர்த்துக்கட்ட நினைத்தான்."

"அந்தச் சங்கதியை அறிந்து இருவரும் தற்கொலை செய்துகொள்ளத் துணிந்துவிட்டார்கள் என்று சொல்லு. ......காதல் எதையும் செய்யத் தூண்டும்."

"இவளைக் கட்டையிலே வைக்க!... இவளுக்கென்ன போங்காலம்!... கட்டின புருஷன்னு ஒருவன் இருக்கற போது, அவனை விட்டுவிட்டு இந்தப் பாழும் புத்தி..."

"கலியுகம் மாமி! கலியுகம்! இதைப்போல எத்தனை சமாச்சாரம் காதுலே விழறது? இதுலே என்ன அதிசயம் இருக்கு?" என்றாள் ஓர் அம்மாள்.

"முதலிலேயே இரண்டுபேரும் கிணற்றடியில் சந்திக்கத் தீர்மானித்துவிட்டார்களாம்......யாரோ வரும் சந்தடி கேட்டுக் கிணற்றில் குதித்துவிட்டார்களாம்" என்றுள் இரண்டாவதாக ஓர் அம்மாள்.

மற்றொருத்தி சிரித்துவிட்டு, "அப்படியொன்றும் அவர்கள் பைத்தியக்காரர்கள் அல்ல, துணிந்த கட்டைகளுக்கு மனிதரின் சந்தடி ஒரு கணக்கா, என்ன? என்னமோ செத்தார்கள். பீடை விட்டது. இப்படிப்பட்ட பாவிகள் வாழ்ந்தால் பூமா தேவிக்கும் பாரம்! நமக்கும் கெடுதல்!" என்றுள்.

"ஆனாலும் லட்சுமி என்ன ஆட்டம்?... என்ன ஆட்டம் ஆடிவிட்டாள்!... எனக்கு அன்று முதலே சந்தேகம் தான்! அவள் போக்கையும் நடவடிக்கையையும் பார்த்ததில் சம்சாரியான பெண் மாதிரி எனக்குத் தோன்றவே இல்லை."

"லட்சுமியை உங்களுக்குத் தெரியுமா, என்ன?"

"தெரியாம என்ன? தண்ணீருக்குப் போறப்ப எல்லாம் அங்கே தயார்!... அப்பப்பா! அந்தச் சிங்காரமும்... அந்த நடையும்!..."

"போனால் போகிறது! அவரவர்கள் வழி அவரவர்களுக்கு! அவள் இஷ்டம் நமக்கென்ன?" என்றுள்; புதிதாக மணம் முடிந்த ஒரு பெண் எழுந்திருந்து போய்க்கொண்டே.

"இவள் சந்தத்துக்குப் பேச்சு வேறயா?" என்றுள் ஓர் அம்மாள்.

"யார் இந்தப் பெண்?"

"எல்லாம் நம்ம ராஜரத்தினத்தின் மாட்டுப் பெண் தான்! மாட்டுப் பொண்ணைவது மண்ணைங்கட்டி! பின்

ளுக்கு எங்கேயோ வடக்கே வேலையாம்; மாட்டுப் பெண் இல்லாத ஆட்டமெல்லாம் ஆடறது!...''

குரலைத் தணித்துக்கொண்டு, ''அவா வீட்டிலே ஒரு பையன் குடி இருக்கான்! அவனை வச்சுண்டு...'' என்றாள்.

''ராம ராம! உலகம் எல்லாம் ஒரேமாதிரியா இருக்கு! அகவிலையெல்லாம் ஆகாயத்துலே ஏறிண்டிருக்குன்னா, வேறெ எப்படி இருக்கும்?''

லட்சுமியின் அண்டை வீட்டில் இருக்கும் சூரியநாராயணா நாகபூஷணத்தைத் திட்டத் தொடங்கினான். நாகபூஷணத்தின் நடத்தையால்தான் லட்சுமி இந்தக் கதிக்கு வந்துவிட்டாள் என்றான்.

''அவன் வேளைக்கு வீட்டுக்கு வந்து, பெண்டாட்டியை அடக்கியாள வேண்டாமா? அதனாலேயே அவனைக் கண்டால் அவளுக்கு எரிச்சலாக வரும். ஏதோ காசு கொண்டு வருவான். குடித்துவிட்டு நடுராத்திரியில் வீட்டுக்கு வருவான்...''

''உங்கள் லட்சணத்துக்கு நீங்கள் பேச வந்துவிட்டீர்களா, வாயை மூடுங்கள்! நீங்கள் மட்டும் பொழுதோடு வீட்டுக்கு வருகிறீர்களா, சாப்பிடுகிறீர்களா? உங்களுக்கு அதோ, அந்த முண்டை இருக்கும் வரையில்...'' என்றாள் அவனுடைய மனைவி.

''அவள் பேச்சை எடுக்காதே என்று உனக்கு எத்தனை தரம் சொல்வது? செத்த நாய் மாதிரி கிட, இல்லாவிட்டால் போய்விடு...'' என்று எழுந்திருந்தான் சூரியநாராயணா.

''கிடக்காமல் என்ன செய்கிறேன். அத்தனை தங்கத்தையும் உங்களிடம் அழுதுவிட்டு வாயையும் கையை மூடிக்கொண்டுதானே நிற்கிறேன்!'' என்று சொல்லிக் கண்ணீர் உகுத்தாள் சூரியநாராயணாவின் மனைவி.

''மூடு வாயை! அழுகை என்ன? நீயும் இந்தக் கிணற்றில் விழுந்து செத்துத் தொலை, அந்த லட்சுமி யோடு!''

''அப்படியே சாகிறேன்... பாவம்... அவள் சாவை நினைத்தால் என் மனது வெடித்துப் போகிறது. அழகான பெண்! . ஒருவருடைய ஜோலியும் வம்பும் வேண்டாத பெண்!... இந்தமாதிரி செய்ய எப்படித் துணிந்தாளோ!... சூது வாது தெரியாதவள்!... எந்தப் படுபாவி என்ன மருந்து வைத்தானோ? இல்லாவிட்டால்...''

''இவள் மட்டும் குறைந்தவளா, என்னடீ? நீ அவ ளுக்காகப் பரிந்துகொண்டு வருகிறாயே, ஏன்? அவள் என்னையே வலையில் வீழ்த்தப் பார்த்தாளே!'' என்றான் சூரியநாராயணா தான் வெகு உத்தமன்போல்.

லட்சுமி, ஆனந்தராவ் இவர்களின் சாவைப்பற்றி இப்படி விதம் விதமாகப் பேசிக்கொண்டார்கள். சிலர் தற்கொலை என்றார்கள். போலீசார் மறுத்தும்கூடச் சிலர், ''கொலைதான்'' என்றார்கள். ஆனந்தராவைப் பற்றியும் லட்சுமியைப் பற்றியும் போலீசார் கிடைத்த மட்டும் தகவல்களைச் சேகரித்தார்கள். சேகரித்த தக வல்களிலிருந்து அவ்விருவரும் ஆழ்ந்த காதலர்களே என் பது முடிவாகி விட்டது. நாகபூஷணத்துக்குத் தெரிந்தால் ரகளை ஆகும் என்றும், உலகம் ஏசும் என்றும் நினைத்து இருவரும் இப்படி வலுவில் உயிரை விட்டுவிட்டார்கள் என்பது போலீசாரின் எண்ணம்.

கிணற்றிலிருந்து பிணங்கள் கிடைத்த அன்றைச் சாயந்திரம் வரையில் போலீசார் அவற்றை அப்படியே வைத்திருந்தார்கள். அவர்களுடைய உறவினர் யாரே னும் வருவார்கள் என்று தேடிப் பார்த்து வராததால் அவற்றை எரித்துவிட்டனர்.

அன்று மாலையில் போலீஸ் ஸ்டேஷனுக்கு ஒரு சாட்சி வந்தது. ஊர் ஓரத்தில் குடியிருக்கும் ஒருவர், லட்சுமியும் ஆனந்தராவும் சேர்ந்து முதல் நாள் இரவு அந்த வழியே போனதைப் பார்த்ததாகச் சொன்னார். "அந்த நிறத் துணிகளே... அவர்கள் தான்! நான் முகத்தைப் பார்க்கவில்லை... உல்லாசமாகப் பேசிக்கொண்டு போனார்கள்" என்றார்.

அவரைப் போலீசார் வேறு சில கேள்விகள் கேட்டார்கள். அவர் பதில் சொன்னார்.

"தற்கொலை செய்துகொள்வோமென்று நினைத்தவர்கள், அவ்வளவு உல்லாசமாகப் பேசிக்கொண்டு போவார்களா?" என்று இன்ஸ்பெக்டர் எண்ணமிட்டார். அப்படி உல்லாசமாகப் பேசிக்கொண்டு போனதைப் பார்த்தால் அவர்களுக்குத் தற்கொலை செய்துகொள்ளும் எண்ணமே இல்லையென்று தோன்றுகிறது. அது எப்படியானாலும் அவர்களுடைய சாவைப்பற்றி வகை வகையான தகவல்கள் காதில் விழுகின்றன. அவற்றுள் 'எதை நம்பலாம், எதை நம்பக்கூடாது' என்பது புரியவில்லை. கடைசியில் போலீசார் ஒருவிதமான முடிவுக்கு வந்தார்கள். அதாவது: நாலு நாட்களாக நாகபூஷணம் ஊரில் இல்லை. ஊருக்குப் போகும்போது மனைவியிடம் சண்டையிட்டானும். பிறகு திரும்பி வரவேயில்லை. லட்சுமியும் ஆனந்தராவும் வழக்கமாக ஊருக்கு வெளியே, கிணற்றடியில் சந்திப்பார்கள் போல் இருக்கிறது. அதற்காகவே நாகபூஷணம் தான் ஊரில் இல்லாததுபோல் நடித்து ஊருக்குள்ளேயே எங்கேயோ இருந்திருக்கிறான். இரவில் ஊரோரத்தில் இருவரையும் எதிர்பார்த்து, அன்றிரவு அங்கே வந்து அவர்கள் இருவரும் கிணற்றுச் சுவரின்மேல் உட்கார்ந்திருக்கும்போது, அவன் போய் இருவரையும் கிணற்றுக்குள் தள்ளிவிட்டுத் தன்பாட்டில் போயிருப்பான். தள்ளும்போது அவர்கள் கூக்குரலிட்

டிருந்தாலும் ஊர் தள்ளியிருப்பதால் யாருக்கும் கேட்டிருக்காது? இப்படித்தான் நடந்திருக்க வேண்டுமென்று பலர் கருதினார்கள். என்னவானாலும் நாகபூஷணத்தைப் பிடித்துக்கொண்டு வந்தாலன்றி விஷயம் ஒரு முடிவுக்கு வராது. அதற்காகப் போலீசார் அன்றிரவு முதலே நாகபூஷணத்தைத் தேடுவதில் தீவிரமாக ஈடுபட்டார்கள்.

* * *

பூவுலகை விட்டு வேறு ஏதோ உலகத்துக்குப் போகும் இரண்டு "ஆத்மாக்கள்" வான வழியில் அருகருகே சந்தித்தன. வெகு தொலைவிலிருந்து அவ்விரண்டும் எட்ட, எட்ட நடந்து சேர்ந்தாற்போலவே வந்து கொண்டிருந்தன. ஒரு நாள் முழுதும் அப்படிப் பிரயாணம் செய்த பின் ஓர் ஆத்மா துணிந்து மற்றோர் ஆத்மாவைக் கேட்டது.

"யார் நீ?"

இரண்டாம் ஆத்மா பதில் சொல்லவில்லை. ஏதோ கவலையோடு காணப்பட்டது.

"இதோ பார், உன்னைத்தானே! நீ யார் என்று கொஞ்சம் சொல்லேன்" என்று மறுபடியும் முதல் ஆத்மா கேட்டது.

இரண்டாம் ஆத்மா மெதுவாக அந்தப் பக்கம் திரும்பி "அப்படித் தெரிந்துகொள்ள வேண்டிய அவசியம் என்ன?" என்றது.

"இல்லை... வெறுமனே சிறிது நேரம் பேசலாமே என்றுதான். மனசு ஒன்றும் சரியாய் இல்லை."

"நான் எதுவும் பேசும் நிலையில் இல்லை. என் மனசு அதைவிட வெறுப்பில் இருக்கிறது."

''அற்காகத்தான், இருவரும் சிறிது நேரம் பேசிக்கொண்டிருப்போம். அந்தக் கவலைகளை மறப்போம்.''

''ஆனல் கேள். என் பெயர் லட்சுமி. எங்களது இந்த ஊர்'' என்றது அந்த ஆத்மா.

''என்னது! உன் பெயர் லட்சுமியா? அந்த ஊரில் கிணற்றில் விழுந்து இறந்த லட்சுமி நீதானு?''

''ஆம், நான்தான். நீ யார்? இவ்வளவு ஆச்சரியப்படுகிருயே!''

''என் பெயர் ஆனந்தராவ். நீ சொன்ன ஊர்தான் எனக்கும்.''

''ஆ! ஆனந்தராவ்! நீதான் ஆனந்தராவா?'' என்ருள் அதைவிட ஆச்சரியத்துடன் லட்சுமி.

ஆனந்தராவின் ஆத்மா ஆம் என்பதுபோல அப்படியும் இப்படியும் ஆடியது.

இரண்டு ஆத்மாக்களும் நெருங்கி வந்தன.

ஆனந்தராவின் ஆத்மா சோர்வாக ஒரு சிரிப்புச் சிரித்தது.

''ஏன்?'' என்றது லட்சுமியின் ஆத்மா.

''ஒன்றும் இல்லை; நம் ஊரில் நம்மைப்பற்றி அளந்தவம்பை எல்லாம நீ கேட்டாயா?''

''கேட்டுக்கொண்டுதான் இருக்கிறேன். அதனுல்தான் மனசு கலவரப்பட்டதென்றேன்.''

''என்ன உலகம்! என்ன மனிதர்கள்!'' என்ருன் ஆனந்தராவ்.

''தெரிந்திருந்ததுபோல் எத்தனை தகவல்கள்? எவ்வளவு பெரிய பழிகள்?'' என்ருள் லட்சுமி.

''அது சரிதான். நான் உன்னை எப்பொழுதும் பார்க்கவே இல்லையே!''

"அதுதான் ஆச்சரியம்! நானும் உன்னை எப்பொழுதும் பார்த்ததே இல்லை. ஆனாலும் நாம் இருவரும் சேர்ந்து தற்கொலை செய்துகொண்டோமாமே?" என்று சொல்லிவிட்டுக் 'களுக்'கென்று சிரித்தாள் லட்சுமி.

ஆனந்தராவும் சிரித்தான். "நீ எனக்கு எழுதிய கடிதங்களைத் தேடி எடுக்க வேண்டுமென்று என் அறையைத் தலைகீழாகத் திருப்பிவிட்டார்கள். ஒருமுறை, கீழே இறங்கிப்போய், 'என் அறையை இப்படிச் செய்ய உங்களுக்கு என்ன அதிகாரம் இருக்கிறது?' என்று கேட்கத் தோன்றியது" என்றான்.

"இந்த மனிதர்களுக்கு வேறு வேலை இல்லையென்று நினைக்கிறேன். இல்லாததும் பொல்லாததும் இட்டுக் கட்டிப் பேசுவதில் அவர்களுக்கு எத்தனையோ மகிழ்ச்சி!"

"அப்படித்தான்! ஓர் ஆணும் ஒரு பெண்ணும் ஒரே கிணற்றில் இறந்து கிடந்ததாலேயே எவ்வளவு கதைகளைக் கட்டிவிட்டார்கள்? எவ்வளவு பொய்யை அளந்தார்கள். உலகமே அப்படித்தான். உதாரணத்துக்குச் சொல்லுகிறேன் கேள். ஒருநாள் இரவு நான் ஏதோ யோசனை செய்தவண்ணம் பார்க்கில் நுழைந்தேன். யாரோ அங்கே பேசிக்கொண்டிருந்தார்கள். அமைதியை விரும்பிய நான் அடுத்தாற்போல் இருந்த 'பெண்கள் பார்க்'கில் நுழைந்தேன். மாலையிலேயே அது காலியாய் விடும் அல்லவா? என்னைக் கண்டு அந்தப் பார்க்கின் காவலாளி சீறினான். "பெண்கள் பார்க்கில் இந்த ராத்திரி வேளையில் உனக்கு என்ன வேலை? எவளை வரச் சொல்லியிருக்கிறாய்?" என்று கேட்டான். எனக்கு எரிச்சலாக வந்தது. செருப்பைக் கழற்றி அடித்துவிட வேண்டுமென்ற அளவுக்குக் கோபம் வந்தது. "இந்தப் பார்க்குக்கு வந்தால் மட்டும் நல்ல எண்ணத்துடன் வந்ததாக ஏன் நினைக்க மாட்டேனென்கிறாய்?" என்று கேட்

டேன். 'முடியாது' என்ருன் அவன். "நல்ல எண்ணமே பிரயோசனப்படாது. பாதி ராத்திரியில் 'பெண்கள் பார்க்'கில் நுழைவதென்ருல் அதில் நல்ல எண்ணம் எங்கே வாழ்கிறது?" என்று கேட்டான். இன்னும் என்னவெல்லாமோ கண்டபடி சொன்ஞன். என்மேல் பல புகார்களைத் தயாரிக்க முயன்ருன். நான் பின்ஞல் திரும்பிப் பார்க்காமல் அங்கிருந்து வெளியே வந்தேன். அப்படி இருக்கும்போது ஒரு கிணற்றில் ஓர் ஆணின் பிணமும் பெண்ணின் பிணமும் சேர்ந்து காணப்பட்டால் கதை பிறக்காதா? உம்... நினைவு வருகிறது. எவஞே ஒருவன் சொன்ஞனே, நாம் இருவரும் சிரித்துக் கொண்டே சென்றதைத் தான் பார்த்ததாக! இப்படி அவதூருய்ப் பேசுவதில் பெருமை உண்டென்று நினைக்கிருர்கள்போலும். அந்த வேணுப்பயலைப் பாரேன்! என்னிடம் அவ்வளவுதூரம் நட்புடன் பழகியவன், என்னை உங்கள் தெருவில் அடிக்கடி பார்த்ததாகச் சொன்ஞனே! சொல்லலாமா! கம்மனுட்டியை வெட்டிப் புதைக்க வேண்டும்" என்ருன் ஆனந்தராவ்.

"எங்கள் அண்டை வீட்டுச் சூரியநாராயணு, என்னைப்பற்றிச் சொன்னதைக் கேட்டாயா? அவனை நான் தகப்பனுராக பாவித்திருந்தேன். அவனை நான் வலையில் போட்டுக்கொள்ளப் பார்த்தேனும். அவனுடைய மனைவி நல்லவள் தான். அவன் திருட்டுக் கம்மனுட்டி மகன்!... நான் கெட்டுப்போனவளாம் .. வேஷம் போடுகிறவளாம் ...ராட்சசியாம். அப்பப்பா!... இந்தப் பொம்மனுட்டி களுக்கு வேறு வேலையே இல்லை... சீச்சீ..." என்ருள் லட்சுமி.

"நாம் இருவரும் முதலிலிருந்தே காதலர்களாய் இருந்தோமாம்!" என்று சிரித்தான் ஆனந்தராவ்.

"அவர்கள் நாசமாய்ப் போனுர்கள்" என்று சொல்லி லட்சுமியும் சிரித்தாள். அவர்களைப்பற்றி ஊரார்

பேசிய வம்புகளையும் பழிகளையும் பற்றித் திரும்பவும் சொல்லிக்கொண்டார்கள்; சிரித்தார்கள்; கோபங் கொண்டார்கள். திட்டினார்கள். இந்த உலகத்தையும் இந்த மனிதர்களையும் மென்று விழுங்கிவிட வேண்டும் என்று நினைத்தார்கள்.

"இதெல்லாம் சரி; நீ எப்படி இறந்தாய்?" என்றான் ஆனந்தராவ்.

"என் கணவர் பெயர் நாகபூஷணம் என்று கேள்விப் பட்டாய் அல்லவா? நாங்கள் மிகவும் ஏழை. அவர் அதிகமாகப் படிக்கவில்லை. ஏதோ சிறிய உத்தியோகம் பார்த்து வந்தார். வரும் பணம் எங்கள் சாப்பாட்டுக்கே போதாது. எனக்கு மணம் முடிந்து அதிக நாட்கள் ஆக வில்லை. சில நாட்களுக்குப்பின் அவருடைய முதலாளி அவரை வேலையிலிருந்து நீக்கிவிட்டான். எங்களுக்குச் சாப்பாட்டுக்குத் திண்டாட்டம் வந்துவிட்டது. வீட்டில் இருந்த பாத்திரம் பண்டங்களை விற்றுச் சாப்பிட்டோம். அவர் எவ்வளவோ அலைந்தும் ஒருத்தனும் வேலை கொடுக்கவில்லை. ஒவ்வொரு நாள் ஏதாவது கூலி வேலை செய்து சில்லறை கொண்டுவந்து கொடுப்பார். இப்படி மிகவும் கஷ்டப்பட்டோம். வறுமை அவ்வளவும் எங்கள் வீட்டிலேயே குடியேறியதாகத் தோன்றியது.

கடைசியில் என் கணவர் நாலு நாட்களாகச் சோறு, தண்ணீர் இல்லாமல் வீட்டுக்கு வந்து, "நான் எங்கேயா வது போகிறேன். என்னைப்பற்றி நீ கவலைப்படாதே. பிழைத்துக் கிடந்து சுகப்பட்டால் திரும்பி வருகிறேன். எங்கே போவேனோ, எனக்கே ஒன்றும் தெரியாது" என் றார். நான் அழுதேன். போகவேண்டாமென்று கெஞ்சி னேன். அவர் காதில் போட்டுக்கொள்ளவில்லை. ஒன் றும் சொல்லாமல் மேல் துண்டுகூடப் போட்டுக் கொள்ளாமல், 'சர, சர'வென்று போய்விட்டார். அவர்

போனபின் எனக்கு ஒன்றும் பிடிக்கவே இல்லை. தனியாக அறையில் உட்கார்ந்து அழுதேன். அடித்துக் கொண்டேன். பசித் துன்பம் தாங்க முடியவில்லை. எதையாவது விற்கலாம் என்ருலும் வீட்டில் ஒன்றும் இல்லை. போதாத குறைக்கு கடன்காரர்கள் உயிரை வாங்கிக்கொண்டிருந்தார்கள்.

"என் கணவர் என்ன ஆனுர் என்பது தெரியவில்லை. இந்த வறுமையின் கொடுமையில் அவர் பிழைத்திருப்பார் என்று எப்படி நம்புவது? ஏதேதோ எண்ணமிட்டேன். அவர் கூட இல்லாமல் உணவு கிடைக்காமல் தவித்துக் கொண்டு, நடைப் பிணம் போல்—யாருக்காக—எதற்காக இப்படி வாழவேண்டும்?' என்று தோன்றியது. நேற்றிரவு பைத்தியம் பிடித்தவள்போல் ஆனேன். வெகுநேரம் சென்றபின், நள்ளிரவு, வீட்டுக்கதவை ஒருக்களித்து வைத்துவிட்டு ஊருக்கு வெளியில் உள்ள பாழுங்கிணற்றுக்குப் போனேன். சாக நிச்சயித்துவிட்டேன். என் கணவர் வந்தால் ஒருமுறை அழுவார். அவ்வளவுதானே! எப்படியும் அதற்குமேல் வாழ எனக்குத் தைரியம் இருக்கவில்லை. அவரைச் சுகமாக வைக்கும்படி கடவுளை வேண்டிக் கொண்டு அந்தக் கிணற்றில் குதித்துத் தற்கொலை செய்து கொண்டேன்.

"இதுதான் நான் செத்த கதை. இப்படிப்பட்ட நிலையில், நான் கதியற்று உயிரை விட்டால், ஒருவனுவது இரக்கப்படவில்லை; போகட்டும்! என்மேல் எவ்வளவு பழி சுமத்துகிருர்கள்! எவ்வளவு பொய்க்கதை புனைகிருர்கள்; பார்த்தாயா?" என்ருள் லட்சுமி.

ஆனந்தராவின் 'ஆத்மா' பெருமூச்சு விட்டாற்போல் அசைந்தது.

"அப்படியென்ருல், நீ தற்கொலை செய்து கொண்டபின் நான் இறந்திருக்கிறேன்! என் கதையைக் கேள்:

"நான் ஓர் ஆபீசில் குமாஸ்தாவாய் இருந்தேன். எனக்கும் வெறுப்பும் துன்பமும் இருந்ததென்று வைத்துக் கொள். முக்கியமானது கல்யாண விஷயம்தான். என் தாயார் என்னை விரைவில் மணம் முடித்துக் கொள்ளும்படி கடிதம் எழுதிக்கொண்டே இருந்தாள். நான் யாரையும் காதலிக்கவில்லை. எனக்குக் காதலில் நம்பிக்கை இல்லை. ஆனால் மெதுவாக மணம் செய்து கொள்ளலாமென்று பேசாமல் இருந்தேன். அத்துடன் இந்தச் சம்பாத்தியம் எனக்கே போதவில்லை. அவளையும் அழைத்துவந்து, 'சுகப்படலாம்' என்று வந்த மனைவியைத் துன்புறுத்த எனக்கு விருப்பம் இல்லை.

"ஆனால், நேற்றுக்கூட ஒரு கடிதம் வந்தது. எங்கேயோ ஒரு பெண் இருப்பதாகவும், செய்துக்கொள்ளத்தான் வேண்டும் என்றும் அதில் கண்டிருந்தது. என் நிலைமையை எப்படி எடுத்துச் சொன்னாலும் அவர்கள் புரிந்து கொள்வதில்லை. இப்பொழுதே கல்யாணம் செய்து கொண்டால் சுகப்பட முடியாதென்று நான் நினைத்தேன். நான் செய்து கொள்ளாவிட்டால் அவர்களுக்குச் சுகம் இல்லை. என்ன செய்வதென்றே எனக்குப் புரியவில்லை; இரவு ஒரு மணி வரையில் அறையில் உட்கார்ந்து ஆழ்ந்து யோசித்தேன். மூளை அனலாகக் கொதித்தது. எழுந்திருந்து வெளியே வந்து தெருவெல்லாம் தாண்டி ஊருக்கு வெளியில் வந்தேன். யோசித்துக் கொண்டே கிணற்றுச் சுவரின்மேல் உட்கார்ந்தேன். அப்பொழுதே உன் உடல் கிணற்றில் இருந்திருக்கிறது. இந்த யோசனை காரணமாக என்ன நடந்தது தெரியுமா? எல்லாம் விதியின் விபரீதச் செயல், அந்த வேளையில் என் சாவு எழுதி வைத்திருக்கிறதே! கிணற்றுச் சுவர் அப்படியொன்றும் உயரம் இல்லை அல்லவா? நான் அதன் மேல் உட்கார்ந்திருக்கும் நினைவு கூட எனக்கு இல்லை. ஏதோ பெஞ்சின் மேல் உட்கார்ந்திருப்பதாக எண்ணி,

இடக்கையைப் பின்புறம் ஊன்றிச் சாய்ந்து உட்காரு வோம் என்று நினைத்தேன். சுவரில் உட்கார்ந்தபடியே கையைத் தள்ளிப் பின்னுக்குச் சாய்ந்தேன். அவ்வளவு தான்; கிணற்றில் விழுந்துவிட்டேன். விழும்போது உரக்கக் கத்தினேன். அந்த நள்ளிரவில் ஊரைத்தாண்டி என் குரலை எவன் கேட்டிருப்பான்? எனக்கு நீந்தத் தெரியாது. கிணற்றில் விழுந்தவுடன் அடிப் பகுதிக்குப் போய் விட்டேன். வயிறு முட்ட நீரைக் குடித்துவிட்டேன். திணறினேன். காலையும் கையையும் அடித்துக் கொண்டேன். என்னுள் இருந்த பிராணவாயு தீர்ந்தது; இறந்துவிட்டேன். நான் தற்கொலை செய்து கொள்ள வில்லை. துரதிர்ஷ்ட வசத்தால் நேர்ந்த சாவு. நீ, இறக்க வேண்டுமென்று இறந்தாய்; நான் சாக நினைக்காமலே செத்தேன். இதுதான் நடந்த நிகழ்ச்சி. விடியற்காலை யில் நம் உடல்கள் இரண்டும் கிணற்றில் காணப்பட்ட தாலும் இளம் வயதினர் ஆனதாலும் அவர்கள் கதை கட்ட ஆதாரம் கிடைத்துவிட்டது. வேறு ஆதாரம் வேண்டுமா? நடக்காதவற்றையெல்லாம் சிருஷ்டித்தார் கள். உண்மை உலகத்துக்கு எப்படித் தெரியும்? தெரிந் தால்தான் யார் நம்புவார்கள். அதுபோகட்டும்! இரண்டு பிணங்களைப் பார்த்தவுடனே அவர்களுக்கு இந்தத் துர்ப்புத்திதானா வரவேண்டும்? உண்மையில் நடந்தபடி, 'இப்படி நடந்திருக்கலாமோ!' என்று ஒருவராவது யோசிக்கவில்லையே!"

"அப்படி ஒரு நாளும் யோசிக்க மாட்டார்கள். நடு ராத்திரியில் தன் கணவனுடைய உயிருக்கு ஆபத்து நேர்ந்து, யாரும் திக்கில்லாமல் டாக்டரிடம் ஒருத்தி ஓடினால், 'இவள் எவனையோ தேடிக்கொண்டு நடு ராத்திரியில் புறப்பட்டிருக்கிறாள்' என்று நினைப்பார்களே தவிர, 'ஐயோ, பாவம் இந்த அகாலத்தில் போகிறாள்

என்ன கஷ்டம் வந்ததோ?' என்று எவனும் நினைக்க மாட்டான்."

"என்ன மட்டமான எண்ணம்!" என்ருன் ஆனந்த ராவ்.

"அது சரி! கிணற்றுச் சுவரின்மேல் நீ ஏன் அஜாக்ரதையாக உட்கார்ந்தாய்? பார்த்து உட்காரக் கூடாதா?" என்று லட்சுமி கண்டித்தாள்.

"சரிதான் போ! அவ்வளவு எச்சரிக்கையாய் இருந்திருந்தால் செத்தே போயிருக்க மாட்டேன். ஆனல் நீ தற்கொலை செய்து கொண்டது மன்னிக்க முடியாத குற்றம்" என்ருன் ஆனந்தராவ்.

லட்சுமி இந்த உலகத்தைப் பார்த்தாள். "அல்ல 'இப்படிப்பட்ட மட்டமான உலகத்தை விட்டு வந்ததே நல்லதாயிற்று என்று இப்பொழுது நினைத்துக் கொள்கிறேன். என் கணவர் இல்லாமல் நான் இன்னும் இரண்டு நாட்கள் தனியாய் வாழ்ந்தேனென்று வைத்துக்கொள்; இன்னும் ஏதாவது அபாண்டப்பழியைச் சுமத்துவார்கள். கடைசியில் அவர் எங்கே இருக்கிருரோ,என்னவாளுரோ? ......"என்ருள் லட்சுமி இரக்கத்துடன்.

"உன் கணவர் அகப்பட்டாரென்று வைத்துக்கொள். அவர் உண்மையைச் சொல்லி 'நான் அவர்கள் இருவரையும் கிணற்றில் தள்ளிக் கொல்லவில்லை' என்ருல் இவர்கள் நம்புவார்கள் என்கிருயா?"

"நம்பவே மாட்டார்கள். கேட்டு அனுதாபம் கொள்ளும் நல்ல மனசு அவர்களுக்கு இருக்காது. அவர்கள் எல்லோரும் கீழ்த்தரமான வாழ்வு வாழ்கிருர்கள். ஆகையால் பிறரையும் அப்படியே நினைக்கிருர்கள். இன்றைக்காவது அவர்கள் தொல்லை நீங்கியது; பீடை விட்டது; தூ !" என்று சொல்லி லட்சுமி ஆகாய வெளியிலிருந்து பூமியின்மேல் காறி உமிழ்ந்தாள்.

''இல்லை நிஜம் நிதானமாக வெளிப்படும் என்பார்கள். அப்படி ஒருவேளை உண்மை தெரிந்தபின், நம்மீது அவதூறும் குற்றமும் சுமத்திய இந்தக் கம்மனாட்டிகளின் முகம் எப்படியிருக்கும்? இவர்கள் எல்லோரையும் வரிசையாக நிறுத்தித் தூக்கில் போட வேண்டும்.'' என்றான் ஆனந்தராவ் ஆத்திரத்துடன்.

அந்த விஷயத்தைப் பற்றி அந்த இரண்டு ஆத்மாக்களும் மறுபடி பேசவில்லை. வேறு ஏதோ எண்ணமிட்ட படியே, பின்புறம் திரும்பிப் பார்க்காமல் தாங்கள் போய்ச்சேர வேண்டிய மற்றோர் உலகத்துக்கு 'விடு, விடெ'ன்று போகத் தொடங்கின.

தமிழாக்கம்:

**எஸ். கே. சீதாதேவி.**

## 4

# மழையில் நனைகின்ற மனிதன்

### மஞ்சு ஸ்ரீ

தவறான ஆசைகளைத் தாண்டி அக்கரையில் சேர்ந்து விட்ட மனிதன் அவன்; இளமையிலேயே வாழ்க்கையின் பாசங்களை ஒதுக்கிவிட்டவன்; அம்மாவின் நினைவு வந்தாலொழிய ஒருபோதும் கண்ணீர் விடாதவன்; சிவப்பு நிறம் பூசிய தபால் பெட்டிகள் தென்பட்டால் நடுங்குவான். அவன் தெருவோடு நடந்து போனான். துடைத்துவிட்ட கண்ணாடி போன்ற சூரியன் காணப்படவில்லை; மழை வரும்போல் இருந்தது. மழையென்றாலே அவனுக்குப் பயம். அவன் நோய்வாய்ப் பட்டபோதெல்லாம், 'மழையில் அலையக்கூடாது. அதாவது, நனையக்கூடாது' என்று மருந்து கொடுப்பவர்கள் சொல்லுவார்கள்.

எப்பொழுதோ, குழந்தைப் பருவத்தில் அவனை நாய் கடித்துவிட்டது. யாரோ, 'அது வெறிபிடித்த நாய்' என்றார்கள். அம்மா அவனைக் கட்டிக்கொண்டு அழுது தீர்த்தாள்.

குழந்தையாய் இருக்கும்போது, மழைவரும் அறி குறியைக் கண்டால் அம்மா அவனைக் கயிற்றால் கட்டிப் போட்டு விடுவாள். வேர்க்கடலை தின்ன விடமாட்டாள்· நாய்க்கடி பட்டவர்கள் மழையில் நனையக் கூடாதாம்' கடலை தின்னக் கூடாதாம்.

பெரியவனாய் வளரும்போது பல மனிதர்கள் அவனைக் கடித்தார்கள்.

தேர்வில் தவறிவிட்டான். அதற்காக ஒருபோதும் அழவில்லை.

அம்மா அழுதாள். அரைக்காசுக்கு உதவாதவர்களி லிருந்து மிகமிகப் பெரியவர்கள் வரையில், அவனை ஒன்றுக்கும் உதவாத முடசிகாமணி என்று திட்டினார்கள். அவன் யாரிடமும் 'இல்லை' யென்று அதை மறுக்கவில்லை; சிலர் முன்னிலையில் 'ஆம்' என்றும் ஒப்புக்கொண்டான்.

சிறு வயதில் எப்பொழுதாவது, வகுப்பில் இருக்கும் போது பாடம் சொல்லித்தரும் ஆசிரியர்களின் நடை யுடை பாவனைகளைச் சித்திரம் வரைவான். அதற்காக அடியும் பட்டிருக்கிறான்.

கல்லூரியில் நுழைந்தபின், பாடம் நடக்கும்போது மடியில் நாவலை வைத்துக்கொண்டு குனிந்த வண்ணம் படிப்பான்.

அப்புறம் கதைகள் எழுதினான். அம்மாவைப் பற்றி யும் எழுதினான். அம்மா ஒருமுறை, "மாமா வீட்டுக்கு ஒரு நடை போய்வா. சகுந்தலா உன்னைப் பார்க்க வேண்டும் என்கிறாளாம்" என்று சொன்னாள். அவன் உண்மை

யென்றெண்ணிக் கொண்டு மாமாவின் வீட்டுக்குப் போனான். சகுந்தலா தேர்வுகள் எல்லாவற்றிலும் தேறியிருந்தாள். மிக அழகாக இருந்தாள்.

ஒரு வாரம் வரையில் தங்கி, அடுத்தநாள் ஊர் திரும்ப நினைத்திருந்தபோது, இரவு வெண்ணிலா வந்தது. நிலவில் மரங்கள் அழகாய் இருந்தன. நிலவும் அப்படியே.

தொட்டத்தில் சுவரோரமாக அந்தி மந்தாரைச் செடிகள் ஐந்தாறு இருந்தன. எல்லாச் செடிகளிலும் ஒவ்வொரு பூவே இருப்பதைக் கண்டான்.

''அதை ஏன் பறிக்கவில்லை?'' என்று சகுந்தலையைக் கேட்டான்.

''தாயான செடிக்கு ஒவ்வொரு பூவாவது விட்டு வைக்க வேண்டும்'' என்றாள் சகுந்தலா.

அவர்கள் அறையில் உட்கார்ந்திருந்தார்கள். ஜன்னல் வழியாகத் தொலைவில் சாலை தெரிந்தது. அங்கே சாலைக்குக் கப்பி அடித்துக்கொண்டிருந்த கூலிகள் பாட்டுப் பாடிக் கொண்டிருந்தார்கள்.

அவன், ''நாளைக்குப் புறப்படப் போகிறேன்'' என்றான். வெகுநேரம் பேசாமல் இருந்த சகுந்தலா, கடைசியில் ''அவர்கள் உன்னைவிட மேல், அத்தான்! மிகவும் மேல்!'' என்றாள்.

''யார் அவர்கள்?''

''அதோ, தூரத்தில் சாலைக்குக் காப்பி போடுகிறார்களே, அவர்கள் தான்! நாட்டுக்குக் கூட, உன்னைப்போல் சோகமான காதற் கதைகளும் நிர்வாணச் சித்திரங்களும் எழுதுபவர்களை விட அவர்கள்தாம் உதவியாய் இருப்பார்கள்.''

பொழுது விடிந்ததும் அவன் தன் ஊருக்குப் போய்விட்டான். மறுபடியும் மாமாவின் வீட்டுக்குப் போகவே இல்லை.

அப்புறம் எப்பொழுதோ சகுந்தலைக்கு மணம் நடந்தது.

பல நாட்களுக்குப் பின் அவன் ஒரு புகைவண்டி நிலையத்தில் இரண்டு குழந்தைகளுடன் தென்பட்டாள். ஏக்கம் தோய்ந்த சிரிப்புடன், "நீ கல்யாணம் செய்து கொள்ளாதே அத்தான்! அதிருஷ்டவான் ஆகவேண்டும் என்றால்.. " என்று அவள் கூறினாள்.

அவன் 'விடு, விடு' என்று நடந்து போனான். வீட்டுக்குப் போனவுடன், 'இரு குழந்தைகளின் தாய்' என்று ஒரு சித்திரம் வரைந்தான். விகாரமாகப் பருத்து, கன்னங்கள் ஒட்டி, முகத்தில் சுருக்கங்களோடு கவலையுடன் சிரித்தது அச்சித்திரம்.

அதன் பின் பலமுறை மழை பெய்தது.

அவன் சாளரத்தின் கதவுகளைக் கூட அடைத்துவிட்டுப் பத்திரமாக அறையில் உட்கார்ந்திருந்தான். அப்பா சலித்துக்கொண்டார். அம்மாவுக்குத் துக்கமாய் இருந்தது. அவன் தேர்வுகளுக்கும் படிக்கவில்லை.

வீட்டிலே இருக்க முடியாமல் "வேலைக்குப் போகிறேன்" என்றான் அவன்.

"யார் கொடுப்பார்கள்?" என்றார் அப்பா, இகழ்ச்சியாக.

அம்மாவின் கால்களைத் தொட்டு வணங்கிக் கண்ணில் ஒத்திக்கொண்டு பெரிய நகரத்துக்கு வந்தான் பையன். பத்திரிகைகளில் அவனுடைய கதைகள் வெளி வந்தன.

சித்திரங்கள் வரைந்தான்.

எங்கேயோ பாழடைந்து கிடந்த வீட்டில், நன்ருய் இருந்த அறை ஒன்றில் இரவில் படுப்பான். தெருவின் பெயர் கூடத் தெரியாது. அவன் தெருப் பெயரையும் இல்லத்தையும் தெரிந்து கொண்டால் அம்மாவிடமிருந்து கடிதம் வரும். அதற்காகவே தெருவின் பெயரைத் தெரிந்து கொள்ளவில்லை. தன் வீட்டுக்கும் கடிதம் எழுத வில்லை. அதற்காகவே தபால் பெட்டிகளைக் கண்டால் நடுங்குவான். கடிதங்களைப்பற்றி நினைவு எழும். அம்மா வின் நினைவும் வரும். எவ்வளவோ செய்திகள் நினைவில் மோதும். பிழைப்பு நடத்துகிறேன் என்ற செய்தி ஞாபகம் வரும். மழைத்துளிகளும் ஞாபகம் வரும்.

கோவிந்தன் எப்பொழுதாவது அவனைத் தேடிக் கொண்டு வந்து, கதை வெளியான பத்திரிகையையும் பத்து ரூபாய்களையும் கொடுப்பான். மேலும் பத்து ரூபாய் வேண்டும் என்ருலும் கொடுப்பான்.

போனதடவை மழையில் நனைந்து இன்னும் மூன்று மாதம் முடியவில்லை. ஆஸ்பத்திரியிலிருந்து வந்து இரண்டு மாதங்கள் கூட ஆகவில்லை.

திரும்பவும் மழை வரும்போல இருந்தது. அதனுல் இளைஞன் வேகமாக நடந்தான். அது கடைத்தெருவன்று. பழக்கடைகளோ வெற்றிலை பாக்குக் கடைகளோ இல்லை. அதனுலேயே அவன் வேகமாக நடந்தான். அவன் பெயர் முகுந்தராவ். பெரிய நகரத்தில் இருக் கிருன். தற்சமயம் தெருவில் நடந்துகொண்டிருக்கிருன். இப்பொழுது அவன் மழையில் நனைவதற்கு முன், போன தடவை மழையில் நனைந்த விவரம் — இக்கதை.

சாலையில் ஓடிச் சென்றும் முகுந்தராவ் தெப்பமாக நனைந்து விட்டான். அன்றிரவு, பாழடைந்த வீட்டின் நல்ல அறையில் படுத்திருந்தும் காலையில் உடம்பில் நோய் கண்டு காய்ச்சல் வந்துவிட்டது.

முகுந்தராவ், கோவிந்தராவின் வீட்டுக்குப்போனான். கையில் சில்லறை இல்லாததால் நடந்தே போனான். கோவிந்தராவ் தன் மனைவி வீட்டுக்கு விலக்கானதால், தலையெழுத்தே என்று கரியடுப்பை விசிறிக் கொண்டிருந்தான்.

முகுந்தராவ், அங்கே போய், "ஜுரம் வந்திருக்கிறதடா, கோவிந்த்?" என்று சொன்னான். கோவிந்தராவ் கண்ணீர் விட்டான், கயரியடுப்புப் பற்றிக் கொள்ளாததால்! மனைவியையும் தன்னையும் திட்டிக்கொண்டான்; முகுந்தராவையும் ஆபீசையும் திட்டினான். ஒரு ரிக்ஷாவைப் பேசி முகுந்தராவை உட்காரவைத்துக்கொண்டு போய் ஆஸ்பத்திரியில் சேர்த்தான். "இவன் செத்தால் எனக்குச் செய்தியைத் தெரிவியுங்கள்" என்று டாக்டரிடம் சொல்லிவிட்டுப் போய்விட்டான். முகுந்தராவுக்கு இம்முறை ஆஸ்பத்திரி வசதியாக இருந்தது. 'நோய் அதிகமானால், குறையும் வரையில் சுகமாக இங்கேயே இருக்கலாம் அல்லவா?' என்று நினைத்துக்கொண்டான்.

இரண்டு நாட்கள் சென்றபின் கோவிந்தராவ் வந்தான்.

அவன் ஊருக்குக் கடிதம் எழுதினானாம். அம்மா கடிதம் எழுதியிருந்தாள். கொண்டு வந்து கொடுத்தான். முகுந்தராவ் அதைப் படிக்கவில்லை. அக் கடிதத்தில் என்ன இருக்கும் என்பது அவனுக்குத் தெரியும்.

அப்புறம் இரண்டு நாட்களுக்குப் பின் கோவிந்தராவ் வந்தான். அப்பா பணம் அனுப்பினாராம்; கொடுத்து விட்டுப் போனான்.

அன்று மாலையில் நர்ஸ் வந்து, "ஒரு மாதம் வரையில் நீங்கள் இங்கேயே இருக்க வேண்டும்" என்று சொன்னாள். "நியுமோனியாவில் கொண்டு விட்டு விடுமோ என்று பயமாக இருக்கிறது" என்றான்.

"பயம் எதற்கு?" என்றான் முகுந்தராவ்.

நர்ஸ் திகைத்தாள். கண்களை மலரவிழித்து விசித்திரமாகப் பார்த்தாள். அந்தப் பார்வை முகுந்தராவுக்குப் பிடித்தது. சிறுவயதில் சகுந்தலை அப்படித்தான் பார்ப்பாள். ஆஸ்பத்திரியின் விஷயங்கள் பல அவனுக்குத் தெரியும்.

"பெயர் என்ன?" என்று நர்ஸைக் கேட்டான். அவள், "எதற்கு?" என்றாள். அவன், "சொல்லவேண்டாம் பரவாயில்லை" என்றான்.

"அப்படியானால் சொல்லுகிறேன். சரோஜினி......"

பல நாட்களுக்குப் பின், அவள் இந்தத் தொழில் செய்வது விருப்பம் இல்லாதது போல், "இந்தத் தொழிலை ஏன் செய்கிறாய்?" என்று கேட்டான். அவள் ஏக்கத்தோடு பார்த்துவிட்டுப் போய்விட்டாள். நாலு நாட்கள் வரை அவன் அந்தக் கேள்வியை மறந்திருந்தான். ஐந்தாம் நாள் திரும்பவும், "இந்தத் தொழிலை எதற்காகச் செய்கிறாய்?" என்று கேட்டான். அவள் ஏங்கிய பார்வையுடன் போய் விட்டாள். பின்பு தினந்தோறும் கேட்டான். அவள் பதில் சொல்லவில்லை. மறுபடியும் ஒருநாள் கேட்டான். அவளுக்குக் கோபம் வந்தது. "இப்படிக் கேட்டால் இந்த வார்டிலிருந்து ட்யூட்டியை மாற்றிக்கொண்டு விடுவேன்" என்றாள்.

"வேலையையே விட்டுவிடக் கூடாதா?"

அவள் பேசாமல் போய்விட்டாள். மறுநாள் அவள் வரவில்லை. அதற்கு மறுநாளும் வரவில்லை. முகுந்தராவ் அவள் உண்மையில் வேலையை விட்டு விட்டாள் என்று மகிழ்ந்தான். 'அவள் அழகாய் இருக்கிறாள்; மிக நல்லவள்' ஏனோ அவள் இந்தத் தொழிலைச் செய்வது அவனுக்கு இஷ்டம் இல்லை. ஒரு வாரத்துக்குப் பிறகு, ஒருநாள்,

மாலையில் விளக்கேற்றிய பின் அரை மணிநேரம் சென்றதும், நோயாளிகளைக் காண வந்த உறவினர்கள் எல்லோரும் ஏங்கிய முகத்துடன் வார்டிலிருந்து வெளியேறிய பின் அவள் வந்தாள்.

கோவிந்தராவ் போய்விட்டான். அவன் அம்மா எழுதிய கடிதத்தைப் படித்துக் கொண்டிருந்தான். அவள் வந்தாள்.

கடிதத்தைத் தலையணைக்கடியில் வைத்துவிட்டு அவளைப் பார்த்தான்.

கண்ணைத் துடைத்துக்கொண்டு பார்த்தபின் அவனுக்கு அவள் அவள்தானென்று தெரிந்தது. மறுபடியும் வந்துவிட்டாள். ஒரு நிமிஷம் தலை குனிந்திருந்தவள் புன்னகையைத் தருவித்துக்கொண்டு, 'நிச்சயமாக ஜுரம் சரியாகிவிடும், பயப்படாதீர்கள்" என்று சொன்னாள் அவள்.

"பயம் எதற்காக?" என்றான் அவன்.

அவளுக்குக் கவலை உண்டாயிற்று. போய்விட்டாள். அவள் ஏதோ கேட்க வேண்டுமென்று—இந்தக் கடிதம் எங்கிருந்து வந்ததென்று கேட்க—வந்திருந்தாள்.

"வேலையை விடவில்லையா?" என்று கேட்டான் அவன்.

அவள் தலையைக் குனிந்த வண்ணம் போய்விட்டாள். அவன் கண்ணைத் துடைத்துக் கொண்டான். இரவில் தூங்கச் சொல்லுவதற்காக அவள் வந்தபோது, மறுபடியும், "வேலையை விட்டு விடக்கூடாதா?" என்று கேட்டான். அவள் சிரித்தாள். "விட்டு விடுகிறேன். ஆனால், சொல்லுங்கள், நீங்கள் சாப்பாடு போடுவீர்களா?" என்று கேட்டாள்.

அவன் யோசனையில் ஆழ்ந்தான்.

அவள் சிறிது நேரம் ஆவலுடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்து விட்டு, மார்பு வரையில் துப்பட்டியை இழுத்துப் போர்த்துவிட்டுப் போனுள்.

அவன் கூப்பிட்டான். அவள் காதில் வாங்கிக் கொள்ளாமல், "தூங்குங்கள்; அடுத்த அறையில்தான் இருப்பேன். ஏதேனும் தேவைப்பட்டால் கூப்பிடுங்கள்" என்று சொல்லிப் போய்விட்டாள்.

ஐந்து நிமிஷங்கள் கூடச் செல்லவில்லை. அவன் கூப்பிட்டான். அவள் வந்தாள். "வேலையை விட்டு விடக் கூடாதா?" என்று கேட்டான்.

அவள் சிரித்தாள். அதில் கவலை, அழகு, மகிழ்ச்சி எல்லாம் கலந்திருந்தன. "உங்களை இங்கிருந்து வேரோர் ஆஸ்பத்திரிக்கு மாற்றி விடும்படி டாக்டரிடம் சொல்லட்டுமா?"

"எதற்காக?"

"பைத்தியக்கார ஆஸ்பத்திரிக்கு!"

அவனும் சிரித்தான். அவள் போய் விட்டாள். நள்ளிரவில் அவனுக்கு விழிப்பு வந்தது.

எதிர்ப் படுக்கையில் சிறுவன் ஒருவன் அழுது கொண்டிருந்தான். அவனுக்குப் பத்து வயது இருக்கலாம். யாருக்கும் தன் அழுகை கேட்கக் கூடாதென்று அழுது கொண்டிருந்தான். ஆனால் அழுகையை அடக்க முடியவில்லை. எவ்வளவு அடக்கினாலும் விசிப்பு நிற்கவில்லை. இடையிடையில், "அம்மா, அம்மா!" என்று புலம்பினன்.

முகுந்தராவ் முயன்று, சிறிது எழுந்திருந்து, முதுகுக்கு அடியில் தலையணைகளை உயர்த்தி வைத்துப் படுத்துக்கொண்டான். சிறுவனையே உற்றுப் பார்த்துக்

கொண்டிருந்தான். சிறுவன், "அம்மா, அம்மா!" என்று அரற்றிக் கொண்டிருந்தான். முகுந்த ராவுக்குக் கண்ணீர் சுரந்தது. பக்கவாட்டில் திரும்பி ஜன்னல் வழியாகச் சாலையைப் பார்த்தான். சுற்றிலும் பார்த்தான், சிலர் தூங்கிக்கொண்டிருந்தார்கள். சிலர் முனகிக் கொண்டிருந்தார்கள். சிறுவன் அழுதுகொண்டே இருந்தான். ஜன்னலிலிருந்து காணப்பட்ட சாலையில் நிலவு காய்ந்து கொண்டிருந்தது. முகுந்தராவ் பார்த்தான். சிறுவன் 'அம்மா, அம்மா!" என்று அரற்றுவதைக் கேட்டு அவனுக்கும் அம்மாவின் நினைவு வந்தது. 'அம்மா என்ன செய்து கொண்டிருப்பாள்? படுக்கையில் தூக்கம் பிடிக்காமல் கண்ணீர் விடுவாள். கடவுளுக்குப் பிரார்த்தனை செய்து கொண்டிருப்பாள்.'

ஆஸ்பத்திரியிலிருந்து பிள்ளை உடனே வரவேண்டும்; வேலை கிடைக்கவேண்டும்; பிள்ளைக்குக் கல்யாணம் நடக்க வேண்டும்; மருமகள் வரவேண்டும். இப்படி எவ்வளவோ...?

முகுந்தராவ் கண்ணைத் துடைத்துக்கொண்டான்.

சாலையில் மணியடித்துக்கொண்டு ரிக்ஷா ஒன்று சென்றது.

"இன்னும் தூங்கவில்லையா?" என்று பின்னலிருந்து குரல் கேட்டது.

முகுந்தராவ் திரும்பிப் பார்த்தான்.

"தூங்குங்கள், இல்லாவிட்டால் காலையில் டெம்பரேச்சர் மறுபடியும் ஏறிவிடும்."

முகுந்தராவ் மறுபடியும், "இந்த வேலையை விடக் கூடாதா?" என்று கேட்க வாயெடுத்தான். அதற்குள் அவன் எதிர்ப்படுக்கையில் இருந்த சிறுவனிடம் போய்

விட்டாள். முகுந்தராவ் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"ஏனப்பா அழுகிறாய்? என் அப்பா இல்லை? அம்மாவை நினைத்துக்கொண்டாயா? இங்கே பார். நான் தான் அம்மாவாம், செளகரியமாய் இருக்கிறதா?" இப்படிச் சொல்லிச் சிறுவனை மார்போடு அணைத்துக் கொண்டு அவள் சமாதானப்படுத்தினாள். சிறுவன் அழுகையை நிறுத்திவிட்டான்.

அதிக வெளிச்சம் இல்லாத அந்த விளக்கொளியில் முகுந்தராவ் அவள் பக்கமே பார்த்துக்கொண்டிருந்தான். அவள் ஒளி மயமாகக் காட்சியளித்தாள். அம்மாவை நினைத்துக்கொண்டான்.

முதுகெலும்பு வலித்தது. படுத்துக் கொள்ள வேண்டும்போல் இருந்தது. படுத்துக் கொண்டால் அவளைப்பார்க்க முடியாது. அப்படியே சாய்ந்து கொண்டிருந்தான் முகுந்தராவ்.

பத்துப் பதினைந்து நிமிஷங்களில் சிறுவன் தூங்கி விட்டான். அவனைப் படுக்க வைத்துவிட்டு அவள் எழுந்திருந்தாள். முகுந்தராவின் அருகில் வந்தாள்.

"தூக்கம் வரவில்லையா?"

..............................

"என் வேலையைப் பற்றியே யோசித்துக் கொண்டிருக்கிறீர்களா?"

..........................

"சரி, விட்டுவிடுகிறேன். தூங்குகிறீர்களா?"

முகுந்தராவ் பேசினான், "ஒன்று கேட்கிறேன் சொல்வாயா?"

"ஒன்றென்ன? பத்து கேளுங்கள். உங்களுக்குத் தூக்கமாவது வரட்டும்!"

"உனக்குத் தூக்கம் வராதா?"

"சரியான கேள்விதான்!"

"நீ எப்பொழுதாவது பாவம் செய்ததுண்டா?"

அவள் நடுங்கினாள். முகுந்தராவ் பார்த்தான். அவன் கண்ணைத் துடைத்துக்கொள்ளவில்லை. முகுந்தராவ் சாலையைப் பார்த்தான். வெண்ணிலவு மேகத்திரையின் பின் மங்கலாய்த் தெரிந்தது.

"உனக்கு ருக்மிணி கல்யாணப் பாடல்கள் தெரியுமா?"

அவள் ஓசைப்படாமல் அடிமேல் அடி வைத்துப் போய்க் கொண்டிருந்தாள். தலையணைகளைக் கழுத்துக் கடியில் இழுத்துக்கொண்டு முகுந்தராவ் படுத்துக் கொண்டான். அவனுக்குத் தூக்கம் வரவில்லை.

அவள் அறையில் சென்று நாற்காலியில் உட்கார்ந்து கண்ணைத் துடைத்துக்கொண்டாள். அவள் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

"என்ன விந்தையான மனிதர்! பைத்தியமாய் இருக்குமோ! இவரைப் பற்றிய தகவல்களைத் தெரிந்து கொள்ளவேண்டும்." இப்படி நினைக்கும்போதே அவளுக்குப் பொறுமை உண்டாயிற்று. "எனக்கெதற்கு அவையெல்லாம்? தெரிந்து என்ன செய்யப்போகிறேன்? எப்படியும் இன்னும் பத்து நாட்களில் போய்விடப் போகிறார். குடியும் குடித்தனமுமாய் மனைவியிடம் போய்ச் சேருகிறார். அவள் இவரைப் பார்த்து, 'ஐயோ, எப்படி உருமாறி விட்டீர்கள்?' என்று அழப்போகிறாள். பின்பு இவர் என்னை மறந்துவிடப் போகிறார்." அவள் யோசனை நீண்டுகொண்டே போயிற்று. தம்பியின் நினைவு வந்தது. அவனுக்கும் இதே ஊருக்கு மாற்றம் கிடைத்தது சௌகரியம்தான். இவள் வேலையை விட்டு

விடலாம். தம்பியும் மனைவியும் ஜோடியாய் இருக்கும் போது அவர்களுக்கிடையில் தனிக்கட்டையான தான் எப்படி வாழ்க்கை நடத்துவது என்பது அவளுக்கு ஒரு பிரச்சினையாக இருந்தது. தம்பியைப் படிக்கவைத்தது இவள்தான். இல்லாவிட்டால் இவளுக்கு இந்த வேலை செய்யவேண்டிய தேவையே இல்லை. தம்பி வேலையில் சேர்ந்துவிட்டான். ஏனோ இவளை வேலையை விட்டுவிடு என்று சொல்லவில்லை. தான் மணம் செய்துகொண்டான். இவளை, 'நீ கல்யாணம் செய்துகொள்' என்று சொல்லவில்லை. பாவம்! எப்பொழுதாவது... சொல்வானோ என்னமோ! அவளுக்குத் தெரியாது. அவள் மேஜையில் தலையைச் சாய்த்தவண்ணம் யோசித்துக்கொண்டிருந்தாள்.

முகுந்தராவுக்குத் தூக்கம் வரவில்லை.

"இவள் எதற்காக வேலை செய்யவேண்டும்? இவளுடைய கணவன் என்ன நினைப்பான்? எவ்வளவு காலம் இப்படி வாழ்க்கை நடத்துவது? இவளும் இரு குழந்தைகளின் தாய்போல் ஆகிவிடமாட்டாளா? எத்தனை நாள் இப்படி...எத்தனை நாள் இப்படி...என்ன வாழ்க்கை இது?"

மறுநாள் காலையிலேயே முகுந்தராவ் காகிதமும் பென்சிலும் எடுத்துக்கொண்டான். டெம்பரேச்சர் நார்மலில் இருந்தது.

மாலையில் அவள் மகிழ்ச்சியோடு வந்தாள். "உங்களுக்குக் காய்ச்சல் இறங்கிவிட்டது. டெம்பரேச்சர் குறிப்பைப் பார்த்துவிட்டு வந்தேன். நாலே நாட்களில் நீங்கள் இங்கிருந்து குணமடைந்து போகலாம்" என்றாள்.

முகுந்தராவ் சிரித்தான்.

தான் வரைந்த சித்திரத்தை அவளுக்குக் காண்பித்தான். அது, "வேலையை விட்ட நர்ஸ்" சித்திரம்.

அந்தச் சித்திரத்தில் இருந்தது அவளே! பக்கத்தில் யாரோ ஒரு ஆண் பிள்ளை; அவளைச் சுற்றிலும் இரண்டு, மூன்று குழந்தைகள். அவர்களைக் குழந்தைகள் என்று நினைத்துக்கொள்ளவேண்டும்; வெறும் கோடுகள்!

அவளுக்கு மகிழ்ச்சி பொங்கியது. அவனைக் கண்களால் விழுங்குவதுபோல் ஆச்சரியத்துடன் பார்த்து, "நீங்கள் நன்ருகப் படம் வரைகிறீர்களே!" என்ருள்.

அவன் இன்னும் கண்ணை மலர விழித்து, "எனக்கு வீடு இல்லை. குடும்பம் இல்லை, கல்யாணம் ஆகவில்லை, தெரியுமா?" என்ருன்.

அவள் போய்விட்டாள். அந்தச் சித்திரக் காகிதத்தை சாக்கிரதையாக எடுத்துக்கொண்டு, போய்க் கொண்டே, "இது எனக்கு வேண்டும்" என்ருள்.

முகுந்தராவுக்கு ஆச்சரியமாய் இருந்தது. சந்தோஷப்பட்டான். அன்றிரவுலும் எதிர்ப்படுக்கையில் இருந்த சிறுவன் அழுதான். அவள் வந்தாள். "ஏனப்பா அழுகிருய்? நான்தான் உன் அம்மாவென்று நினைத்துக் கொள்" என்று தேற்றினன். முகுந்தராவ் அவளையே பார்த்துக்கொண்டிருந்தான். தினந்தோறும் சிறுவன் அழுதுகொண்டுதான் இருந்தான். மறுநாள் ஆஸ்பத்திரியிலிருந்து அவன் போகவேண்டும். அன்று இரவு, வேண்டுமென்றே அவள் கையை மெதுவாக அழுத்தி விட்டுச் சுகமாகத் தூங்கினன்..இது போன தடவை மழையில் நனைந்த கதை. இப்பொழுது:

முகுந்தராவ் சாலையில் நடந்துகொண்டிருந்தான். பாலம் வந்தது. பாலத்தைத் தாண்டினன். கடை, கண்ணிகள் இல்லை. அரசாங்கக் 'குவாட்டர்'கள் தெரிந்தன. ஒரு பெரிய மழைத்துளி வந்து மேலே விழுந்தது. முகுந்தராவ் ஓட நினைத்தான். நடந்துகொண்டிருந்தான். காற்று 'சிலு, சிலு'வென்று உடலில் தாக்கியது. மேலே

இரண்டு துளிகள் விழுந்தன. முகுந்தராவ் வேகமாக நடந்தான். நாலு துளிகள் விழுந்தன. அது அவனுக்கு இதமாகவே இருந்தது; ஆனாலும், பயமாய் இருந்தது. நடையை இன்னும் துரிதப்படுத்தினான்.

தெரு விளக்குகள் பளிச்சிட்டன. இருட்டி வந்தது. மழை பெய்யத் தயாராய் இருந்தது. ஒரு மரம் தெரிந்தது. அப்பொழுது அதன் கீழே ஒருவன் நின்றுகொண்டிருந்தான். சிறிய தட்டில் ஏதோ தின்பண்டம் விற்பவனைக் காணப்பட்டான். முகுந்தராவ் அவன் அருகில் போய் நின்றான். தூற்றல்கள் விழுந்தன. முகுந்தராவுக்கு எரிச்சலாக வந்தது. எதிரே 'குவார்ட்டர்'கள் தெரிந்தன. அங்கே விளக்குகள் தென்பட்டன. மழை பெய்து கொண்டிருந்தது. அவன் தன் பக்கத்தில் நிற்கும் மனிதன் பக்கம் பார்வையை ஓட்டினான். அவன்மேல் தூற்றல் விழவில்லை. அவன் கையில் இருந்த தட்டைப் பார்த்தான். வறுத்த கடலை இருந்தது. முகுந்தராவ் ஜேபியைத் தடவினான். அவன் பக்கத்தில் இருந்த மனிதன் ஒரு புறமாக ஒதுங்கினான். முகுந்தராவ் கடலையை வாங்கி ஜேபியில் போட்டுக்கொண்டான். இப்பொழுது முகுந்தராவின் மேல் மழைத் துளிகள் விழவில்லை.

பக்கத்தில் நின்ற மனிதன் தட்டின்மேல் கோணிப் பையைப் போர்த்த வண்ணம் 'குவார்ட்டர்'கள் பக்கமாக ஓடினான். முகுந்தராவுக்கு வசதியாக இருந்தது. ஒரு நிமிஷம்; இரண்டு நிமிஷம்; மழை வலுத்தது. முகுந்தராவ் 'குவார்ட்டர்'கள் பக்கம் ஓடினான்.

கடலை விற்பவனை எந்த வீட்டிலும் காணவில்லை. எல்லாக் கதவுகளும் மூடப்பெற்றிருந்தன. முகுந்தராவ் நனைந்தான். மழை பெரிதாயிற்று.

'சட்'டென்று ஒரு வீட்டின் முன் நின்றான். வாயில் திறந்தே இருந்தது. வாயிற்படியில் நின்றான். மழை

அவன்மேல் விழவில்லை. கைக்குட்டையால் தலையைத் துடைத்துக்கொண்டு வீட்டுக்குள்ளே பார்வையைச் செலுத்தினன். விளக்கு எரிந்து கொண்டிருந்தது. சோபாவில் உட்கார்ந்துகொண்டு ஒரு பெண் பத்திரிகை படித்துக்கொண்டிருந்தாள். அவள் இவனைப் பார்த்த பார்வையில் வெறுப்பு நிறைந்திருந்தது. அவள் படித்துக் கொண்டிருந்த கதையைப் பார்த்தான் முகுந்தராவ். என்ன ஆச்சரியம்! அது அவன் எழுதிய கதையே! அவள் திரும்பவும் படிப்பதில் ஈடுபட்டாள். அவன் அவளைப் பார்த்தான். அந்தப் பெண்ணின் முகம் அந்தச் சோகக் கதையைப் படித்ததால் ஏங்கியது. அவள் மன நிலையைப் பார்த்து முகுந்தராவ் மிகவும் மகிழ்ந்தான். அந்தப் பெண் சட்டென்று இவன் பக்கம் திரும்பி, ''பக்கத்தில் வராந்தா இருக்கிறது; அங்கே போய் நில்லுங்கள்'' என்ருள். முகுந்தராவ் திடுக்கிட்டான். அந்தக் கதை அவன் எழுதியதேதான். அவன் நகர முயன்ருன்.

பின்னுலிருந்து, .''ஓகோ, நீங்களா!" என்றது ஒரு குரல். ஒரு கணத்துக்குப்பின் அது, ''மழையில் நனைகிறீர்களே?'' என்றது. அதில் கோபத்தோடு கூடிய பரிவு தொனித்தது.

அவள் சரோஜினி. அப்பொழுதுதான் உள்ளேயிருந்து வந்தாள்.

''உட்காருங்கள், டவல் கொண்டு வருகிறேன். இவள் என் தம்பியின் மனைவிதான்...நீ போய்க் காப்பி கலந்து கொண்டு வாம்மா!'' என்ருள்.

முகுந்தராவ் சுவரோரமாக நின்ருன். சரோஜினியின் தம்பியின் மனைவி உள்ளே சென்ருள். அவள் முகத்தில் ஆச்சரியம், சிறிது வருத்தம், வெட்கம் எல்லாம் கலந்து தோன்றின.

"இவளுக்கு உங்கள் கதைகள் மிகப் பிடித்தவை; அவற்றைத் தினந்தோறும் படிப்பாள்."

முகுந்தராவ் பேசவில்லை.

"நான் வேலையை விட்டுவிட்டேன், தெரியுமா?" அவள் சிரித்தாள்.

"இப்பொழுது சொல்லுங்கள்; என் சாப்பாட்டுக்கு வழி செய்கிறீர்களா?"

முகுந்தராவுக்குச் சந்தோஷமாக இருந்தது. சரோஜினி டவலைக் கொண்டுவந்து கொடுத்துவிட்டு உள்ளே போனாள். முகுந்தராவ் தலை துவட்டிக்கொள்ளவில்லை. அவனுக்குத் தொடர்ந்து பல எண்ணங்கள் தோன்றின. அம்மாவுக்குக் கடிதம் எழுத வேண்டும். இரண்டு நாட்களுக்குமுன் கோவிந்த் சொல்லிய வேலையைப் பற்றி நன்றாய் விசாரிக்கச் சொல்ல வேண்டும். கடிதம்...கடிதம் அம்மாவுக்கு...முகுந்தராவ் சரோஜினி சென்ற அறை வாயிலையே பார்த்தபடி சிறிது நேரம் நின்றான். உள்ளே 'ஸ்டவ்' எரிந்துகொண்டிருந்தது. அந்தப் பெண் வைத்துவிட்டுப் போன பத்திரிகையைப் பார்த்தான். வெளியே பெய்துகொண்டிருந்த மழையைப் பார்த்தான். அவன் ஏதோ யோசித்தான். சரோஜினி வரவில்லை.

முகுந்தராவுக்கு மகிழ்ச்சி பொங்கியது. கோவிந்தராவிடம் போகவேண்டும். அம்மாவுக்குக் கடிதம் எழுத வேண்டும். உள்ளே ஸ்டவ் எரிந்துகொண்டிருந்தது. யாரும் வெளியே வரவில்லை. இரண்டு, மூன்று நிமிஷங்கள் கடக்கும் முன்பே, முகுந்தராவ் நனைந்துகொண்டே சாலையில் நடந்து போய்க்கொண்டிருந்தான்.

தமிழாக்கம் :
**எஸ். கே. சீதாதேவி.**

# 5

# முடிவிலே ஆரம்பம்

ஸ்ரீகாந்தா

நாற்பத்தைந்து வருஷ வாழ்க்கையைத் திரும்பிப் பார்த்தபொழுது, அவன் கண்ணில் பட்டது என்ன?

படுக்கை என்று பேரளவில் சொல்லக்கூடிய கந்தைகளின் மேல் அவனுடைய ஆறு குழந்தைகளும் படுத்துக் கொண்டிருந்தன, (பெரியவளுக்குப் பதினாறு வயதானாலும் அவனுடைய மனத்திற்கு அவள் குழந்தைதானே?) அவர்களுடைய கண்களில் தூக்கப் பொலிவு; மெய்மறந்த உறக்கம். சுவரில் சிம்னி விளக்கு மினுக் மினுக்கென்று, எண்ணெய் குறைந்துவிட்டதால் மங்கிக் கொண்டே எரிந்துகொண்டிருந்தது.

"இவர்களெல்லாம் என்னிடமிருந்து வந்தவர்கள் தானே? இவர்களின் இன்றைய நிலைக்குக் காரண புருஷன் நான்தான் அல்லவா? (ஆனால் ஒருகாலத்தில் இவர்கள் இருக்கவில்லை.)"

ஐந்தேகாலடி உயரமுள்ள அவனுடைய உடலில் அந்தச் சிறிய இதயம் மகிழ்ச்சியால் பூரித்தது. பெருமை அவன் உடல் முழுவதும் பரவியது.

அவன் குச்சிபோன்ற கைகள் சட்டைக்குள் போய், (அந்தச் சட்டை எட்டு நாளைக்கு முன்னே துவைத்தது, வேர்வை நாற்றத்துடன் கூடி இருந்தது.) அவன் கை விரல்கள் உள்ளே கிடந்த எலும்புக்கூட்டின் எலும்புகளை எண்ணின. (அந்தக் கூடு அநேக வருஷங்களாக ஆஸ்த்மாவைத் தாங்கி வந்திருக்கிறது.)

மற்றொரு தடவை ...

ஐந்தேகாலடி உயரமும், எலும்புக் கூடும், குச்சிக் கைகளும் உடைய இரண்டாம் ரக குமாஸ்தாவான இந்தச் சரீரம் ஆறு குழந்தைகளின் பிறப்புக்குக் காரணமாக இருந்தது!

இந்த அடிப்படை உண்மையை உணரும்பொழுது அவன் படுக்கையிலிருந்து எழுந்து ஹாலில் நடந்துகொண்டிருந்தான். (நாற்பத்தைந்து வருஷமான அவனுடைய கடிகாரம் வழி தவறி அடித்துக்கொள்ளத் தொடங்கியது!)

எதிரில் சமையலறை! நூற்றாண்டு விழாக் கொண்டாடியதுபோன்ற அழுக்கும் துருவும் பிடித்திருந்த பழைய டப்பாக்கள்! (அவைகளில் முக்கால் பாகத்துக்குக் காற்றுத்தான் நிறைந்திருந்தது.) கொடியில் உலர்த்தியிருந்த பழைய இரண்டு மடிப் புடவைகள்; சென்ற இரவு, குழந்தைகள் சாப்பிட்டுப் போட்டிருந்த பாத்திரங்கள்.

நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன்பு ஒரு ஜோடி இளம் கண்கள் உலகையே மிகுந்த ஆசையாகப் பார்த்தன. இன்று அந்தக் கண்கள் எங்கே? (அவனுடைய சிந்தனை நாற்பத்தைந்து வருஷங்களுக்கு முன்னே தாண்டியது.)

ஏதோ ஒரு சமயம் வாங்கியிருந்தான். என்ன நிறம் என்று சொல்லமுடியாத, ஒடுங்கி நசுங்கிப்போன டிரங்கு; (அதற்குள் இரண்டு பழைய பொம்மைகள்; கல்யாணத்தில் அவர்களுக்குக் கொடுத்த பொம்மைகள்; மணிச் சரம்; முதல் குழந்தை பிறந்தபொழுது வாங்கிய உல்லன் தொப்பி; அவனுடைய மனைவியின் நைந்து மக்கிப்போன கும்பகோணப் புடவை!) அந்தப் பெட்டியின் பக்கத்தில் மூலையில் நின்றுகொண்டிருந்த கிழிந்த குடை; (வெயிலில் அதைப் பிடித்துக்கொண்டு சென்றால், அதன் வழியே நூறு சூரியனைத் தரிசிக்கலாம்;) எப்பொழுதோ கல்யாணம் நடந்தது என்பதற்குச் சாட்சிபோல உல்லன் கோட்டு கோட் ஸ்டாண்டில் தொங்கிக்கொண்டிருந்தது.

மாமனார் கொடுத்தது அது; அதை ஆசை காட்டி அவர், மென்மையான பெண்ணின் கரத்தையும் அவனிடம் ஒப்பித்துவிட்டார்.

(அந்தக் கோட்டைப் போட்டுக்கொண்டு அவனுடைய கை பிடித்ததுதான் மிச்சம். அந்த மாதிரியே மற்றொன்று தைத்துக்கொள்ளும் யோகம் அவன் தலையில் எழுதவில்லை!)

அந்த மென்மையான கைகளைப் பிடித்ததற்கு...... பரிசாகப் படுத்திருந்த ஆறு.....

அந்த ஹாலின் இரண்டு சுவர்களுக்கிடையே உள்ள தூரம் இரண்டு தொடுவானத்திற்கு இடையே உள்ள தூரத்தைப் போலிருந்தது; அவன் நின்றுகொண்டிருக்கும் தரையே தலை கீழாகிவிட்டது போலிருந்தது.

அவன், அவனுடைய வாழ்க்கை, குடும்பம், அனைத்தும் இராட்டினத்தில் சுற்றி வருவதுபோல் தோன்றியது—

மாமனர் கொடுத்த மற்றொன்று...

அங்கேயே அந்தக் கூடத்தைச் சேர்ந்த அறையில் மூடின கதவுகளின் ஜன்னல் கம்பிக்குப் பின்னல் பரட்டைத் தலையுடன், அலைந்து கலைந்த துணியுடன், தன்னையே விழுங்கும் பார்வையுடன் அவள் பார்க்கும் போது—

தன் மாமனரின் நினைவு மீண்டும் தாக்கியது. "பைத்தியத்தை என் கழுத்தில் கட்டிய பாவி, சண்டாளன்!"

(கல்யாணமானபோது அவள் நன்ருக இருக்கவில்லையா? பைத்தியம் என்று கருதியபிறகும் மூன்று குழந்தைகள் பிறந்திருக்கின்றனவே!)

"எல்லோரும் பாவிகள், சண்டாளர்கள். இவர்கள் எல்லோரும் சேர்ந்தும் எனக்குப் பைத்தியம்பிடிக்காமல் இருப்பது மிகுந்த ஆச்சரியம்."

அவனையே பார்த்துக்கொண்டிருந்த 'பைத்தியத்' தின் கண்களில் மென்மை தோன்றி, கண் கசிந்து ஒரு துளிக் கண்ணீர் சிந்திக் கன்னத்தில் வழிந்தது. பின்னர் பாதித் திறந்த உதடுகளுக்கும் தப்பித்துக்கொண்டு உருண்டோடியது. அப்போது—

"என்னையே பார்த்துச் சிரிக்கிருள் பாவி...இவள் என் தலைமீது உட்கார்ந்திருக்காவிட்டால் நான் வாழ முடியாமற் போயிருப்பேன? என் வழியில் இவள் கால் வைத்ததனல்தான், எனக்கு இந்த நிலை எற்பட்டிருக்கிறது. எல்லாம் பாழ்! எவ்வளவு குழந்தைகள்!" பாதி திறந்த உதடுகள் நன்ருகத் திறந்தன, மலர்ச் சிரிப்பில் இடி ஒலி கேட்டது.

அந்தப் 'பைத்தியம்' சிரித்தாள்; வெறி பிடித்தாற் போலச் சிரித்தாள்; வயிறு வெடிக்கச் சிரித்தாள்; அவன்

உள்ளே இருந்த பெண் சிரித்தாள்; பெண்ணில் இத யம் கெக்கலித்துச் சிரித்தது. அந்தச் சிரிப்பின் ஒலி, ஜன்னல் கம்பிகளைத் துளைத்து நேராக அவன் நெஞ்சில் இடித்தன.

"சிரிக்கிருயா, நன்ருகச் சிரி, சண்டாளி; என்னைப் பார்த்துச் சிரித்துக் கொண்டிருக்கிருய் அல்லவா? என் எலும்பு நெஞ்சைப் பார்த்துச் சிரி! குச்சி போல இருக் கும் உடலைப் பார்த்துச் சிரி!, எப்படியாஞலும் விதை யைப் போலத்தானே மரம்! அப்பனுக்குச் சரியான பெண்!"

"அந்த அப்பனுக்கும் இவளுக்கும் எவ்வளவு பிரியம்! 'அப்பாவைப் பார்க்க வேண்டும், அப்பாவைப் பார்க்க வேண்டும்' என்று எப்பொழுதும் சொல்லிக்கொண்டே இருப்பாள்!

"கல்யாணமானதிலிருந்து ஒரே மாதிரியான பிடிவா தம். ஒரு தடவையாவது அவளுடைய தகப்பனுரைப் பார்க்க அனுப்பவில்லை. ஆமாம். அனுப்பியதே கிடை யாது.

"பெண்ணின் பேச்சை உடனுக்குடன் நான் கேட்டு விடுவேனே? ஒருக்காலும் மாட்டேன்.

"ஒரு நாள், அவளுடைய தகப்பனுருக்கு உடம்பு சரி யாக இல்லை என்று கடிதம் வந்தது; அதைக் காட்டிஞல் ஊருக்குப் போகிறேன் என்று தகராறு செய்வாளோ என்று அந்தக் கடிதத்தை ஒளித்து வைத்துவிட்டேன்; மறுநாள் அவளுடைய தகப்பன் காலமாகிவிட்டான் என் னும் கடிதம் வந்தது. எப்படியோ மனத்தைக் கல்லாக் கிக்கொண்டு, அதையும் ஒளித்து வைத்துவிட்டேன்; (ஆண் பிள்ளைக்கு அத்தனை அதிகாரம் வேண்டாமா?)

"எத்தனையோ நாள் ஆனபிறகு, அந்தக் கடிதங்கள் யாவும் அவள் கைக்குச் சிக்க வேண்டுமா? அன்றி

லிருந்து ஆரம்பமாகிவிட்டது அவளுக்கு என் மேல் வெறுப்பு. சதா என்னையே வெறித்து வெறித்துப் பார்ப்பாள்; கோரமான சிரிப்பு...... பாவி..."

தரையின்மீது போடப்பட்ட பிணம்போல இருந்த அவன் படுக்கை, தன் வீரனைத் தன்னை நோக்கி அழைத்தது. அவனுடைய சோர்ந்த உடலும் கொதிக்கும் மனதும் ஒன்றுடன் ஒன்று போராடிக்கொண்டே படுக்கையில் சென்று விழுந்தன.

(மூன்றாவது குழந்தை பிறந்தபொழுதுதான், அவள் பைத்தியமானாள். அன்றிலிருந்து ஆறாவது குழந்தை பிறக்கும் வரையில் அவளுக்கும் மற்றவர்களுக்கும் வேண்டியதெல்லாம் அவனே செய்துவந்தான். குறித்த வேளைக்கு, அவர்களின் சாப்பாடு, சிற்றுண்டி, துணி எல்லா விஷயங்களையும் அவன் கவனித்துக்கொண்டிருந்தான். 'நான் ஆண்பிள்ளை' என்று மிடுக்குடன் இருந்தவன், சாதாரணப் பெண்களைப்போல் பத்து தேய்த்து, உடம்புத் துணியெல்லாம் கரி பண்ணிக்கொண்டு, காலையிலும் மாலையிலும் செக்கு மாடுபோல உழைத்து, அவர்களின் வயிற்றை நிரப்பி —)

பாழாய்ப் போன வாழ்க்கை—நாசமாய்ப் போன குழந்தைகள், பைத்தியக்கார மனைவி — இந்தச் சௌபாக்கியம் இல்லை என்று யார் அழுதார்கள்? பைத்தியமான பிறகும் இவளுக்குக் குழந்தை பிறப்பது நிற்கவில்லையே! (இவைகளுக்கு எல்லாம் நான்தான் காரணம் என்றும் ஒரு சமயம் சொல்லிக்கொண்டான்.)—

அவனுடைய முகத்தில் தண்ணீர் இறைத்ததுபோல் சிலிர்ப்பு ஏற்பட்டது—அவனுடைய நினைவு வண்டித் தொடர் நின்றது. எங்கிருந்து இந்தத் தண்ணீர் வந்தது என்று இடது கையால் துடைத்துக்கொள்ளும்போது—

அங்கேயே அருகில் படுத்திருந்த அவனுடைய ஆறாவது குழந்தை—மூன்று வருஷத்துப் பாலகன்—

அவன் தொடைகளினிடையே ஒரு சிறு ஊற்று பெருக்கெடுத்ததைப் பார்த்தான்—

"சீ...தூ" என்று ஆரம்பமாகியது அவன் வசைமாரி அவனுடைய நாற்பத்தைந்து வருஷத்திய கால்கள் அந்த மூன்று வருஷத்துக் குழந்தையின் இடுப்பில் உதைத்த பொழுது—

அடுத்து ஒரே அழுகை; சிணுங்கல், ரகளை; அதன் நெஞ்சு உடைந்து போகும் வரையில் அழுகை; அவன் தலை பிளக்கும் போல அழுகை (இந்த நாடகத்தின் ஒவ்வொரு காட்சியும் அவனுக்குத் தினமும் பழகியது தான்).

அங்கேயே படுத்திருந்த தன்னுடைய பெரிய பெண், அந்தக் கலாட்டாவில் தூங்க முடியாதவளாய் எழுந்திருந்து, மூன்று வயதுக் குழந்தையை எடுத்து, தன் இளம் மார்போடு அணைத்துக்கொண்டு தகப்பனை இமை கொட்டாமல் (இந்த நிகழ்ச்சி பலமுறை நிகழ்ந்ததுதான்) பார்த்தாள். பின்னர், தன் பக்கத்தில் சேர்த்து அணைத்துக்கொண்டு படுத்த பொழுது—

யாரோ அவன் கன்னத்தில் அறைந்தது போலவும், பல்லைப் பிடுங்கிக் கையில் கொடுத்தது போலவும், இருந்தது.

அவனைக் கண்டால் எல்லார் கண்களிலும் வெறுப்பா?

நாற்பத்தைந்து வருஷத்தின் எல்லையில் நின்று பின் திரும்பி நின்று பார்த்தபொழுது—

"பைத்தியக்கார மனைவி, ஆறு நோஞ்சலான வற்றிக் கிடந்த குழந்தைகள், வாடகை வீடு, ஆஸ்த்மா நிறைந்த எலும்புக் கூடு, பழைய டப்பாக்கள், அலுங்கிய டிரங்கு, கிழிந்த குடை."

எல்லோரும் அவனைப் பார்த்தார்கள்; அலட்சியத்துடன் பார்த்தார்கள்; அவர்கள் கண்ணில் கேலி; கிண்டல்; ஏளனம்.

அவன் உடம்பு பரபரவென்றது. தலைமயிரைப் பிய்த்துக் கொண்டான். மத்தள ஒலி போல் அவன் ஆஸ்த்மா நெஞ்சிலிருந்து கொர், கொர் என்று சத்தம் வந்தது—

—தான் இன்னும் பிழைத்திருக்கக் கூடாது. என்ற எண்ணம் அவனுக்கு மேலோங்கியது.

பிறகு இந்தக் குழந்தைகளின் கதி? மரம் வைத்தவன் தண்ணீர்ஊற்றுமற் போய் விடுவானு?

அவள் கதி?—அவளுடைய தகப்பனுரைப் போலவே காதியற்றுச் சாகட்டும்!

தான் சாகவேண்டும்; கண்டிப்பாகச் செத்துப்போக வேண்டும்.

ஆனுல் எப்படிச் சாவது?

எப்படியோ? சாகிற வழிக்கு வழிகாட்டி எதற்கு?

கயிறு, ஆறு, விஷம் ஏதோ ஒன்று—கடைசியாக எதுவும் சிக்கவில்லை என்றுல் பிளேடின் துண்டு! (அதைக் கொண்டு உயிரை விட்டவர் இல்லையா?) ஆனுல் எப்படியாவது சாக வேண்டும். அதுவும் பொழுது விடிவதற்கு முன்னுல்—

சாவின் வழியை நோக்கி, திட்டம் போடும்போது—

குழந்தையைப் பக்கத்தில் படுக்க வைத்துக் கொண்டிருந்த முதல் பெண், என்னவோ தூக்கத்தில் உளறிக்கொண்டு திரும்பிப் புரண்டு படுத்தாள். அப்படிப் புரண்டதால், மார்பின்மேல் இருந்த மேலாக்கு, சற்றே சரிந்தது, புடவையின் ஓரம் முக்கால் கால்வரை மூட மறந்துவிட்டது—

அவன் பார்த்தான். இவள் குழந்தை அல்ல; வயசுப் பெண் ஆகிக்கொண்டிருக்கிறள் என்றது மனது ... மறு கணமே, தான் அந்தப் பெண்ணின் தகப்பன் என்னும் பேருண்மை எழுந்து, நொடி நேர நினைவை எண்ணி மலையளவு வெட்கப்பட்டான்—

யாரோ சிரித்த மாதிரி இருந்தது. அவன் திரும்பிப் பார்த்தான். ஜன்னல் கம்பியைப் பிடித்துக்கொண்டு தன்னையே அவள் பார்த்துச் சிரித்தபடியே நின்றிருந்தாள்.

பைத்தியம் சிரித்தாள்; அவளில் இருந்த பெண் சிரித்தாள்; பெண்ணின் இதய மூலையிலிருந்து சிரிப்பின் அலை எழுந்து, இரும்புக் கம்பிகளைத் தாண்டி வந்த போது—

அவன் நெஞ்சு...துணுக்கென்றது. தன் மனத்தில் நிகழ்ந்த போராட்டம், பேச்சு, கண்டிப்பாக அவளுக்குக் கேட்டிருக்குமோ? அவள் கண்ணில், ஏளனச் சிரிப்பு.

அவள் திரும்பவும் சிரித்தாள் ... மீண்டும் மீண்டும் அவள் சிரித்தாள் . அவளுடைய அந்தச் சிரிப்பின் ஊற்று ஜன்னல் கம்பிகளைத் தாண்டி, அவனுடைய எலும்புக் கூட்டு நெஞ்சில் உறங்கிக்கொண்டிருந்த நாகப்பாம்புக்கு மகுடி ஊதிய நேரத்தில்—

அவன் எழுந்தான்...ஓடினன். அவளை நோக்கி ஓடினன் ... (ஐந்தே காலடியின் எலும்புக்கூடு ஆஸ்த்மா நெஞ்சு, குச்சிக் கைகால்கள், ஆறு குழந்தைகளைச் சிருஷ்டித்தவன்—அவர்களை ஈன்ற தாயை நோக்கி ரோஷத்துடன் போனன்.)

“உன்னை முதலில் சாகடித்து, பிறகு நான் சாகிறேன் பாவி...”

மூடிக்கிடந்த கதவு திறந்தது; உள்ளிருந்த பெண் உருவம் மீண்டும் சிரித்தது; ஆணின் கோபக் கைக்குச்

சிக்கிற்று: பெண்ணின் வழவழப்பான உடம்பு வழுக்கியது. ... (அடுத்த நிகழ்ந்தது விளக்க முடியாதது)

* * *

கடைசிப் பாதையை நோக்கிச் செல்லும் பிரயாணிக்கு, ஆரம்பமே வழி காட்டியது போலாயிற்று! "என் தோளில் இருப்பது என்ன? பாவி...த்தூ" என்று அந்தப் பெண்ணைத் தூரத் தள்ளியபொழுது—தரையில் விழுந்த அந்தப் பெண் எதிரில் நின்ற ஆணைப் பார்த்துச் சிரித்தது.

அவள் கண்களில் உலகத்தின் மென்மையெல்லாம் நிரம்பியது. கண் இமைகளுக் கிடையே ததும்பிய நீரினூடே அவன் கண்டதென்ன?

'புதிய விளக்கின் தாலாட்டு'

தமிழாக்கம்:

கமலா தாமோதரன்

# 6

# நான்கு முழ நிலம்

'சதுரங்கா'

தபால்காரன், "மணியார்டர், சார்" என்று கூப்பிட்டது அவனுக்குக் கேட்கவில்லை. அவனுடைய மனம் விரித்த காகிதச்சுருள் போல இருந்தது. வீட்டில் மனைவி இல்லை; இதயத்தில் தெம்பில்லை. வழக்குக்கட்டுகளை மேஜைமேல் பரப்பிக்கொண்டே அவன் சிந்தனைச் சக்கரத்தில் சுழன்று கொண்டிருந்தான். 'சனியன் பிடித்த வேலை; இதற்கு என்றுதான் முடிவு?' என்று வெறுப்புடன் அவன் உள் மனம் குமுறியது. வழக்கு, விவாகாரம் குற்றம்......இந்த வழக்குகளுக்கு முற்றுப்புள்ளியே கிடையாதா? விடிந்து விட்டால் கோர்ட், கச்சேரி; இப்படி வழக்குகளிலேயே

வாழ்நாள் முழுவதையும் கழிப்பதென்றால் வாழ்ந்துதான் என்ன சுகம்? இப்படி அவனுடைய உள் மனம் வாதாடிக் கொண்டிருந்தது.

"மணியார்டர் சார்—"

நான்கு முழ நிலம்...நாலேநாலு முழ நிலத்துக்காக எவ்வளவு கலகங்கள் என்ன என்ன அக்கிரமங்கள் நடக்கின்றன? யோக்கியனின் நல்ல குணங்கள் கருகி, பொறாமை விளைகிறது.

நீதிமன்றத்துக்கு வரும் வழக்குகளில் நிலம் சம்பந்தமானதே மிகுதி. நிலம்...நிலம்..நிலம்...என்ன பைத்தியம்? நிலப் பைத்தியம்.

"மணியார்டர் சார்!"

இப்பொழுது தபால்காரனின் குரல் தெளிவாகக் கேட்டது. உட்கார்ந்தபடியே குனிந்திருந்த முதுகு நிமிர்ந்தது.

"மணியார்டர்!...எங்கிருந்து வந்திருக்கிறது இந்த மணியார்டர்?" என்று கேட்டுக்கொண்டே எழுந்து கதவைத் திறந்தான்.

முகத்தைச் சுளித்துக்கொண்டே, தபால்காரன் மணியார்டர் பாரத்தை அவன் முன்னால் பிடித்துக் கொண்டு, "அம்மா அவர்கள் இருக்கிறார்களா, சார்?" என்றான்.

கனவுலகில் நடப்பது போல் இருந்தது. தன் மனைவிக்கு மணியார்டர்! அவளுக்கு எங்கிருந்து வந்திருக்கும்?

"இல்லையா சார்?"

"இல்லை. அவள் பிறந்தவீட்டிற்குப் போயிருக்கிறாள்."

"[illegible] சார்?"

"நாளை வருகிறேன் என்று கடிதம் வரைந்திருக்கிறுளப்பா."

"வருவது நிச்சயமா, சார்?"

"கண்டிப்பாக வந்து விடுவாள்."

"அப்படியானுல் இதை நாளை மறுதினம் கொண்டு வருகிறேன் சார்."

"ஆகட்டும்" என்று சொன்னவன், தபால்காரன் நான்கு அடி வைப்பதற்குள், என்னவோ யோசித்துக் கொண்டு, கை தட்டி, "போஸ்ட்மேன்" என்று கூப்பிட்டான்.

தபால்காரன் மறுபடியும் முகத்தைச் சிடுத்துக் கொண்டே வந்தான்.

"எங்கே, அந்த மணியார்டர் பாரத்தை இங்கே கொடு. அது எங்கிருந்து வந்திருக்கிறது என்று படித்துப் பார்த்துக் கொள்கிறேன்."

தபால்காரன் மணியார்டர் பாரத்தை வெறுப்புடனே எடுத்துக் கொடுத்தான்.

பாரத்தின் எழுத்துக்களின்மேல் அவன் சூட்சுமாகப் பார்வையை ஓடவிட்டான். அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. தன் மனைவிக்கு மணியார்டர் வந்திருக்கிறது என்பதில் அவனுக்கு வியப்பு. அந்த மணியார்டர் எங்கிருந்து எதற்காக வந்திருக்கிறது என்று தெரிந்ததும் அவன் மௌனியானுன்.

சிந்தனை அலைகள் அவனை மேலே மேலே எடுத்துக் கொண்டுபோய்ச் சிகரத்தில் எறிந்தது போல் ஆயிற்று.

மனைவிக்கு மணியார்டர்! 200 ரூபாய்க்கு மணியார்டர்! அதுவும் அவள் எழுதிய ஒரு சிறு கதைக்காக!

தபால்காரன் புறப்பட்டுச் சென்று வெகு நாழிகை கழிந்த போதிலும், அவன் அப்படியே நிலைத்து நின்று

விட்டான்.....ஒரு கதைக்கு 200 ரூபாய்! அதுவும் கன்னட மொழியில்.......

கோர்ட்டில் ஐந்து வழக்குகளை நட... அவ்வளவு பணம் தேருதே! காலம் வெகு வேகமாக மாறிக்கொண்டிருக்கிறது. சில வருஷங்களுக்கு முன்னுல் கன்னடம் தாயிலாக்குழந்தை. அதைக் கவனிப்பவர்களே கிடையாது. ஒரு பத்திரிகை ஆயிரம் பிரதிகள் விற்க வேண்டுமானுல் ஏழெட்டு வருடங்களாவது ஆகும். ஆனுல் இன்று? எடுத்த எடுப்பிலேயே நான்கைந்து ஆயிரம் பிரதிகள்அச்சிடும் முயற்சியில் கன்னடப் பிரசுரகர்த்தர்கள் ஈடுபடுகிருர்களாம்! அவ்வளவு புத்தகங்களும் வெளி வந்த ஓரிரண்டு ஆண்டுகளில் விற்பனையாகி விடுகின்றனவாம்!...இதற்கு முன்பும் கதைப் போட்டிகள் நடந்தன. பாராட்டுகள் தாம் முதல் பரிசாகத் தரப்பட்டன. ஆனுல் இன்று நடத்தப்படும் போட்டிகளில், கதைகளுக்கு நூற்றுக்கணக்கான ரூபாய் அன்பளிப்பு அளிக்கும் தகுதி பத்திரிகைகளுக்கு வந்துள்ளது.

யாரோ கட்சிக்காரர் வந்தார். அவருடைய விவகாரத்தைக் கேட்டுத் தெரிந்து, அவருக்குப் பேச வேண்டிய வார்த்தைகளைப் பேசி, அவரை அனுப்பிக் கொடுத்து, பாக்கியாக இருந்த இன்னும் சில ரிகார்டுகளைப் பரிசீலித்துச் சாப்பிட எழுந்தான். ஹோட்டல் சாப்பாடு ஏனே ருசிக்கவில்லை. மறுநாளே மனைவி வரப் போகிருள் என்ற நினைவே இதற்குக் காரணமாக இருக்கலாம். இருந்தும் எப்படியோ சாப்பாட்டை முடித்துப் படுக்கும் அறைக்குச் சென்ருன்.

அன்று கோர்ட்டுக்கு லீவ்; எனவே சற்று ஓய்விருந்தது கட்டிலின் மேல் படுத்து உருண்டான்; வேறொரு வேலையும் இல்லாத மனது சிந்தனைக் கடலில் நீந்தத் தொடங்கியது. தன் மனைவி பெற்ற அன்பளிப்பு.

கதைக்கு அவள் பெற்ற முதற்பரிசு. அவன் உள்ளம் மது நிரம்பிய மலரைப் போலாயிற்று. சிந்தனைக் குதிரை பறந்தது. வெகு நாளைக்கு முன்பு கல்யாணம் நடந்த புதிதில் அவர்கள் இருவருக்கும் இடையே நடந்த ஒரு நிகழ்ச்சி நினைவுக்கு வந்தது.

ஒருநாள் பிற்பகல்—இதேமாதிரி கோர்ட்டுக்கு விடுமுறை. சாப்பாடு முடிந்ததும் அவன் தூங்கப் போனன். அவளும் தன் மாதிரியே தூங்கியிருப்பாள் என்று எண்ணினன். ஆனல் தூக்கத்தின் அரவணைப்பிலிருந்து அவன் விடுபட்டு எழுந்தபொழுது அவள் அருகே இல்லாதது கண்டு வியந்தான். சப்தம் செய்யாமல் வீடு முழுவதும் தேடினன். அவள் தன் அறையில் என்னவோ எழுதுவதில் மெய்ம்மறந்திருந்தாள். அவன் நின்று ஒரு கணம் யோசித்தான். அவள் தூங்காமல் எதை அவ்வளவு ஆர்வமாக எழுதிக்கொண்டிருக்க முடியும்? ...... தந்தைக்கோ, அண்ணனுக்கோ கடிதம் எழுதிக்கொண்டிருக்கிருளோ?

அவன் இருமின குரல் கேட்டு, அவள் திரும்பிப் பார்த்தாள். சமாதியிலிருந்து எழுந்த ஞானியின் பார்வையைப்போல இருந்தது அவள் பார்வை.

அவன் அருகே சென்று, "நீ எங்கே சென்றிருக்கிருயோ என்று திகைத்துவிட்டேன்" என்று சொல்லிச் சிரித்தான். அவள் கண்ணும் சிரித்தது.

"நீங்கள் சரியான ஆள்தான். நான் எங்கே போவேன்?"

"நீ என்ன எழுதிக்கொண்டிருக்கிருய்? கடிதமோ?"

"ஆமாம். காதல் கடிதம்" என்று சொல்லித் துடுக்குத்தனத்தைக் கண்ணிலிருந்து இறைத்தாள்.

"காதல் கடிதம்!—யாருக்கு என்று கேட்கலாமா?" என்று அவளைச் சீண்டி விளையாடினன்.

"யாருக்கோ?" என்றாள். கண்டும் காணாததுபோல ஒரு சிரிப்பு. அப்போது அவள் உடல் தென்றல் காற்றில் தாமரைத் தண்டுபோலக் குலுங்கி அசைந்தாடியது.

அவளைச் சீண்டி விளையாடுவது அவனுக்கு எப்பொழுதும் பிரியம். என்ன கடிதம் எழுதுகிறாளோ என்று மேஜைமேல் எம்பிப் பார்த்தான்.

"என்னது?... காதல் கடிதம்— சிறு கதை— ஓ! கதை எழுதிக்கொண்டிருக்கிறாயா! எப்பொழுதிருந்து இந்தப் பைத்தியம்?"

"ஏன் பைத்தியம் என்று சொல்லுகிறீர்கள்? கதை எழுதுவது பைத்தியமா?"

"ஒருவகையில் அது பைத்தியம்தான்."

"எப்படி?"

"கதை என்றால் கட்டுக்கதை. பொய். அதனால் யாருக்கு என்ன பயன்? உபயோகமான ஒரு காரியம் செய்யவேண்டும்."

"இல்லாவிட்டால் கூடாது என்பது உங்கள் எண்ணமா?"

"ஆமாம். பயனற்ற காரியத்தைச் செய்வதில் எனக்கு விருப்பமில்லை."

"பேஷ், பேஷ்! வக்கீலைப்போல யுக்தியாகப் பேசுகிறீர்களே. பரவாயில்லை!"

"பார்த்தாயா? என் வார்த்தையச் சரியாக நீ அர்த்தம் செய்துகொள்ளவில்லை. கதைக்கும் வாழ்க்கைக்கும் உண்மையான சம்பந்தம் இருக்க வேண்டாமா? நீயே சொல். பிரபலமாக இப்பொழுது பிரசுரமாகி வரும் கதைகள், கன்னட மக்களின் வாழ்க்கையைச் சிறிதாவது பிரதிபலிக்கின்றனவா?... அதற்காகத்தான் அப்படி வற்

புறுத்திச் சொன்னேன்... அவ்வளவுதான்... என் ராணி கதை எழுதுகிருள் என்ருல் எனக்கு மகிழ்ச்சி இல்லையா? உண்மையில் நான் பெருமையில் பூரித்துப் போகிறேன்."

அவனுடைய ராணி அந்த வார்த்தையைக் கேட்டுப் பூரித்துப் போனுள்.

"ஆனல் என் ராணி இந்தமாதிரி கற்பனைக் கதைகளை எழுதினல் எனக்குப் பிடிக்காது; வாழ்க்கையைப் பார்த்து எழுதவேண்டும். அப்பொழுது கதை சோடை போகாது; நாதமில்லா குழலைப்போல இருக்காது—இது தான் என் கொள்கை."

"வரும் நவம்பர் மாதப் பத்திரிகையிலிருந்து செய்கிறேன்" என்று அவள் சொல்லும்போது அவள் மேலுதட்டின் ஓரம் புன்சிரிப்பினல் வில்லைப்போல் மேலெழுந்து வளைந்தது.

இந்த நிகழ்ச்சி நடந்தபிறகு அவனுடைய காலத்தையும் புத்தியையும் வக்கீல் தொழில் பூரணமாகக் கவர்ந்து கொண்டு விட்டது. மனைவி தொடர்ந்து கதைகள் எழுதிக்கொண்டிருக்கிருளா? எதைக் குறித்து எழுதுகிருள்? அவள் எழுதும் கதைகளில் ஏதாவது புதுமையும் தத்துவமும் அடங்கியிருக்கின்றனவா? இவற்றைப்பற்றி எல்லாம் யோசிக்க அவனுக்கு ஓய்வே இல்லை.

யோசித்து, யோசித்து, அவன் படுக்கையின் ஒரு பக்கத்திலிருந்து இன்னொரு பக்கத்துக்குப் புரண்டான். என்ன செய்தாலும் அவனுக்குத் தூக்கமே வரவில்லை. கடைசியில் சலிப்படைந்தவனுய், ஏதாவது புத்தகத்தைப் படிப்பதென்று எழுந்து புத்தக அலமாரியிலிருந்து தனக்கு விருப்பமான ஜீன் கிரிஸ்டோபே என்னும் நாவலை எடுத்துக்கொண்டு அருகிலிருந்த சாய்வு நாற்காலியில் சாய்ந்தான்.

அந்தப் புத்தகத்தின் பக்கங்களைப் புரட்டிப் பார்த்த போது, உள்ளே மடித்து வைத்திருந்த சில தாள்கள் தெரிந்தன. குதூகலத்துடன் அந்தத் தாள்களைப் பிரித்துப் பார்த்தான். தன் மனைவி எழுதிய ஒரு கதை யின் கையெழுத்துப் பிரதி அது. கதையின் பெயர்— 'நாலு முழ நிலம்.'

அவள் எழுதியிருந்த கதையைச் சுவாரசியத்துடன் படிக்க ஆரம்பித்தான்.

வைகாசி மாதத்தின் கொளுத்தும் வெயில். வெயி லின் ஒளிக் கற்றை, மரத்தின் இலைகளைப் பச்சைப் பழங் களாக்கிக் கொண்டிருந்தது. அந்த வேளையில் காளிங் கையா அழுத்தமாக உழுகிறான். பக்கத்திலேயே அவனை அநுசரித்து அவன் சிறிய நிழல் விடாமல் பின் சென்றுகொண்டிருந்தது. காவேரி ஸ்நானம்போல அவன் உடல் முழுதும் வேர்வை. ஏர் நிதானமாக— அழுத்தமாக— நிலத்தில் சால் ஏற்படுத்திக்கொண்டு போகிறது. ஏரின் நுகத்தில் கட்டியிருக்கும் வெள்ளை நிற எருதுகள்; அவனுடைய கருமையான உடல்; உடலைச் சுற்றிக் கிடக்கும் வெள்ளைத் துண்டு; உழுத மக்கின நீல நிற மண்; இப்படிப் பல பல வண்ணங்கள் சிதறிய ஓவி யம்போல இருந்தது அந்தக் காட்சி.

தொலைவிலிருந்து பார்ப்பவர்களுக்கு அது ஓவிய மாகவே தோற்றும். மற்றவர்களுக்கு அது ரம்மியமான காட்சியாக இருக்கலாம். ஏரிலே நிலத்தை உழும் காளிங்கையனுக்கு மட்டும் அந்தக் காட்சியின் அழகை ரசிக்க முடியவில்லை. அவன் கேவலம் உழும் யந்திர மாகவே இருந்தான். சூரியன் உதிப்பதற்கு முன்னமே எழுந்து கலப்பையை ஏரில் பூட்டினால் வயலிலிருந்து அவன் மீண்டும் வீடு திரும்பச் சாயங்காலமாகிவிடும்.

காளிங்கையன் உழுதுகொண்டே இருந்தான். அவன் மனம் சாதாரணமாகத் தண்ணீரில்லாத மண்

பாத்திரம்போல இருக்கும். இன்றோ அந்தப் பாத்திரத்தில் கவலை என்னும் சிறிய கல் விழுந்து துவாரம் செய்திருக்கிறது. அவனுடைய கவலைக்குக் காரணம் நாலு முழ நிலம்.

நான்கு முழ நிலம்!

கேவலம் நான்கே நான்கு முழ நிலம்! காளிங்கையனின் கிழக் கண்களில் வெளிப்படையாகத் தெரியாத பீதி ஒன்று குடி கொண்டிருந்தது.

தான் சிறுவனாக இருந்தபோது ஹரிகதை தாசன் ஒருவன் நேரேஹள்ளி என்னும் கிராமத்தில் கதை சொல்லிக்கொண்டிருந்தான்.

''பூமியின்மேல் விபரீதமாக ஆசைப்படாதே. அதனால்தான் குரு வம்சமே நாசமடைந்தது.''

இதுதான் அந்த ஹரிகதை தாசன் பாடிய பாடலின் அடி.

அதாவது என்ன? ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா ஐந்தே ஐந்து கிராமங்களைப் பாண்டவர்களுக்கு விட்டுக்கொடுத்தாலும் திருப்தியே என்று வாதாடவில்லையா? அப்பொழுதும் விவேகம் இல்லாத துரியோதனன் கர்வத்துடன், 'ஐந்து கிராமங்களின் வார்த்தை அப்படியே இருக்கட்டும்; ஐந்தடி நிலம்கூடப் பாண்டவர்களுக்குக் கொடுக்க மாட்டேன்' என்று பிடிவாதம் பிடித்து சர்வ நாசத்தைத் தேடிக்கொள்ளவில்லையா?

அதைப் போலத்தான் தன் வாழ்க்கையும் அமைந்து விட்டதோ என்று எண்ணினான். ஆமாம் கேவலம், நாலு முழ நிலத்துக்காக, நாலே நாலு முழ நிலத்துக்காக அவன் போராட வேண்டியிருந்தது.

கௌரவர்களின் கதை என்னவோ என்றைக்கோ முடிந்துவிட்டது. ஆனால் தன் கதை? இதன் போக்கும்,

முடிவும் எப்படியோ? தான் செய்த சிறு காரியம் எந்தத் தண்டனைக்குக் கொண்டுபோய் விடுமோ?

காளிங்கையன் உழுதுகொண்டே இருந்தான். ஏர் முன்னால் போகப் போக, நிலம் வாய் திறந்ததுபோல, இரண்டு பக்கமும் சிவப்பு மண் குவிந்துகொண்டே இருந்தது. அவன் அதைப் பார்த்துக்கொண்டே நடந்தான். குங்குமம் போன்ற செக்கச் சிவந்த அந்த மண்! அவன் கண்ணுக்கு அது எத்தனை இதமாக இருந்தது. அதையே உற்றுப் பார்த்துக்கொண்டு ஒவ்வொரு தடவை தன் வீட்டையும் உலகத்தையுமே அவன் மறந்துவிடுவது உண்டு.

நாலு முழ நிலம்! இன்னொருவனுச் சேர்ந்த நிலம். அதற்குத்தான் அவன் ஆசைப்பட்டான், இன்னொருவனுடைய மனைவியின்மேல் ஆசை கொள்வதைப்போல. அகல்யையின்மேல் காதல் கொண்ட இந்திரனுக்கு என்ன நேர்ந்தது?

பக்கத்து நிலம் தேவப்பனுடையது. அதில்தான் நாலு முழ நிலத்தைப் பலாத்காரமாகத் தன் நிலத்துடன் சேர்த்துக்கொண்டுவிட்டான். தேவப்பனுக்கு இருந்த ஜமீன்— பட்டா— முழுவதும் மொத்தம் மூன்று ஏக்கரும் சில்லறையும். ஏறக்குறையத் தன் பட்டாவும் அவ்வளவு தான் இருக்கும்.

தேவப்பனுக்கும் காளிங்கையனுக்கும் வாய்ச் சண்டை முற்றியது. வசவு மழை பொழிந்தான் தேவப்பன். கடைசியில் தாங்க முடியாமல், இறக்கத்தில் பிரேக் கெட்டுப்போன மோட்டார்போலச் சண்டைக்கு வந்தான். இருவர் கைகளும் பிணைந்தன, (பீம— துரியோதன யுத்தம் போல). சண்டை கடுமையாகியது. பீமனைப் போன்ற காளிங்கையனுக்கு வெற்றி கிடைத்தது.

கிராமப் பஞ்சாயத்துக்குத் தேவப்பன் புகார் கொடுத்தான். நம் கிராமத்தில் பஞ்சாயத்தின் நியாயத்தைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? நியாயம் காளிங்கையன் பக்கமே சரிந்தது. தேவப்பன் சற்றும் மசியவில்லை. அமல்தாருக்குப் புகார் கொடுத்தான்.

அழைப்பின் மேல் மோஜும்தாரர் வயலுக்கு அளக்க வந்தார். அதற்கு முன்னே மோஜும்தாரரை (கிராம அலுவலர்) வீட்டிற்கு அழைத்து உப்புமாவையும் காப்பியையும் தந்து ஐந்து ரூபாயும் நிவேதனமாகத் தந்திருந்தான் காளிங்கையன். கேட்க வேண்டுமா? இந்த விசேஷப் பூஜையினால் திருப்தியான மோஜும்தார், காளிங்கையன் சேர்த்திருந்த நாலு முழ நிலத்தையும் அவன் பட்டாவில் சேர்த்து, கல் நட்டுவிட்டான்...

காளிங்கையன் உழுதுகொண்டே இருந்தான். மேலே எரிக்கும் சூரியன்; உள்ளே கொந்தளிக்கும் எரிமலை போன்ற உள்ளம்.

...கல் நட்டுவிட்டார் மோஜும்தாரர். தேவப்பன் திகைத்துவிட்டான். சூரிய சந்திரர் போல நிலையானது என்று எண்ணியிருந்த நிலம் அவன் கைவிட்டுப் போய் விட்டது. நியாயம் அப்படி ஆகிவிட்டது. பிறகு என்ன செய்வது? எங்கும் சூனியம். தேவப்பன் அதே கவலையில் படுக்கையில் விழுந்தான்...

...காளிங்கையன் உழுதுகொண்டே இருந்தான். அவன் கால்கள் மெல்ல நடுங்கின...

படுக்கையில் படுத்த தேவப்பன் எழுந்திருக்கவே இல்லை.

...காளிங்கையனின் கால்கள் முளையடித்ததைப் போல மேலே நகரவே இல்லை. அவன் கண்கள் இருள் சூழ்ந்ததுபோல மங்கியது. தலை கிர்ரென்று சுற்றியது.

—"என் நிலத்தை எடுத்துக்கொண்டு விட்டாயா?... அந்த மண்ணில் என் ரத்தத்தைச் சிந்தியிருக்கிறேனடா? பாவி தெய்வம் உனக்கு நியாயம் வழங்குவானு? என் சொத்தைக் கவர்ந்து என் வாழ்க்கையையே குலைத்துவிட்டாயே! இருக்கட்டும்! என் மகன் நிச்சயமாகப் பழி தீர்த்துக் கொள்வான். நினைவில் வைத்திரு. ஜாக்கிரதை... வென்றேன் என்று நினைக்காதே! உன் கதை முடிந்ததே தவிர என் கதை முடியவில்லை தெரிந்ததா?..."

இறந்துபோன தேவப்பனின் குரலேதான் அது. சந்தேகமே இல்லை. கிழவன் காளிங்கையா கிடு கிடு என்று நடுங்க ஆரம்பித்தான். அவனுடைய கண்கள் பயத்துடன், பக்கத்து வயலில் உழுதுகொண்டிருந்த தேவப்பனின் மகனைப் பார்த்தது. நான் கிழவனுகிவிட்டேன்; எனக்குக் குழந்தைகள் இல்லை. தேவப்பனின் மகன் இப்பொழுது பலவான். அவன் நிச்சயம் வைராக்கியத்துடன் என்னைப் பழி வாங்கிவிடுவான். அந்தப் பட்டாவை நான் செய்தது போலவே, அநியாயமாக என்னிடமிருந்து பறித்து விடுவான்; வசப்படுத்திக்கொண்டே விடுவான். என் சக்தி— காரியம்— முடிந்துவிட்டது; எல்லாம் முடிந்துவிட்டது. அந்த மோஜும்தாரருக்கு அநியாயமாக ஐந்து ரூபாய் தந்தேனே? ஐயோ, கெட்டேன், கெட்டேன்.

காளிங்கையன் தலை சுற்றித் தரையில் விழுந்ததைப் பார்த்த தேவப்பனின் மகன், ஏர் உழுவதை நிறுத்திவிட்டு, வரப்பைத் தாண்டி ஓடி வந்தான். காளிங்கையனுக்கு பிரக்ஞை நழுவிக்கொண்டிருந்தது. உடனே விரைவாக ஓடிப்போய் நீரைக் கொண்டுவந்து வேண்டிய பணிவிடை செய்தான், தேவப்பனின் மகன். சிறிது நாழிகை கழிந்ததும், காளிங்கையன் மெல்லக் கண் விழித்தான். தேவப்பனின் மகனுடைய முகத்தைப்

பார்த்ததும் யமனைக் கண்டதுபோல மிரண்டான். திறந்த கண் சட்டென்று மூடியது. உதடுகள், "நான்கு முழ நிலம், நான்கு முழ நிலம், கோபம் கொள்ளாதே, என் வாழ்க்கையில் அந்தத் தவறான காரியத்தைச் செய்து விட்டேன், மன்னித்துக்கொள்ளப்பா" என்று படிப்படியாக அவன் உதடுகள் ஈனஸ்வரத்தில் ஒலித்தன.

தேவப்பனின் மகனுக்குக் காளிங்கையனுடைய வார்த்தைகளுக்குப் பொருள் விளங்கவில்லை. அவன் அர்த்தம் விளங்காமல் விழித்தான். காளிங்கையனின் மூடிய கண்கள் திறக்கவே இல்லை.

—கதையைப் படித்த வக்கீல் தலை நிமிர்ந்தான். ஆனால் ஏனோ அந்தக் கையெழுத்தைப் பார்க்கும்போது அவனுக்கு ஒரு சந்தேகம் தோன்றியது. கூர்மையாகக் கையெழுத்துப் பிரதியைப் பார்த்தான். அது ஆடவருடைய கையெழுத்து என்று நன்றாகத் தெரிந்தது. கதையின் கடைசிப் பக்கத்தில் 'சஞ்சீவி' என்று சிறிய எழுத்தில் எழுதியிருந்தது. அதை மசியால் நன்றாக யாரோ அடித்திருந்தார்கள். வக்கீலின் சந்தேகம் உறுதியாகிவிட்டது... 'சஞ்சீவி' தன் மனைவியின் மாமா! ...அவர் முன்பே காலமாகிவிட்டார். தன் மனைவியிடம் மிகவும் அன்பு கொண்டிருந்தார் அவர். இது சம்பந்தமாக அவளே பல தடவை சொல்லியிருக்கிறாள். அப்படியானால் 'சஞ்சீவி' எழுதிய கதைகளைத்தான் தன் பெயரில் லலிதா வெளியிட்டுக் கொண்டிருந்தாளா?

நான்கு முழ நிலம்!

இது அவன் எழுதின கதையா?

# குட்டி அக்கா

## எம். டி. வாசுதேவன் நாயர்

மூல ஆசிரியரைப் பற்றி:

இளைஞர்; புதிய தலைமுறையைச் சேர்ந்த நவீன மறுமலர்ச்சி எழுத்தாளர்களுள் முன்னணியில் இருப்பவர். கல்லூரிப் படிப்பு முடிந்ததும். சிறிது காலம் பேராசிரியராகப் பணி புரிந்தார். அகில கேரள சிறுகதைப் போட்டியில் முதல் பரிசு பெற்றதன் மூலம். எழுத்துலகில் பிரகாசிக்கத் தொடங்கியவர். இப்போது பிரபல இலக்கிய வார இதழ் 'மாத்ரு பூமி'யின் ஆசிரியர் குழுவில் இடம் பெற்றுள்ளார். உயர்ந்த ரகமான நாவல்களும், பல சிறுகதைகளும் எழுதி தனிப்புகழ் பெற்றுளவர். புதிய முறைகளைக் கையாள்வது இவரது இலக்கியச் சிறப்பு.

பெரியம்மாவுக்கு இரு பெண்கள் இருந்தார்கள்: குட்டி அக்கா, ஜானு அக்கா.

ஜானு அக்கா பார்க்க நல்ல அழகு; வெளிர்ச்சிவப்பு. மழமழப்பான அவள் கைகளில் இளம் நீலமான நரம்புகள் தெரியும்; வாழைக்குருத்தின் வண்ணமினுக்கும் உண்டு அவள் கைகளுக்கு. அவள் அருகில் வரும்போது சந்தனசோப்பின் மணம் வீசும். அவளுடைய முண்டு உடையும் ரவிக்கையும் எப்போதும் துல்லியமாக இருக்கும். ஆனாலும், எனக்கு இந்த ஜானு அக்காளைக் காட்டிலும் குட்டி அக்காளைத்தான் அதிகமாகப் பிடிக்கும்.

குட்டி அக்கா நிறத்தில் கறுப்பு. ஜானு அக்காளின் கருத்துப்படி, 'அவளைத் தொட்டு வழித்துக் கண்ணுக்கு இட்டுக்கொள்ளலாம்.' சிரிக்காமல் இருந்தாலும் இரு பெரிய பற்கள் முன்பக்கம் வந்து நிற்கும். அவளுடைய கையைத் தொட்டால், உலர்ந்த விறகுக் கட்டையைத் தொட்டமாதிரி சொறசொறப்பாக இருக்கும். கறுப்புப் புள்ளிகள் போட்ட ஜாக்கெட்டைத்தான் தினமும் அணிந்திருப்பதைப் பார்க்கலாம். அதில் அழுக்கு நிறைய இருக்கும். முண்டு உடையில் மண்ணும் கரியும் காணாத நேரமில்லை. அவள் அருகிலே வந்தாலோ, வியர்வை நெடி, எண்ணெய்ப் பிசுக்கு நாற்றம், உலரவைக்காத ஈரத்துணியின் ஊசல் வாடை எல்லாமாகச் சேர்ந்து குமட்டலைக் கிளப்பும்; வாந்தி எடுக்க வரும்.

ஒரு செய்தி விட்டுப்போய் விட்டதே! குட்டி அக்காவின் இடது காதில் ஒரு 'மணி' உண்டு. அதாவது, ஒரு சின்னஞ்சிறு சதைக்குண்டு, ஒட்டவைத்தாற்போல எடுப்பாகத் தெரியும். அவள் என்பக்கத்தில் இருக்கும் போதும், என்னுடன் பேசிக்கொண்டிருக்கும்போதும்,

கூந்தலைக் கோதி உலர்த்தும்போதும், நான் குட்டி அக்கா வின் அக்காது ம்ணியைத்தான் பார்த்துக் கொண்டிருப்பேன். அவள் அதை அடிக்கடி தொட்டுப் பார்த்துக் கொள்வாள்; அப்போதெல்லாம் அருவருப்பாக இருக்கும்.

இருந்தாலும், குட்டி அக்காளிடம்தான் எனக்குப் பிரியம் அதிகம்.

குட்டி அக்காளைக் கண்டால், வீட்டில் யாருக்கும் விருப்பம் இல்லை. பெரியம்மா அவளைக் காணும் போதெல்லாம் வைதுகொண்டே இருப்பாள். காரணங்கள் எப்போதும் ஒன்று போலவே இருக்கும். "இந்தப் பெண்ணுக்கு அடக்கம் இல்லை, ஒடுக்கம் இல்லை; தோட்டம் அழிந்து போகிற காலத்திலே நாய்க்குடை வந்து முளைக்குமாம், அதைப்போல இது வந்து பிறந்திருக்கிறதே" என்று பழமொழி காட்டியே திட்டுவாள் பெரியம்மா. அப்படியும் அவள் கோபம் தணியவில்லை என்றால், நீ குடித்தனம் செய்து வாழ்கிற காலத்தில், உப்பும், அடிக்கல்லும் (அஸ்திவாரம் போட) கூடக் கிடைக்காமல் போய் விடும்.'' என்று சபிப்பாள்.

இதைக் கேட்டதும் குட்டி அக்கா உரக்கச் சிரிப்பாள்; அடிக்கடி கேட்டுப் பழகிப் போன ஏச்சு என்பதே காரணமாக இருக்கலாம். இந்தச் சிரிப்பைக் கண்டால் தான் பெரியம்மாவின் கோபம் பொங்கி எழும். அருகாமையில், வெட்டுக்கத்தியோ மரக்கரண்டியோ, எது கிடைத்தாலும் சரி, எடுத்து ஓங்கிக்கொண்டு, "போய்த் தொலை! என் முன்னாலே நிற்காமலே போய்த் தொலை! நீ என் வயத்திலே வந்தபோதே, என் ஜன்மம் பாழாகி விட்டது.'' என்று கத்தியபடியே அடிக்க வருவாள்.

குட்டி அக்கா பெரும்பாலும், பெரியம்மா சொல்லுகிறபடி நடப்பதில்லை. என்னோடு கூட வந்து, ஏதாவது

விளையாடுவதில் அவளுக்கு விருப்பம் அதிகம். புழுக் கடைத் தாழ்வாரத்திலே உட்கார்ந்துகொண்டு என் னுடன்; கொத்தங்கல்லு' (ஒருவகைக் காயாட்டம்) ஆடு வாள். மணல்மேட்டில் குழிபறித்து, 'குழியானை' (சிறு பூச்சி) பிடித்துக் கொடுப்பாள். இதெல்லாம் பெரியம்மாவுக்குத் தெரியாமல் நடக்கவேண்டும். என் அம்மாவும் பார்க்கக் கூடாது. யாராவது கண்டுவிட்டால் திட்டு கிடைக்கும்—எனக்கல்ல, குட்டி அக்காவுக்குத்தான்.

"மாளுக்குட்டி!"

பெரியம்மா இடி முழங்குவது மாதிரி அழைப்பாள்.

இந்த அழைப்பைக் கேளாமல் இருந்தால் மற்ெருரு அழைப்பு:

"அடீ, நாசமாய்ப் போகிறவளே!"

"அம்மாவுக்கு என்ன இப்போ?"

குட்டி அக்காவுக்கு அந்த ஆத்திர அழைப்பு ரசிப்ப தில்லை.

"புத்தி வந்த வயசான ஒரு பெண்ணடி நீ. இரண்டு கலியாண முண்டுகள் கொடுத்து, அழைத்துப்போக ஒருவன் வந்து சேராதது, அவன் குற்றமாடீ?"

குட்டி அக்கா விளையாடப் போகக்கூடாது. அவ ளிடத்திலே குறை இருக்கிறது—அவளுக்கென்று ஒருவன் கைப்பிடிக்க வந்து சேரவில்லை; வரமாட்டான்!

பெரியம்மா என்னைத் திட்டுவதில்லை; அறிவுறுத்து வாள்:

"வாசு! நீ ஒரு ஆண் பிள்ளையடா...நீ போய் ஒரு பெண் பிள்ளைக்குப் பின்னாலே வால் பிடித்து நடக்கக் கூடாது."

கூடவே, எனக்கும் ஒரு வாய்மொழி சொல்லிக் கொடுப்பாள் பெரியம்மா.

''கல்லாடுகிற முற்றத்திலே நெல் ஆடாது.''*

மாளுக்குட்டி அக்கா, ஓர் இடத்திலும் அடங்கி இருக்க மாட்டாள். எல்லாரிடத்திலும் வம்பு, வழக்கு. குளத்துப் படித்துறையில், ஒருநாள் பொழுது ஒரு வழக்காவது கொண்டு வராமல் இருக்க மாட்டாள். 'ஆந்தூர்' வீட்டு மீனாட்சி அம்மாளின் வெள்ளிக் கிண்ணத்தைத் தண்ணீரிலே தூக்கி எறிந்துவிட்டாள்; சம்முக் குட்டியின் முதுகிலே ஓங்கி அறைந்து விட்டாள்; 'நீர்ப்பிசாசு'க் காரியான மூகாமி அம்மையின் மேலே நீரை இறைத்தாள் —இப்படிப் பலவகை. அம்மாவும், பெரியம்மாவும் நூறு தடவை தடுத்தும், தன் போக்குப்படியே, கிணற்று கைப்பிடிச் சுவரின்மேல் நின்று, பூட்டை வளையம் வழியாகவே தண்ணீர் இழுப்பாள்.

உச்சிப்பொழுது வந்ததோ இல்லையோ, குட்டி அக்கா ஒரு 'சர்க்யூட்' அடித்துவிட்டு வருவாள். நம்பூதிரி வீட்டுத் தோட்டம், வடக்குப் பக்கத்துத் தோட்டம் காளியம்மன் மண்டபம், அமீனாபீவி இல்லம்—இப்படிப் பல இடங்களுக்குப் போய்விட்டு வீடு திரும்புவாள். அவள் புத்தி தெரிந்த பருவப் பெண்ணாகிவிட்டதால், அப்படியெல்லாம் கண்டபடி திரியக்கூடாதாம். அம்மா சொல்லிப் பார்த்தாள். பெரியம்மாவும் சொல்லிப் பார்த்துவிட்டாள். ஒருநாள், புளியம் மிலாறை எடுத்து அது நைந்து ஒடிகிற வரைக்கும் அடித்துப் பார்த்துவிட்டாள். குட்டி அக்கா அதற்கும் மசியவில்லை. ஊர் சுற்றுவதை அவள் நிறுத்தவில்லை.

---

* முற்றத்தில் காயாட்டம் ஆடிக்கொண்டிருந்தால், உழைத்துக் கொணரவேண்டிய நெல், அங்கே உலர்த்த வந்து சேராது.

பகல் சாப்பாடு ஆனதும், பெரியம்மா முற்றத்து வராந்தாவில் படுத்துத் தூங்குவாள். அம்மா அடுக்களைப் பக்கத்து வெளி அறையில் படுப்பாள். ஜானு அக்காவின் அறை மாடியில் இருக்கிறது. அவள் சாப்பிட்டானதும், வெற்றிலை–பாக்குப் போட்டுச் சுவைத்து, உதடுகளைச் சிவப்பாக்கிக்கொண்டு விடுவாள். மாடிக்குப் போய், சாய்மானப் படியில் அமர்ந்து, 'சரோஜினியின் கடுங்கை' என்கிற பாட்டுப் புத்தகத்திலிருந்து, ஏதாவதொரு பாட்டை மெள்ள இசைத்துக்கொண்டிருப்பாள். ஜானு அக்காவுக்குக் கொஞ்சம் படிக்கத் தெரியும். பெரிய அக்காவுடன் வழக்காட நேரும்போதெல்லாம், "குட்டி அக்கா! நானாவது இரண்டெழுத்துப் படித்தவள்; நினைவு இருக்கட்டும்" என்று இடித்துக் காட்டுவாள் ஜானு அக்கா.

நான் அடிக்கடி அவளுடைய மாடி அறைக்குப் போவேன். பாட்டுப் புத்தகத்தை வைத்துக்கொண்டு பாடியது போக, மீதி நேரங்களில், அவள் நிலைக் கண்ணாடிக்கு எதிரே நின்றுகொண்டு, முன்னெற்றி மயிரைச் சுருட்டி, வளையமாக்கி, நெற்றியில் பதியவைக்க முனைவதைப் பார்த்திருக்கிறேன். அவள் மேல் எங்காவது தப்பித் தவறி என் கை பட்டுவிட்டால், "இந்தச் சின்னப் பயல் என் மேலே அழுக்கைப் பூசிவிட்டான்" என்று கத்துவாள்.

ஜானு அக்காவின் படுக்கையை நான் தொட்டுவிடக் கூடாது. அவள் பெட்டிமேலே நின்றுகொண்டு, அலமாரியில் இருக்கும், கண்ணாடி, சாந்துக் குப்பி, மைக் கூண்டு எதையும் நான் தொட்டுவிடக் கூடாது. உண்மையைச் சொல்லப்போனால், ஜானு அக்காவின் மைக் கூண்டைப் பார்க்கத்தான் நான் அங்கே போகிறேன். பழைய காலனு அகலத்தில் இருக்கும் அந்த மைக்

கூண்டு. அதன்மேல் சிறு கண்ணுடி பதித்திருக்கும். நல்ல ஜோரான மைக்கூண்டு.

நான் அறைக்குள் நுழைய வேண்டியதுதான்; ஜானு அக்காளுக்குத் திகில். "சின்னப் பயலே! சும்மா உட்கார்ந்திரு...சின்னப்பையா! இதைத் தொடாதே! ..ஏய், அதைத் தள்ளிவிடப் போகிருய், ஜாக்கிரதை!..." என்பாள்.

இந்த ஜானு அக்கா, என் பேரைச் சொல்லி அழைத்தால் என்னவாம்? 'சின்னப்பயல்' என்று எனக்கொண்ணும் பேர் இல்லே. குட்டி அக்கா என் பேர் சொல்லித் தான் அழைப்பாள். அன்போடு, அவள் நீட்டி விளிப்பாள்: "வாசூ!" என்று. அதைக் கேட்க எனக்கு ஆசையாக இருக்கும்.

குட்டி அக்கா, ஜானு அக்காளின் அறைக்குள் நுழைய வேண்டியதுதான், பெரியம்மாவை அழைத்துக் கூக்குரல் இடத் தொடங்கிவிடுவாள் ஜானு அக்கா. எதைத் தொடட்டும் அதற்கொரு புலம்பல். தொட்ட பொருளுக்கு ஏதோ கேடு வந்துவிட்டதென்று வழக்கு பெரியம்மா சின்ன அக்காளுக்குப் பரிந்து, "ஏ மாளுக் குட்டி! அவள் உன் தங்கைதானே? ஏன் வம்புக்கு நீ போகணும்?" என்பாள்.

குட்டி அக்கா, "ஏன்? நான் அவளுக்கு மூத்தவளில்லேயோ?" என்று பதிலளிப்பாள்.

ஒரு சமயம், கொடியில் போட்டிருந்த ஜரிகை ஆடையை எடுத்து, குட்டி அக்கா உடுத்திப் பார்த்துக் கொண்டாள். அது ஜானு அக்காளுடையது; அவளுக்குப் பொறுக்கவில்லே.

"என் ஜரிகை முண்டு அப்படியே சேருகிவிட்டது. நான் கோவிலுக்குப் போகிறபோது எதை உடுத்திக்

கொண்டு போவேன்? ஈசுவரா!...'' என்று கத்தினுள் ஜானு அக்கா.

குட்டி அக்கா இரு கைகளையும் பிரித்துக்காட்டி, "எங்கேடீ, என் கையிலே சேறு?'' என்று கேட்டாள்.

இதைக் காதில் போட்டுக்கொள்ளாமலே, ஜானு அக்கா கூக்குரல் கிளப்பினுள்: ''அம்மா! என் ஜரிகை முண்டெல்லாம் ஒரே சேருக்கிவிட்டாளம்மா!''

''நான் என்ன வலைச்சியாடீ, சேறும் கையுமாக இருக்க?"

''அது என்னவோ...?''

''நீ ஒரு அழகு சுந்தரி வந்திருக்கிருயில்லையா?" குட்டி அக்கா வெறுப்புடன் அந்த ஜரிகை ஆடையைச் சுருட்டி, ஜானு அக்கா முகத்தில் வீசி அடித்துவிட்டாள். 'குட்டி அக்கா செய்தது சரி; இந்த ஜானு அக்காளுக்கு வேண்டியதுதான்' என்று எண்ணிக்கொண்டேன்.

''நான் அழகுசுந்தரியாக இருக்கிறதனுலே, குட்டி அக்காளுக்குப் பெரிய நஷ்டம் ஒன்றும் இல்லையே.''

''இந்த ஆணவமெல்லாம் என்னிடத்திலே வைத்துக் கொள்ளாதேடீ குட்டி! உன் கன்னங்களை நொறுக்கித் தள்ளிவிடுவேன்."

உடனே அடங்கிவிட்டாள் ஜானு அக்கா. அடிப்பதாகச் சொன்னுல், குட்டி அக்கா அடித்தே விடுவாள்.

''வாசூ! வா, போகலாம்." குட்டி அக்கா என் கையைப் பிடித்து அழைத்துச் சென்றுள்.

நேரே நம்பூதிரி வீட்டுத் தோட்டத்தில் மாமரத்தடிக்குப் போய்ச் சேர்ந்தோம். வீட்டிலே உள்ளவர்கள் உறங்கிக்கொண்டிருந்தார்கள். மாமரத்தின் அருகே சென்றோம். மாங்காய் அடிக்க நல்ல தருணம் இது.

"நாம் மாங்காய் அடிப்போமா?"

"குட்டி அக்கா! நீ மாங்காய் அடிக்கலாமோ?"

"ஏன் அடித்தால் என்னவாம்?"

"பெண்பிள்ளையால் மாங்காய் அடிக்க முடியுமோ?"

"இதோ, பார்!"

எனக்கு ஒரே குஷி; வேடிக்கையாக இருந்தது. ஆண்பிள்ளைகளுக்குத்தான் மாங்காய் அடிக்கமுடியும் என்று எண்ணிக்கொண்டிருந்தேன். குட்டி அக்காளுக்காக நான் கல் பொறுக்கத் தொடங்கியதும், "வாசு! கல்லால் அடித்தால் ஓசை கேட்கும். வேண்டாம். கம்பே போதும்" என்றாள் குட்டி அக்கா.

ஓசை கேட்டால் குஞ்சு நம்பூதிரி வெளி முற்றத்திற்கு வந்துவிடுவார். விஷயம் அறிந்ததும் தலையிலே கை வைத்துப் பெரிதாய்க் கூக்குரல் எழுப்பிவிடுவார். பொல்லாத ஆசாமி குஞ்சு நம்பூதிரி. கீழே விழுந்து கிடக்கிற வெம்பிய மாங்காயைக்கூடப் பொறுக்க விட மாட்டார்; வெறும் பிசுநாறி!

பக்கத்து மரத்திலிருந்து சிறு கம்பு ஒடித்துவந்தாள் குட்டி அக்கா.

"நீ நகர்ந்து நில்லடா வாசு!"

நான் ஆவலுடன் ஒதுங்கி நின்றேன். குட்டி அக்கா கம்பை வீசி எறிந்தாள். அண்ணாந்து பார்த்தபோது, எவ்வளவு உயரம் போயிற்று அந்தக் கம்பு! துப்பிரன் இருக்கிறானே, அவன் எறிந்தால்கூட இவ்வளவு உயரம் போகாது. எனக்குத் தெரிந்த வரையில், துப்பிரன் தான், கம்போ, கல்லோ உயரத்தில் வீசுவதிலே கைகாரன். அவனையும்விட உயர வீசமுடிகிறதே குட்டி அக்காளுக்கு!

ஆனால் மாங்காய் ஏதும் விழவில்லை. குட்டி அக்கா தொடர்ந்து மூன்று தடவைகள் கம்பை வீசி எறிந்தாள்.

ஒரு காய்கூட விழவில்லை. நாலாவது முறை வீசி எறிந்த போது, கம்பு கிளை இடுக்கில் சிக்கிக்கொண்டுவிட்டது. நான் ஏமாற்றத்துடன் குட்டி அக்காவின் முகத்தைப் பார்த்தேன். இனி என்ன செய்வது?

அப்போது குட்டி அக்காளுக்கு எரிச்சலாய் வந்தது. "வாசு! நீ சுவர் மேலே ஏறி நின்று பார்த்துக்கொண்டிரு. நம்பூதிரி மாமா முற்றத்துப் பக்கம் வந்தாரோ இல்லையோ, உடனே எனக்குத் தெரியப்படுத்தணும்" என்ருள்.

நான் அப்படியே செய்தேன். 'எதற்காக குட்டி அக்கா இப்படிச் சொல்லுகிருள்?' என்று நான் குழம்பிக் கொண்டிருந்தேன். அவள் சுற்றுமுற்றும் ஒருமுறை கண்ணேட்டம் விட்டாள். இடுப்பு முண்டை (ஆடைய) வரிந்து கட்டிக்கொண்டாள். 'சர சர'வென்று மாமரத்தில் ஏறத் தொடங்கிவிட்டாள்!

அட!... நான் இதை எதிர்பார்க்கவே இல்லை!

நான் வீட்டு முற்றத்தையும் மாமரத்தையும் மாறி மாறிப் பார்த்துக்கொண்டு நின்றேன். அணிலைப்போல வெகு லாவகமாக மரத்தில் ஏறிக்கொண்டிருந்தாள் குட்டி அக்கா... ஆமாம், இதை வந்து ஜானு அக்கா பார்க்கணும். அவளுக்கென்ன தெரியும்? விதம் விதமாய்ப் பொட்டு இட்டுக்கொள்ளவும், 'சரோஜினியின் கடுங்கை' பாட்டுப் புத்தகத்தை வைத்துக்கொண்டு பாடவும்தான் தெரியும். மரம் ஏறத் தெரியாது; மாங்காய் பறிக்கத் தெரியாது.

"வாசு இங்கே பார்!"

நான் அண்ணந்து பார்த்தேன். குட்டி அக்கா கிளையோரத்தில் ஒரு காலை வைத்து, ஆட்டியபடியே சிரித்துக் கொண்டிருந்தாள். எனக்கும் ஒரே ஆனந்தம்; கை

கொட்டிச் சிரித்தேன். அவள் மாங்காய்களைப் பறித்து, சருகுகள் கிடந்த பக்கமாகப் போட்டாள்.

அப்போது, மூங்கில் புதரிலிருந்து யாரோ சிரிப்பது கேட்டது. நான் திகிலுடன் திரும்பிப் பார்த்தேன். குட்டிநாராயணன் கேலியாகச் சிரித்துக்கொண்டு நிற்கிறான். பெரிய அக்கா அவனைக் கண்டதாகவே காட்டிக் கொள்ளவில்லை.

“பொண்ணு மரமேறியிருக்கிறாள்! மரமேறியிருக்கிறாள்!” அவன் உரக்கக் கத்தினான். இந்தப் பயலுக்கு என்ன வந்தது?

இந்தக் குட்டிநாராயணன் எப்பொழுதுமே இப்படித் தான். குட்டி அக்கா பரபரப்பு அடையாமல், கீழே இறங்கி வந்தாள். வரிந்து செருகியிருந்த, முண்டாடையின் தலைப்புக்களையெல்லாம் அவிழ்த்துவிட்டு, சரிப் படுத்திக்கொண்டாள். தரையில் கிடந்த மாங்காய்களைப் பொறுக்கி எடுத்தாள். அந்தச்சமயத்தில் குட்டிநாராயணன், “பொம்பிள்ளை மரத்திலே ஏறினாளே! பொம்பிள்ளை மரத்திலே ஏறினாளே!” என்று கூச்சல் போட்டான்.

“கடவுளே! வீட்டுக்காரர் குஞ்சு நம்பூதிரி காதிலே இது விழாமல் இருக்க வேண்டுமே!”—நான் வேண்டிக் கொண்டேன். தேக்கு இலையில் மாங்காய்களை வைத்து என் கையில் கொடுத்துவிட்டு, குட்டி நாராயணனுக்கு எதிரே போய் நின்றாள் குட்டி அக்கா. ஒரு வார்த்தை பேசவில்லை; கேட்கவில்லை. அவன் கன்னத்திலே ‘பளாரெ’ன்று ஓர் அறை கொடுத்தாள்.

அந்தப் பயலுக்கு அது வேண்டியதுதான். பெண் பிள்ளை மரம் ஏறினால் இவனுக்கு என்ன? இப்போது அடி வாங்கியதும் முறைத்துக்கொண்டு நிற்கிறான்; எப்

படிப் பதிலுக்குக் கொடுக்கலாம், என்று பார்க்கிருன் போலிருக்கிறது. குட்டி அக்கா இதைப் புரிந்துகொண்டு கையை ஓங்கிக்கொண்டு, "உதவாக்கறை பயலே போடா!" என்று அதட்டினுள். குட்டி நாராயணன் போய்ச்சேர்ந்தேன். ஓடினுன் என்றே சொல்லவேண்டும்.

ஆனுல், இந்த வழக்கு பெரியம்மா காதுக்கு எட்டியது. இரு குற்றங்கள்: ஒன்று, மாமரத்தில் ஏறியது, இரண்டாவது, ஆண்பிள்ளையான நாராயணனை அடித்தது.

"ஏண்டி மாளுக்குட்டி! நீ மரத்திலே ஏறினுயாடீ?"

"ஏறினேன்."

"ஏறினுயா?"

"ஏறினேன்; அதனுலே என்ன?"

எனக்கு நடுக்கம்; ஏதும் அறியாதவனைப்போல், அம்மா பக்கத்திலே போய நின்றுகொண்டேன்.

"நீ பருவமான பெண்தானேடீ? உனக்குத் தெரிய வேண்டாம்?"

குட்டி அக்கா பதில் சொல்லவில்லை.

"வீட்டிலே ஆண்பிள்ளை இல்லாதபோனுல் நாலு தூண்களைப் பார்த்தாவது பயப்பட வேண்டுமடீ!"

இதற்கும் மறுமொழி கூறவில்லை.

"உன்னுடைய இந்தக் குணத்தை நான் சரிப்படுத்துகிறேன்!"

பிறகு, அடி விழுகிற ஓசை; ஒண்ணு, இரண்டு, மூணு.

"இனி மரத்திலே ஏறுவாயா?"

ஒண்ணு, இரண்டு, மூணு

"இனிமேலே ஆண்பிள்ளையைக் கை நீட்டி அடிப்பாயா?"

ஒண்ணு, இரண்டு, மூணு...

நான் காதுகளைப் பொத்திக்கொண்டு, முற்றத்திலே நின்றேன். என்னாலே பொறுக்க முடியாது... கொஞ்ச நேரம் கழித்து, நான் உள்ளே போகக் கிளம்பியபோது, நடு முற்றத்தின் ஓரமாக, ஒரு தூணில் சாய்ந்து உட்கார்ந்தபடி பெரியம்மா, தேம்பிக்கொண்டே, "இந்தப் பெரிய குடும்பத்திலே இப்படியொரு பெண் வந்து பிறந்திருக்கிறதே, குருவாயூரப்பா!" என்றாள். யாரிடம் சொல்லுகிறாள் என்று தெரியவில்லை. நான் சந்தேகத்துடன் தயங்கி நிற்பதைக் கண்டு, பெரியம்மா என்னை அழைத்தாள். நான் பயந்துகொண்டே பக்கத்தில் போனேன். என்னைக் கட்டி அணைத்தபடியே பெரியம்மா கதறி அழுது விட்டாள்.

"நீ ஒரு ஆண்பிள்ளையடா மகனே!... நாளைக்கு நீதானடா தங்கி இருக்கிறவன்."

நான் பெரியம்மாவின் அணைப்பிலிருந்து விடுவித்துக் கொண்டு, அம்மா பக்கத்திலே போய் நின்றேன். அம்மாவும் கண்ணீரைத் துடைத்துக்கொள்வதைக் கண்டேன். பெரியம்மா எதற்காக அழுதாள்? அவர் அழாத நாளில்லை என்று அம்மா சொல்லக் கேட்டிருக்கிறேன். பெரியம்மாவுக்கு யாரும் இல்லை.

பெரியம்மாவுக்கு யாரும் ஆதரவு கிடையாது; பணமும் இல்லை. என் அம்மாவுக்கு ஓர் ஆண் மகன் உண்டு. அப்பா மாதந்தோறும் பணம் அனுப்புகிறார்.

அம்மாவுக்குப் பெரியம்மாவைப்பற்றி நினைக்கிற போது, விசனமாக இருக்கும். அவரைப்பற்றிப் பேசுகிற போதே, குரல் இடறும். ஒருநாள் இரவு, என்னிடம் பல செய்திகள் சொன்னாள் அம்மா.

பெரியம்மா தாழே வளப்பு குட்டன் நாயருக்கு வாழ்க்கைப்பட்டாள். குடும்பத்திற்குஅவர்தான் தலைவர்.

ஏதோ வியாபாரம் செய்துகொண்டிருந்தார். பெரியம்மா தா்மேவளப்பு வீட்டில்தான் இருப்பாள். பிறந்த வீட்டுக்கு எப்போதாவதுதான் வந்து போவாள். அப்போதெல்லாம், பல்லக்கில் வருவாள்; போவாள்.

என் அம்மா அப்போது சிறு பெண். பெரியம்மாவுடன் அம்மாவும் அவர்கள் வீட்டில் சில காலம் தங்கியிருக்கிறாள். அம்மா கழுத்துக்கு '**ஆமாடக் கூட்டு**'* நகை செய்து போட்டது பெரியம்மாதான். பத்தாயக் கூடத்தைவிட்டுக் கீழே இறங்கியதில்லை பெரியம்மா. அந்த வீட்டில், அவள் வைத்ததுதான் சட்டம்; யாரும் மீறி நடக்கமாட்டார்கள். ஊராருக்கும் பெரியம்மாவிடம் பிரியம். குளத்திற்குக் குளிக்கப் போகிறபோது, பெரிய கிண்ணம் நிறைய எண்ணெய் எடுத்துப் போவாள். வேண்டப்பட்டவர்களுக்கெல்லாம் கை நிறைய எண்ணெய் கொடுப்பாள். வருடாந்தரச் சடங்கு, பண்டிகைகளின்போது, துணி கேட்பவருக்குத் துணி; காசு கேட்பவருக்குக் காசு.

"எவ்வளவு கொடுத்த கையடா அவருடைய கை!" என்று சொல்வாள் அம்மா.

ஆனால், பெரியம்மாவின் வளப்பமெல்லாம் ஒருநாள் 'பொக்'கென்று மறைந்துவிட்டது. ஓர் இரவு குட்டன் நாயர் கடையைப் பூட்டிக்கொண்டு வீட்டுக்கு வந்தார். கொஞ்சம் மயக்கமாக இருந்தது. சாப்பிட உட்கார்ந்தார். அங்கேயே வாந்தி எடுத்தார். பாதி ராத்திரியில் உயிர் பிரிந்துவிட்டது.

அப்போது, குட்டி அக்காவுக்கு மூனு வயது; ஜானு அக்காவுக்கு ஒரு வயசு நிரம்பவில்லை.

---

* கழுத்தில் அணியும் பசும் பொன்னாலாகிய ஒரு ஆபரணம்.

விடிந்ததும், மருமகன் வந்து வீட்டுச் சாவியை வாங்கிக்கொண்டுவிட்டான். சவத்தைக் கொண்டுபோய் எரிப்பதற்குள், பெரியம்மை கைம்மையுடன் பிறந்தகத்திற்கு வந்துவிட்டாள். துணைக்கு வேலைக்காரி பாரு வந்தாள். பெரியம்மா இரண்டு குழந்தைகளையும் கூட்டிக்கொண்டு, துணி மூட்டையுடன் வேலைக்காரி பாரு பின் தொடர, வீட்டிற்குள் நுழைந்த காட்சி இன்றும் அம்மாவுக்கு அப்படியே நினைவு இருக்கிறது.

"எவ்வளவு பேர்களுக்கு வாரி வழங்கிய கையடா, அவருடைய கை! எல்லாம் கால வித்தியாசம்தான்!" அங்கலாய்ப்பாள் அம்மா.

...குந்தியபடியே, முழங்கால் இடுக்கில் முகத்தைப் புதைத்துக்கொண்டு, கண்ணீர் வடிக்கும் பெரியம்மாவை நான் ஏறிட்டுப் பார்த்தேன்.

குட்டி அக்காவைப் பற்றி எனக்கு அப்போதுதான் நினைவு வந்தது, அவளைக் கீழே எங்கேயும் காணோம். மேலே சென்று பார்த்தபோது, புவனேசுவரியின் பூஜை அறையிலிருந்து விம்மல் கேட்டது. பகற்பொழுதில்கூட அங்கே இருட்டுத்தான்.

நான் சந்தேகத்துடன் பூஜை அறைக்குள் சென்றேன். "குட்டி அக்கா!..."

என் குரல் காதில் விழவில்லையோ என்னவோ? பதில் இல்லை.

"குட்டி அக்கா!"—நான் அருகில் போய், அவள் தோளைப் பற்றிக்கொண்டு, "பெரியம்மா ரொம்ப அடித்துவிட்டாளா?" என்று கேட்டேன்.

தேங்கலுக்கிடையே, "உம்," என்றாள் குட்டி அக்கா.

"ரொம்பவும் வலித்ததா?"

"ஏன் குட்டி அக்கா, இன்னும் அழுதுகொண்டிருக்கிறே?"

என்னைக் கட்டி அணைத்து, என் கன்னத்தில் தன் கன்னத்தை அழுத்திக்கொண்டு, "குட்டி அக்கா ஒன்றும் அழவில்லை" என்றாள்.

வியர்வையும் கண்ணீரும் பட்டு, நனைந்திருந்த குட்டி அக்காவின் மார்பகத்தில், முகத்தைப் புதைத்துக்கொண்டிருந்த எனக்கும் அழுகை அழுகையாக வந்தது.

"வாசு! உனக்குக் குட்டி அக்காவைப் பிடித்திருக்கிறதா?"

"உம்"

"ஆனால், இந்த வீட்டிலே யாருக்கும் என்னைக் கண்டால் பிடிக்கவில்லை, வாசு!"

என் முகத்தில் கண்ணீர் சொட்டியது.

நான் அடிக்கடி எண்ணிப் பார்ப்பேன்: 'குட்டி அக்காவை யாருக்குமே பிடிக்கவில்லையா? பெரிய அம்மா திட்டுகிறாள்; சிலசமயம் அடிக்கிறாள்; அம்மாவும் திட்டுகிறாள். ஜானு அக்காவுக்கோ, இவளைக் கண்ணாலே காணக்கூடாது!

ஏன் எல்லாரும் வெறுக்கிறார்கள்? குட்டி அக்கா கறுப்பாக இருப்பதனாலே இருக்கும். அவள் காதில் சதைக் குண்டு முளைத்திருக்கிறதே, அதற்காகவும் இருக்கும்.

ஜானு அக்காவை மட்டும் யாரும் ஏதும் சொல்வதில்லை; அவளுக்கு நல்ல வரனாக வந்து சேருவான் என்று சொல்லிக்கொள்கிறார்கள்.

பெரியம்மாவுக்கு ஜானு அக்காளிடம் பிரியம் அதிகம். திருநாவாய்த் தலத்திற்குப் போய் அமாவாசைத்

திதி முழுக்குக்குப் போகும்போது, ஜானு அக்காவைத் தான் அழைத்துக்கொண்டு போவாள். ஆரியம்பாடத்துத் திருவிழாவின்போது கூத்து நடக்கும். அதற்குப் போகிறபோதுகூட பெரியம்மாவுக்கு இளைய பெண்தான் வரவேண்டும். ஒருசமயம், குட்டி அக்காவும் புறப்பட்டாள் கூத்து பார்க்க. அப்போது பெரியம்மா, "ஏ பெண்ணே! பேசாமல் வீட்டிலேயே இரு!" என்ருள்.

அதற்குப் பிறகு, எங்காவது தப்பித்தவறி பெரியம்மா அழைத்தாலும், அக்கா போவதில்லை. வடக்குத் தெருப் பார்வதி அம்மாளுக்கு ஆண் குழந்தை பிறந்திருப்பதைக் காணப் போனபோதும், சோலை வீட்டுப் பாட்டியம்மாள் காய்ச்சலாகக் கிடந்ததைப் பார்க்கச் சென்றபோதும்; காலாயக்களம் இல்லத்திலே ஐயப்பன் சாமிக்கு விளக்கேற்றியபோதும், பெரியம்மா, தன்னுடன் வருமாறு குட்டி அக்காவை அழைத்திருக்கிருள்; இந்தமாதிரி இன்னும் சில சந்தர்ப்பங்கள். ஆனுல் குட்டி அக்காவோ, "அம்மாவோடுகூட வர எனக்கு யோக்கியதை இல்லை; அதற்கு வேண்டிய அழகு எனக்குக் கிடையாது." என்று சொல்லிவிட்டாள்.

இதைக் கேட்டதும், பெரியம்மாவுக்குக் கோபம் தான் வந்தது. "மரியாதை கெட்டவளே! நீ இருக்கிற இடத்திலே புல்கூட முளைக்காது." என்று சபித்தாள்.

குட்டி அக்காவுக்குச் சாபத்தைக் கண்டு பயம் கிடையாது. பேய்—பிசாசு, பிரும்ம ராட்சசர்களிடம் கூட பயம் கிடையாது. குட்டி அக்காவின் சீடனை நானும் தீரனுகத்தான் இருந்தேன். குட்டி அக்காதான் எனக்கு உபதேசங்களெல்லாம் அளித்திருக்கிருளே! பிரும்ம ராட்சசர் வந்துவிட்டால், திரும்பிப் பார்க்காமல் ஒரு கல்லை எடுத்து எறிந்து விட்டால் போதும். பிசாசு வந்தாலோ? 'நாராயணுய நமஹ!' என்று உரக்க

மூணு தடவைகள் சொல்லவேண்டும். நாராயண சப்தத்தைக் கேட்டதுமே, பிசாசு அங்கே நிற்காது.

ஆனால், பகவதியிடத்திலே எனக்குப் பயம்தான். ரேழிப்பக்கத்துத் தனி அறைதான் பகவதிக்கு ஆஸ்தானம் (இருப்பிடம்). அந்தப் பூஜை அறைக்கு எதிரே, எச்சில்—தீட்டுடன் யாரும் போய்விடக் கூடாது. மீன் இறைச்சியை அந்தப் பக்கம் கொண்டு போகக்கூடாது. அந்த அறைக்கு எதிரே படுக்கக் கூடாது; பகவதிக்குப் பிடித்தமில்லாத எதையும் செய்தாலோ, அம்மை வித்தை நம்மீது எறிந்து விடுவாள்!' அம்மை என்றால் பகவதி, வித்து என்றால் வைசூரி என்று அர்த்தம்.

பூஜை அறைக்குள் நான்தான் போகலாம். செவ்வாய் வெள்ளி இருதினங்களிலும் விளக்குக்குத் திரிவைப்பதும், ஆரத்திக்குக் கர்ப்பூரம் ஏற்றிக் கொடுப்பதும் என் பணிதான். பெண்களில் சிறுமிகள்தான் உள்ளே வரலாம். வயதான பெண்களும் உள்ளே வரலாம். மற்றவர்கள் பூஜை அறைக்குள் வரக்கூடாது.

ஒருசமயம், குட்டி அக்கா பகவதி அறைக்குள் நுழைந்து, நந்தாவிளக்கிலேயிருந்து எண்ணெயைச் சாய்த்து எடுத்து, தலைக்குத் தடவிக்கொண்டு விட்டாள். பெரியம்மா இதைப் பார்த்துவிட்டாள்.

"எல்லாம் தீட்டாக்கித் தொலைத்துவிட்டாள்! ஏ மாளுக்குட்டி! உனக்கு என்னடி கேடு?"

"என்ன அம்மா...எண்ணெய் இல்லாததனாலே தானே கொஞ்சம் எடுத்தேன்?"

பெரியம்மா தலையிலே கை வைத்துக்கொண்டு, "நீ இந்தப் பொல்லாத் தனத்திலே இந்த வீட்டையே பாழாக்கப்போகிறாய். என்ன சொல்லி என்ன! பார்த்துக்கொண்டிரு, அதோகதியாகப் போகாமல் இருக்கப் போகிறதோ?" என்றாள்.

பெரியம்மா, அன்றே நம்பூதிரியை வரவழைத்து, "புண்ணியாக வாசனம்' (தூய்மைப் படுத்தும் சடங்கு) செய்வித்து, பகவதியின் சன்னிதான அறைக்குள் 'தீர்த்தம்' (புனித நீர்) தெளிக்கச் செய்தாள். இருந்தாலும், என்னவெல்லாம் ஆபத்துகள் நேருமோ என்று பயந்தவாறே இரண்டு—மூன்று நாட்களை நிம்மதி இல்லாமல் கழித்தாள்.

அப்பூஜை அறைக்குள் பகவதியின் புதையல் இருப்பதாக எல்லார்க்கும் நம்பிக்கை. சோதிடம் சொல்லுகிற அப்புக்குட்டப்பணிக்கர், இங்கு வந்து போகும்போதெல்லாம், ராசிபலன் பார்த்து, "இந்த வீட்டிலே ஒரு 'சொவ்வ' இருக்கிறாள். 'சொவ்வ' என்றால் பகவதி; உக்கிரமான மூர்த்தி. மழைபோலே வரும் கேடுகளைப் பனிபோலே போக்கி வைப்பாள். அந்தப் பகவதிக்கு இங்கே ஒரு புதையல் இருக்கிறது. மகா புண்ணியம் செய்த குடும்பமாக்கும் இது!" என்பார்.

அந்த 'மகா புண்ணிய'த்தைக் கண்ணாலே கண்டு, தொட்டும் பார்த்துவிட வேண்டும் என்கிற எண்ணம் குட்டி அக்காவுக்கு. என்னிடம் ஒருநாள், "வாசு! பகவதி அறையைத் தோண்டிப் பார்த்துவிட வேண்டும்" என்றாள்.

நான் நடுங்கிப் போனேன். பகவதி வீற்றிருக்கிற இடத்தைத் தோண்டிப் பார்க்கிறதாவது!

"நீ பயப்படாதேடா. வெளியே காவலுக்கு நீ நின்று கொண்டிரு, போதும். புதையல் இருக்கிறதா இல்லையா என்பதைத் தெரிந்துகொள்ள வேண்டும்."

'அம்மை வித்து எறிவாள்' என்பதை நினைத்துப் பார்த்தபோது, நான் தளர்ந்து போனேன்.

"பகவதியிடத்திலே..."

"பகவதிக்கு ஏதுக்கடா புதையல்?"

யோசித்துப் பார்த்தபோது, எனக்கும் அது சரி யென்றே தோன்றியது.

புதையல் அங்கே தரைக்குள் புதைந்து கிடப்பதால் யாருக்கும் பயனில்லை. அது கிடைத்தால், செய்ய வேண்டிய காரியங்கள் நிறைய உள்ளன. இருந்தாலும் பகவதி வெறுமே விட்டுவிடுவாளா?"

"தோஷமில்லையா குட்டி அக்கா?"

"இங்கே யாரடா புதையலை எடுக்கப் போகிறது? புதையலாம் புதையல்! சும்மாப் பொய் சொல்லி வைத் திருக்கிறார். இருந்தாலும், நாம் அங்கே தோண்டிப் பார்த்துவிட வேண்டும். இருக்கட்டும்—அந்தப் பணிக்கர் இனிமேல் 'கவடி'யை (சோதிடச் சுவடியை) தூக்கிக் கொண்டு இங்கே வரட்டும்!"

குட்டி அக்காவின் இந்த ஏற்பாடு நல்லதுக்கு இல்லை அவளுக்கு பூஜை அறைக்குள் காலடி எடுத்துவைக்கக் கூடத் தகுதி கிடையாது. வீட்டுக்கு விலக்காக இருக்கத் தொடங்கியதுமே, அந்தப் பெண் பூஜை அறைக்குள் நுழையும் தகுதியை இழந்து விடுகிறாள். அந்தப் பிராயம் வந்ததும், அவள் கால் உள்ளே பட்டாலேயே அசுத்தம் ஆகிவிடும். இது போதாதென்று, அறைக்குள் போய் தரையைத் தோண்டப் போகிறாளாம்! இதையே யோசித்து யோசித்து, எனக்கு இரவில் தூக்கம் வர வில்லை. வெளியே சொல்லமுடியாது; சொன்னால் குட்டி அக்காவுக்குச் செம்மையாய் அடிவிழும்.

பெரியம்மாவும் அம்மாவும் பக்கத்து ஊர்க் கோயிலுக்குப் போகிற நாளில், பூஜை அறைத் தரையைத் தோண்டிப் பார்த்துவிட வேண்டும் என்று குட்டி அக்கா தீர்மானம் செய்திருந்தாள். நான் காவல் நிற்கவேண்டும்; ஜானு அக்கா பார்த்துவிட்டால்? அம்மாவிடம் போய்ச்

சொல்லி விடுவாள். பெரியம்மாவின் முழுப்பங்கு தண்டனையும் கிடைக்கும்; பகவதியின் பங்கு வேறு இருக்கிறது.

"ஜானு அக்கா சொல்லி விடுவாளே."

"அவளை நான் கவனித்துக் கொள்கிறேன்.

இன்னும் மூணு நாள் கழித்தால், இங்கே ஒரு பெரிய ஆபத்து ஏற்படப்போகிறதென்று எனக்குத் தோன்றியது. வருகிற வெள்ளிக்கிழமை 'முப்பட்டு வெள்ளிக் கிழமை.'* பூஜை அறையைத் தோண்டும்போது, நான் வெளியே காவல் நிற்காவிட்டால் குட்டி அக்காளுக்குக் கோபம் வரும். எனக்கு குட்டி அக்காளிடம் பயம்.

ஆனால், குட்டி அக்கா பூஜை அறையைத் தோண்டவில்லை. காரணம் காலையிலேயே கோவிந்த மாமா வந்து சேர்ந்துவிட்டார். அம்மாவும் பெரியம்மாவும் கோவிலுக்குப் போகும் பயணத்தை நிறுத்திக் கொண்டார்கள். எனக்கு ஆறுதலாக இருந்தது.

கோவிந்தமாமா எங்கள் குடும்பத்திற்குப் பெரியவர். பாகம் பிரித்துக்கொண்டு பல வருஷங்களுக்கு முன்பே தனியாகப் போய்விட்டார். மாதம் ஒரு தடவை எங்கள் வீட்டிற்கு வருவார். பெரிய குடும்பம்; தொடர்பு இருக்க வேண்டுமில்லையா? மாமாவுக்கு வயது நிரம்ப ஆகி விட்டது. காது கேட்காது. உரக்கச் சொல்லணும். வீட்டுக்கு வந்தால், கொஞ்சநேரம் வெளித் திண்ணையில் உட்கார்ந்திருப்பார். வெளித் தோட்டத்திலே, கொல்லைப் பக்கத்திலோ கறுப்பன் வேலை செய்துகொண்டிருந்தால், மாமா அவனை அழைத்து, ஒரு குலை பச்சைப்பாக்கு பறித்துவரச் சொல்லுவார். அதில் இரண்டு—மூணு பாக்கை அவனுக்கும் கொடுப்பார். பிறகு, "கறுப்பா!

* மாதத்தின் முதல் வெள்ளிக்கிழமைக்குப் பெயர். அன்று விரதம் இருப்பது வழக்கம்.

உனக்கு ஞாபகமிருக்காடா? நூற்று இருபத்து நாலு வேலையாட்கள் பணி செய்து கொண்டிருந்த மிராசுக் குடும்பமடா இது!'' என்பார்.

கறுப்பன் இரைந்து கத்துவான்: "இருக்குங்க, இருக்கு. நெல் பட்டறை போட்டிருக்கிற இடத்திலே முன்பு தொழுவம் இருந்திச்சு. அப்ப நான் இந்தச் சின்ன எசமான் மாதிரி இம்புட்டு இருந்தேனுங்க.'' என்னைச் சுட்டிக் காண்பித்துக்கொண்டு சொல்லுவான் கறுப்பன்.

இதை எவ்வளவு தடவைகள் சொன்னாலும் கோவிந்த மாமாவுக்குப் போதாது. பல தடவைகள் நானே கேட் டிருக்கிறேன். இன்று வாழையும் முருங்கையும் நிற்கிற இடத்தில், முன்பு உக்கிராணம் இருந்தது. அன்றைக்கு அடுக்களைக்குள் இருந்த கிணற்றைத் தூர்த்ததுதான், அதோ தெரிகிறதே அந்தப் பள்ளம். ஐந்தாவது கட்டு இருந்த இடத்தில்தான் இன்று பெரியம்மாவின் கோழிக் கூண்டு இருக்கிறது.

கோவிந்த மாமா வெளி முற்றத்தில் நின்று, நாலாபக் கமும் நோட்டம் விடுவார். மதில் சுவரைப் பிடித்து நின்று கொண்டு தோட்டத்தைச் சுற்றிலும் ஒரு கண்ணோட்டம் விடுவார். "வாழைக் கன்றுகளைப் பெயர்த்துத் தனியாக நடவேண்டும்; இதுதான் சமயம்,'' என்பார்; யாரிடம் பேசுகிறார் என்பது தெரியாது.

யாரும் அவர் பேச்சைப் பொருட்படுத்துவதில்லை. அப்படி யாரும் பொருட்படுத்த வேண்டும் என்கிற கட்டாயமும் அவருக்குக் கிடையாது என்றே தோன்றும். "பத்தாயம் வைக்கும் அறையிலே மேல் உத்திரத்தை மாற்றியாகணும்.'' என்பார்.

கறுப்பன் காதில் இது விழுந்தால், "ஊம்'' என்பான்.

"கறுப்பா!''

அம்மா தன் பொறுப்பை நிறைவேற்றிவிட்டு அடுக்களைக்குப் போய்ச் சேர்ந்தாள்.

பெரியம்மா சாபம் இடாத குறை.

"கோவிலுக்குப் போகலாமென்று ஏற்பாடு செய்திருந்தபோது, இவர் இங்கே பட்டறை போட வந்து சேர்ந்து விட்டாரே. நல்ல நேரம் பார்த்து வந்தார்!" என்றாள்.

முற்றத்துப் பக்கம் இறங்கிக் கொஞ்சம் நடந்து விட்டு, பிறகு சாய்மானப்படியில் ஏறி அமர்ந்து கொண்டு, கோவிந்த மாமா உள்பக்கம் பார்த்து "நாராயணி அங்கே இருக்கிறாளோ? நான் கொஞ்சம் பார்க்கணும் அவளை" என்றார்.

பெரியம்மா வாசல் கதவுப் பக்கம் போய் நின்றாள்.

"பெருமண்ணூரிலிருந்து கிட்டுண்ணியார் நேற்றைக்கு வந்திருந்தார், மேற்கொண்டு பார்த்துப் பேசலாமென்று சொன்னார்.

பெரிய அம்மா "ஊம்" கொட்டினாள்.

"பையனுக்குக் கொஞ்சம் நில புலன் உண்டு. தகப்பனார் ஒரு நம்பூதிரி. சொந்தத்திலே ஒரு தென்னந் தோப்பு இருக்கிறது; பத்தொன்பது மரங்கள் இருக்கும்;..." சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு, மேலே தொடர்ந்தார்:

"ஏம்மா, நம் பெண்ணுக்கு என்ன வயசு?" என்று கேட்டார்.

"மாளுக் குட்டிக்குப் பத்தொன்பது முடிந்துவிட்டது. ஜானுக்குட்டிக்கு வருகிற புரட்டாசியோடு பதினாறு நிறைகிறது."

"ம்ஹ்ம்; பரவாயில்லை. நாளைக்கு அவர்களெல்லாரும் பெண் பார்க்க வருகிறார்கள்."

உனக்கு ஞாபகமிருக்காடா? நூற்று இருபத்து நாலு வேலையாட்கள் பணி செய்து கொண்டிருந்த மிராசுக் குடும்பமடா இது!'' என்பார்.

கறுப்பன் இரைந்து கத்துவான்: ''இருக்குங்க, இருக்கு. நெல் பட்டறை போட்டிருக்கிற இடத்திலே முன்பு தொழுவம் இருந்திச்சு. அப்ப நான் இந்தச் சின்ன எசமான் மாதிரி இம்புட்டு இருந்தேனுங்க.'' என்னைச் சுட்டிக் காண்பித்துக்கொண்டு சொல்லுவான் கறுப்பன்.

இதை எவ்வளவு தடவைகள் சொன்னலும் கோவிந்த மாமாவுக்குப் போதாது. பல தடவைகள் நானே கேட்டிருக்கிறேன். இன்று வாழையும் முருங்கையும் நிற்கிற இடத்தில், முன்பு உக்கிராணம் இருந்தது. அன்றைக்கு அடுக்களைக்குள் இருந்த கிணற்றைத் தூர்த்ததுதான், அதோ தெரிகிறதே அந்தப் பள்ளம். ஐந்தாவது கட்டு இருந்த இடத்தில்தான் இன்று பெரியம்மாவின் கோழிக் கூண்டு இருக்கிறது.

கோவிந்த மாமா வெளி முற்றத்தில் நின்று, நாலாபக்கமும் நோட்டம் விடுவார். மதில் சுவரைப் பிடித்து நின்று கொண்டு தோட்டத்தைச் சுற்றிலும் ஒரு கண்ணேட்டம் விடுவார். ''வாழைக் கன்றுகளைப் பெயர்த்துத் தனியாக நடவேண்டும்; இதுதான் சமயம்,'' என்பார்; யாரிடம் பேசுகிருர் என்பது தெரியாது.

யாரும் அவர் பேச்சைப் பொருட்படுத்துவதில்லை. அப்படி யாரும் பொருட்படுத்த வேண்டும் என்கிற கட்டாயமும் அவருக்குக் கிடையாது என்றே தோன்றும். ''பத்தாயம் வைக்கும் அறையிலே மேல் உத்திரத்தை மாற்றியாகணும்.'' என்பார்.

கறுப்பன் காதில் இது விழுந்தால், ''ஊம்'' என்பான்.

''கறுப்பா!''

அம்மா தன் பொறுப்பை நிறைவேற்றிவிட்டு அடுக்களைக்குப் போய்ச் சேர்ந்தாள்.

பெரியம்மா சாபம் இடாத குறை.

"கோவிலுக்குப் போகலாமென்று ஏற்பாடு செய்திருந்தபோது, இவர் இங்கே பட்டறை போட வந்து சேர்ந்து விட்டாரே. நல்ல நேரம் பார்த்து வந்தார்!" என்றாள்.

முற்றத்துப் பக்கம் இறங்கிக் கொஞ்சம் நடந்து விட்டு, பிறகு சாய்மானப்படியில் ஏறி அமர்ந்து கொண்டு, கோவிந்த மாமா உள்பக்கம் பார்த்து "நாராயணி அங்கே இருக்கிறாளோ? நான் கொஞ்சம் பார்க்கணும் அவளை" என்றார்.

பெரியம்மா வாசல் கதவுப் பக்கம் போய் நின்றாள்.

"பெருமண்ணூரிலிருந்து கிட்டுண்ணியார் நேற்றைக்கு வந்திருந்தார், மேற்கொண்டு பார்த்துப் பேசலாமென்று சொன்னார்.

பெரிய அம்மா "ஊம்" கொட்டினாள்.

"பையனுக்குக் கொஞ்சம் நில புலன் உண்டு. தகப்பனார் ஒரு நம்பூதிரி. சொந்தத்திலே ஒரு தென்னந் தோப்பு இருக்கிறது; பத்தொன்பது மரங்கள் இருக்கும்;..." சிறிது நேரம் யோசனை செய்துவிட்டு, மேலே தொடர்ந்தார்:

"ஏம்மா, நம் பெண்ணுக்கு என்ன வயசு?" என்று கேட்டார்.

"மாளுக் குட்டிக்குப் பத்தொன்பது முடிந்துவிட்டது. ஜானுக்குட்டிக்கு வருகிற புரட்டாசியோடு பதினாறு நிறைகிறது."

"ம்ஹ்ம்; பரவாயில்லை. நாளைக்கு அவர்களெல்லாரும் பெண் பார்க்க வருகிறார்களாம்."

பெரியம்மாவுக்கு பிரமிப்பாக இருந்தது. "நீங்களும் கூட்டவே வருவீர்களில்லையா?" என்று கேட்டாள்.

"என்ன ?"

மறுபடியும், உரத்த குரலில் பெரியம்மா அறிவித்தாள் : "நீங்களும் அவர்களோடு வருவீர்களில்லையா?"

"எனக்கு நிறைய வேலைதான் இருக்கிறது. இருந்தாலும், ஒரு காரியமென்றால் வராமல் இருக்க முடியுமா ? நான் வருவேன்."

பெரியம்மா குரல் தடுமாற, "பெரியவர் அக்கறை எடுத்துக் கொண்டால்தான் எல்லாம் நடக்கும்." என்றாள்.

"நம் யோகத்திற்கு எல்லாம் நல்லபடியாகத்தான் வரும். தோணிக்குள்ளேயே அவசரம் அவசரமென்று பாய்ந்து ஓடிக்கொண்டிருந்தால், காரியம் ஆகிவிடுமா ?"

அன்றைக்கு கோவிந்த மாமா திரும்பிப் போகிற போது, பெரியம்மா, அம்மாவிடமிருந்து ஒரு ரூபாய் வாங்கி, அவருக்குக் கொடுத்தாள். "பெரியவர் நம்மிடத்திலே பரிவு வைத்திருக்கிறவராக்கும்," என்று அம்மாவிடம் சொன்னாள்.

யாரோ வரப்போகிறார். நல்ல தருணமாகப் பார்த்து, அம்மாவிடம் நான் மெள்ள விசாரித்தபோது, "ஆமாண்டா, உன்னுடைய குட்டி அக்காவைச் சம்பந்தம் செய்ய ஓர் ஆசாமி வருகிறான்" என்றாள்.

நான் குட்டி அக்காவைத் தேடிப்பிடித்து, செய்தியைச் சொன்னேன் : "உனக்கு ஒரு ஆசாமி வரப் போகிறான்."

சிரித்துக்கொண்டே அவள் சொன்னாள், "போடா!"

"கேலிக்கு இல்லே; அம்மா சொன்னாங்க; சத்தியமா!"

ஒரு வாரம் கழித்து, கோவிந்த மாமா வீட்டுக்கு வந்தபோது, பெரியம்மா அவரை எதிர்கொள்ள வாசல் பக்கம் விரைந்தாள் ஆவலுடன். "என்ன சொன்னார் கள்?" என்று உரக்கக் கேட்டாள்.

"ஒண்ணும் சரிப்பட்டு வரவில்லை. சின்னவளை (ஜானுக்குட்டியை) அந்தப் பையன் பார்த்திருக்கிறானம்; அவளானால் சம்மதம் என்று......"

பெரியம்மா சிறிதுநேரம் ஏதும் பேசவில்லை.

"நாராயணி, என்ன சொல்லுகிறாய் ?"

"மூத்தவள் இருக்கிறபோது இளையவளைக் கலி யாணம் செய்து கொடுப்பது சரியில்லையே."

"அதெல்லாம் சரிதான். நம் குடும்பத்திலே அப்படி யெல்லாம் வழக்கம் இல்லைதான். இருந்தாலும்.. ..."

பெரியம்மா புடவைத் தலைப்பால், கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"இதுக்காக நீ வருத்தப்படவேண்டாம். போனது, போகட்டும், போ !"

பெரியம்மா யோசித்துக் கொண்டிருந்தாள். பிறகு "அந்த இடம் வேண்டாம் மாமா, அதிர்ஷ்டம் இருந்தால் வேறு இடம் வரும்." என்றாள்.

அந்தச் சட்டைக்கார ஆசாமிக்கு குட்டி அக்காவைப் பிடிக்கவில்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். மாடி யில், இருண்டிருந்த அறைக்குள், குட்டி அக்கா பேசா மல் உட்கார்ந்திருந்தாள்.

"குட்டி அக்கா !" சந்தேகத்துடன் கூப்பிட்டேன்.

"என்னடா வாசு !"

"அந்த ஆள் இனிமேல் வரமாட்டான் !"

"வரமாட்டான்...எவனும் வரமாட்டான்."

பெரியம்மாவுக்கு பிரமிப்பாக இருந்தது. "நீங்களும் கூடவே வருவீர்களில்லையா?" என்று கேட்டாள்.

"என்ன ?"

மறுபடியும், உரத்த குரலில் பெரியம்மா அறிவித்தாள் : "நீங்களும் அவர்களோடு வருவீர்களில்லையா?"

"எனக்கு நிறைய வேலைதான் இருக்கிறது. இருந்தாலும், ஒரு காரியமென்றால் வராமல் இருக்க முடியுமா ? நான் வருவேன்."

பெரியம்மா குரல் தடுமாற, "பெரியவர் அக்கறை எடுத்துக் கொண்டால்தான் எல்லாம் நடக்கும்." என்றாள்.

"நம் யோகத்திற்கு எல்லாம் நல்லபடியாகத்தான் வரும். தோணிக்குள்ளேயே அவசரம் அவசரமென்று பாய்ந்து ஓடிக்கொண்டிருந்தால், காரியம் ஆகிவிடுமா ?"

அன்றைக்கு கோவிந்த மாமா திரும்பிப் போகிற போது, பெரியம்மா, அம்மாவிடமிருந்து ஒரு ரூபாய் வாங்கி, அவருக்குக் கொடுத்தாள். "பெரியவர் நம்மிடத்திலே பரிவு வைத்திருக்கிறவராக்கும்," என்று அம்மாவிடம் சொன்னாள்.

யாரோ வரப்போகிறார். நல்ல தருணமாகப் பார்த்து, அம்மாவிடம் நான் மெள்ள விசாரித்தபோது, "ஆமாண்டா, உன்னுடைய குட்டி அக்காவைச் சம்பந்தம் செய்ய ஓர் ஆசாமி வருகிறான்" என்றாள்.

நான் குட்டி அக்காவைத் தேடிப்பிடித்து, செய்தியைச் சொன்னேன்: "உனக்கு ஒரு ஆசாமி வரப் போகிறான்."

சிரித்துக்கொண்டே அவள் சொன்னாள், "போடா!"

"கேலிக்கு இல்லே; அம்மா சொன்னாங்க; சத்தியமா!"

ஒரு வாரம் கழித்து, கோவிந்த மாமா வீட்டுக்கு வந்தபோது, பெரியம்மா அவரை எதிர்கொள்ள வாசல் பக்கம் விரைந்தாள் ஆவலுடன். "என்ன சொன்னார்கள்?" என்று உரக்கக் கேட்டாள்.

"ஒண்ணும் சரிப்பட்டு வரவில்லே. சின்னவளை (ஜானுக்குட்டியை) அந்தப் பையன் பார்த்திருக்கிறானும்; அவளானால் சம்மதம் என்று......"

பெரியம்மா சிறிதுநேரம் ஏதும் பேசவில்லை.

"நாராயணி, என்ன சொல்லுகிறாய் ?"

"மூத்தவள் இருக்கிறபோது இளையவளைக் கலியாணம் செய்து கொடுப்பது சரியில்லையே."

"அதெல்லாம் சரிதான். நம் குடும்பத்திலே அப்படியெல்லாம் வழக்கம் இல்லைதான். இருந்தாலும்......"

பெரியம்மா புடவைத் தலைப்பால், கண்ணீரைத் துடைத்துக் கொண்டாள்.

"இதுக்காக நீ வருத்தப்படவேண்டாம். போனது, போகட்டும், போ !"

பெரியம்மா யோசித்துக் கொண்டிருந்தாள். பிறகு "அந்த இடம் வேண்டாம் மாமா, அதிர்ஷ்டம் இருந்தால் வேறு இடம் வரும்." என்றாள்.

அந்தச் சட்டைக்கார ஆசாமிக்கு குட்டி அக்காவைப் பிடிக்கவில்லை என்பதைத் தெரிந்துகொண்டேன். மாடியில், இருண்டிருந்த அறைக்குள், குட்டி அக்கா பேசாமல் உட்கார்ந்திருந்தாள்.

"குட்டி அக்கா !" சந்தேகத்துடன் கூப்பிட்டேன்.

"என்னடா வாசு !"

"அந்த ஆள் இனிமேல் வரமாட்டான் !"

"வரமாட்டான்...எவனும் வரமாட்டான்."

அடுத்த மாதமும், கோவிந்த மாமா சில ஆசாமிகளை அழைத்துவந்தார். அன்றும் பெரிய அக்கா, காலையில் குளித்துவிட்டு, மையிட்டு, பொட்டிட்டு, துல்லிய ஆடை உடுத்தி தன்னைச் சிங்காரித்துக்கொண்டாள். அதே கரையுள்ள முண்டு, அதே சிவப்பு-நீலப் புள்ளி ரவிக்கை. சிற்றுண்டி எல்லாம் ஆகி, தாம்பூலம் சுவைத்தபின், வழக்கம்போல் மாமாவின் அழைப்பு கிடைத்ததும், தண்ணீர் தம்பளரைத் திண்ணையில் கொண்டுபோய் வைத்து விட்டு வந்தாள்.

அவர்கள் படியிறங்கியதுமே குட்டி அக்கா மாடி அறைக்குப் போய் அழுதாள்.

பதினைந்து நாட்கள் கழிந்ததும், மாமா மறுமுறையும் வந்தார். கூடவே, சில ஆசாமிகளும் வந்திருந்தார்கள். அன்றைக்குக் குட்டி அக்காளின் போக்கே மாறி இருந்தது.

"அம்மா, நான் திண்ணைப் பக்கம் போகமாட்டேன்.' என்றாள் குட்டி அக்கா.

"என்னது!"—பெரியம்மா.

"என்னை யாரும் பார்க்க வேண்டாம்."

"மாளுக்குட்டி!..." பெரியம்மா பல்லை நெரித்தாள்.

"என்னைக் கொன்றாலும் சரி, நான் போகமாட்டேன்."

"மாளுக்குட்டி! என் கண்மணி இல்லே நீ? பகவதிக்குக் கூட்டுப் பாயசம் படைக்கிறேனென்று வேண்டிக் கொண்டிருக்கிறேன்."

"நான் போகமாட்டேன்."

"இந்த இடம் நிச்சயமாகுமென்று..."

குட்டி அக்காளின் குரல் ஒலித்தது. "அம்மா! நீங்கள் பேசாமல் போகமாட்டீங்க?"

நான் எழுந்திருக்கவில்லை. நான் போனதும் குட்டி அக்கா தூக்கு மாட்டிக்கொண்டுவிட்டால்?

பெரியம்மா கொஞ்சநாட்கள் வரைக்கும் குட்டி அக்காளுடன் பேசவில்லை. பகல் முழுவதும் ஊர் வெளியில் சுற்றித் திரிவாள். சாப்பாட்டு நேரத்திற்கு அடுக்களைக்கு வந்து சேருவாள். பெரியம்மா மிச்சம் மீதி உள்ளதை ஒரு பாத்திரத்தில் வைத்திருப்பதைக் காட்டி, "இந்தா, நக்கித் தின்னு!" என்பாள்.

அம்மா சில சமயம் குட்டி அக்காவுக்கு அறிவுறுத்துவாள்; "நீயோ பருவம் வந்த பெண். இப்படியெய்லாம் ஊர் சுற்றித் திரியக்கூடாது." ஆனால், அக்கா பொருட்படுத்துவதில்லை.

ஜானு அக்கா மூலம் அவளுக்கு ஒரு பட்டப்பெயர் கிடைத்தது; 'ஊர் சுற்றி மணியம்.'

ஒருநாள் மழை பெய்துகொண்டிருந்தது. குட்டி அக்கா அன்றைக்கு வெளியே எங்கும் போகவில்லை. உச்சிப் போதுக்கு, என்னைக் கூப்பிட்டு, கண்ணாடி எடுத்துவரச் சொன்னாள். நான் கண்ணாடி எடுத்துக் கொண்டு வரும்போது, "யாருக்கடா இது?" என்று கேட்டாள் ஜானு அக்கா.

"குட்டி அக்காவுக்கு" என்றேன்.

"ஆசை தீர அழகைப் பார்த்துக்கொள்ளச் சொல்!" என்றாள் இளக்காரமாக. நான் மனதுக்குள் ஜானுவை வைதுகொண்டே, கண்ணாடி எடுத்துப்போனேன்.

கண்ணாடியில் முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டாள் குட்டி அக்கா. உடைந்த சீப்பு கொண்டு, தலையைப் படிய வாரிக்கொண்டாள். முகத்தைப் புடவைத் தலைப்பால் துடைத்துக்கொண்டாள். முகத்தைச் சாய்த்து, காது மணியை நோட்டம் விட்டபடியே, "வாசு,

அடுத்த மாதமும், கோவிந்த மாமா சில ஆசாமிகளை அழைத்துவந்தார். அன்றும் பெரிய அக்கா, காலையில் குளித்துவிட்டு, மையிட்டு, பொட்டிட்டு, துல்லிய ஆடை உடுத்தி தன்னைச் சிங்காரித்துக்கொண்டாள். அதே கரையுள்ள முண்டு, அதே சிவப்பு-நீலப் புள்ளி ரவிக்கை. சிற்றுண்டி எல்லாம் ஆகி, தாம்பூலம் சுவைத்தபின், வழக்கம்போல் மாமாவின் அழைப்பு கிடைத்ததும், தண்ணீர் தம்பளரைத் திண்ணையில் கொண்டுபோய் வைத்துவிட்டு வந்தாள்.

அவர்கள் படியிறங்கியதுமே குட்டி அக்கா மாடி அறைக்குப் போய் அழுதாள்.

பதினைந்து நாட்கள் கழிந்ததும், மாமா மறுமுறையும் வந்தார். கூடவே, சில ஆசாமிகளும் வந்திருந்தார்கள். அன்றைக்குக் குட்டி அக்காளின் போக்கே மாறி இருந்தது.

''அம்மா, நான் திண்ணைப் பக்கம் போகமாட்டேன்.' என்றாள் குட்டி அக்கா.

''என்னது!''—பெரியம்மா.

''என்னை யாரும் பார்க்கவேண்டாம்.''

''மாளுக்குட்டி!...'' பெரியம்மா பல்லை நெரித்தாள்.

''என்னைக் கொன்றாலும் சரி, நான் போகமாட்டேன்.''

''மாளுக்குட்டி! என் கண்மணி இல்லே நீ? பகவதிக்குக் கூட்டுப் பாயசம் படைக்கிறேனென்று வேண்டிக் கொண்டிருக்கிறேன்.''

''நான் போகமாட்டேன்.''

''இந்த இடம் நிச்சயமாகுமென்று...''

குட்டி அக்காளின் குரல் ஒலித்தது. ''அம்மா! நீங்கள் பேசாமல் போகமாட்டீங்க?''

நான் எழுந்திருக்கவில்லை. நான் போனதும் குட்டி அக்கா தூக்கு மாட்டிக்கொண்டுவிட்டால்?

பெரியம்மா கொஞ்சநாட்கள் வரைக்கும் குட்டி அக்காளுடன் பேசவில்லை. பகல் முழுவதும் ஊர் வெளியில் சுற்றித் திரிவாள். சாப்பாட்டு நேரத்திற்கு அடுக்களைக்கு வந்து சேருவாள். பெரியம்மா மிச்சம் மீதி உள்ளதை ஒரு பாத்திரத்தில் வைத்திருப்பதைக் காட்டி, "இந்தா, நக்கித் தின்னு!" என்பாள்.

அம்மா சில சமயம் குட்டி அக்காவுக்கு அறிவுறுத்துவாள்; "நீயோ பருவம் வந்த பெண். இப்படியெல்லாம் ஊர் சுற்றித் திரியக்கூடாது." ஆனால், அக்கா பொருட்படுத்துவதில்லை.

ஜானு அக்கா மூலம் அவளுக்கு ஒரு பட்டப்பெயர் கிடைத்தது; 'ஊர் சுற்றி மணியம்.'

ஒருநாள் மழை பெய்துகொண்டிருந்தது. குட்டி அக்கா அன்றைக்கு வெளியே எங்கும் போகவில்லை. உச்சிப் போதுக்கு, என்னைக் கூப்பிட்டு, கண்ணாடி எடுத்துவரச் சொன்னாள். நான் கண்ணாடி எடுத்துக் கொண்டு வரும்போது, "யாருக்கடா இது?" என்று கேட்டாள் ஜானு அக்கா.

"குட்டி அக்காவுக்கு" என்றேன்.

"ஆசை தீர அழகைப் பார்த்துக்கொள்ளச் சொல்!" என்றாள் இளக்காரமாக. நான் மனதுக்குள் ஜானுவை வைதுகொண்டே, கண்ணாடி எடுத்துப்போனேன்.

கண்ணாடியில் முகத்தை உற்றுப் பார்த்துக்கொண்டாள் குட்டி அக்கா. உடைந்த சீப்பு கொண்டு, தலையைப் படிய வாரிக்கொண்டாள். முகத்தைப் புடவைத் தலைப்பால் துடைத்துக்கொண்டாள். முகத்தைச் சாய்த்து, காது மணியை நோட்டம் விட்டபடியே, "வாசு,

இந்தக் காது மணி போனல், நான் பார்க்க அழகாய் இருப்பேனில்லையா?" என்று கேட்டாள்.

"அது போகுமா, குட்டி அக்கா?"

"போகும். நான் அதற்கு ஒரு வழி வைத்திருக்கிறேன். நீ போய் கத்தியை எடுத்து வாயேன்."

நான் அப்படியே செய்தேன். அக்கா அதைப் படியில் தீட்டிக் கருக்கு ஏற்றினாள். மூலையில் வைத்திருந்த எச்சில் பரணியை எடுத்துக் கட்டிலுக்குக் கீழே வைத்துக்கொண்டாள். கதவை அடைத்துத் தாளிட்டாள்.

"வாசு! யாரிடத்திலேயும் சொல்லாதே!..."

'எதை?' எனக்கு ஒன்றும் புரியவில்லை. கட்டிலில் ஒருக்களித்தவாறு படுத்துக்கொண்டு, அக்கா சொன்னாள்: "வாசு! இந்த எச்சில் பரணியை இப்படிக் கொஞ்சம் நகர்த்தி வையேன்."

நான் அப்படியே செய்தேன்.

வியப்புடன் அக்காவையே பார்த்துக்கொண்டிருந்தேன். அவள் கத்தியைக் காதுப்பக்கம் கொண்டு போனாள்...என் உடல் வெட வெடவென்று நடுங்கியது. கண்ணைப் பொத்திக் கொண்டுவிட்டேன்.

"ஐய்யோ! அம்மா!..." குட்டி அக்காவின் அலறலைக் கேட்டு, நான் கண்ணைத் திறந்தேன்; அவள் காதிலிருந்து ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. ரத்தத்தைக் கண்டதும் நான் உரக்க அலறிவிட்டேன்.

"ஐய்யோ! அம்மா, ஓடி வாயேன்!"

தலையணையில் தலை துடிக்க, கையால் அதை அழுத்திப் பிடித்தவாறே கிடந்த குட்டி அக்கா கோபமாக என்னைப் பார்த்தாள்.

"எதை?"

"அதாண்டா; அந்த அப்புண்ணியோடு பேசிக் கொண்டிருந்ததை. அதைச் சொல்லுவியா?"

"இல்லை."

நான் எதுவும் யாரிடமும் சொல்லவில்லை. பிறகும் குட்டி அக்கா, அதே இடத்தில், பாம்புப் புற்றுக்குப் பின்னால், அப்புண்ணியோடு பேசிக்கொண்டிருப்பதைப் பல தடவைகள் பார்த்தேன். "அப்புண்ணி நல்ல ஆள் வாசு!" என்று என்னிடம் ஒருநாள் சொன்னாள். அவன் கண்ணாடி வளைகள் கொண்டு வந்து கொடுத்திருக்கின்றான். அவைகளைச் சோப்புப் பெட்டியில் பத்திரமாக குட்டி அக்கா வைத்திருக்கிறாள்.

"யாரிடத்திலாவது சொல்லுவாயா?"

"சொல்லமாட்டேன்."

"நான் உனக்கு ரப்பர் பந்து கொண்டுவந்து கொடுக்கிறேன்."

"உனக்கு எங்கிருந்து கிடைக்கும் குட்டி அக்கா?"

"நான் கொண்டுவரச் சொல்லியிருக்கிறேன்."

"யாரிடத்திலே?"

"அதெல்லாம் உனக்கு ஏதுக்கு? பந்து வரும் பாரு!" குட்டி அக்கா என்னைக் கட்டி அணைத்து, என் கன்னத்திலே ஒரு முத்தம் கொடுத்தாள். அவளுக்குக் குஷி.

அந்தி வேளை, தாழ்வாரத்துத் தூணில் சாய்ந்து உட்கார்ந்து, நான் நாமஜபம் செய்து கொண்டிருந்தேன். அம்மா அடுக்களையில் அலுவலாக இருந்தாள். பெரியம்மா வெளிவாசலில் உள்ள லாந்தல் விளக்கைத் துடைத்துக் கொண்டிருந்தாள். அப்போது, கறுப்பன்

இந்தக் காது மணி போனால், நான் பார்க்க அழகாய் இருப்பேனில்லையா?" என்று கேட்டாள்.

"அது போகுமா, குட்டி அக்கா ?"

"போகும். நான் அதற்கு ஒரு வழி வைத்திருக்கிறேன். நீ போய் கத்தியை எடுத்து வாயேன்."

நான் அப்படியே செய்தேன். அக்கா அதைப் படியில் தீட்டிக் கருக்கு ஏற்றினாள். மூலையில் வைத்திருந்த எச்சில் பரணியை எடுத்துக் கட்டிலுக்குக் கீழே வைத்துக்கொண்டாள். கதவை அடைத்துத் தாளிட்டாள்.

"வாசு ! யாரிடத்திலேயும் சொல்லாதே !..."

'எதை ?' எனக்கு ஒன்றும் புரியவில்லை. கட்டிலில் ஒருக்களித்தவாறு படுத்துக்கொண்டு, அக்கா சொன்னாள் : "வாசு ! இந்த எச்சில் பரணியை இப்படிக் கொஞ்சம் நகர்த்தி வையேன்."

நான் அப்படியே செய்தேன்.

வியப்புடன் அக்காவையே பார்த்துக்கொண்டிருந்தேன். அவள் கத்தியைக் காதுப்பக்கம் கொண்டு போனாள்...என் உடல் வெட வெடவென்று நடுங்கியது. கண்ணைப் பொத்திக் கொண்டுவிட்டேன்.

"ஐய்யோ! அம்மா!..." குட்டி அக்காவின் அலறலைக் கேட்டு, நான் கண்ணைத் திறந்தேன்; அவள் காதிலிருந்து ரத்தம் கொட்டிக் கொண்டிருந்தது. ரத்தத்தைக் கண்டதும் நான் உரக்க அலறிவிட்டேன்.

"ஐய்யோ! அம்மா, ஓடி வாயேன்!"

தலையணையில் தலை துடிக்க, கையால் அதை அழுத்திப் பிடித்தவாறே கிடந்த குட்டி அக்கா கோபமாக என்னைப் பார்த்தாள்.

"எதை?"

"அதாண்டா; அந்த அப்புண்ணியோடு பேசிக்கொண்டிருந்ததை. அதைச் சொல்லுவியா?"

"இல்லே."

நான் எதுவும் யாரிடமும் சொல்லவில்லே. பிறகும் குட்டி அக்கா, அதே இடத்தில், பாம்புப் புற்றுக்குப் பின்னல், அப்புண்ணியோடு பேசிக்கொண்டிருப்பதைப் பல தடவைகள் பார்த்தேன். "அப்புண்ணி நல்ல ஆள் வாசு!" என்று என்னிடம் ஒருநாள் சொன்னாள். அவன் கண்ணாடி வளேகள் கொண்டு வந்து கொடுத்திருக்கின்ருன். அவைகளேச் சோப்புப் பெட்டியில் பத்திரமாக குட்டி அக்கா வைத்திருக்கிருள்.

"யாரிடத்திலாவது சொல்லுவாயா?"

"சொல்லமாட்டேன்."

"நான் உனக்கு ரப்பர் பந்து கொண்டுவந்து கொடுக்கிறேன்."

"உனக்கு எங்கிருந்து கிடைக்கும் குட்டி அக்கா?"

"நான் கொண்டுவரச் சொல்லியிருக்கிறேன்."

"யாரிடத்திலே?"

"அதெல்லாம் உனக்கு ஏதுக்கு? பந்து வரும் பாரு!" குட்டி அக்கா என்னேக் கட்டி அணேத்து, என் கன்னத்திலே ஒரு முத்தம் கொடுத்தாள். அவளுக்குக் குஷி.

அந்தி வேளே, தாழ்வாரத்துத் தூணில் சாய்ந்து உட்கார்ந்து, நான் நாமஜபம் செய்து கொண்டிருந்தேன். அம்மா அடுக்களேயில் அலுவலாக இருந்தாள். பெரியம்மா வெளிவாசலில் உள்ள லாந்தல் விளக்கைத் துடைத்துக் கொண்டிருந்தாள். அப்போது, கறுப்பன் தலேயைச் சொரிந்து கொண்டு, படியேறி வந்தான்.

அவனைப் பார்த்துப் பெரியம்மா, "என்னடா கறுப்பா?" என்று கேட்டாள்.

"எசமானி அம்மாகிட்டே ஒரு சேதி சொல்லணுங்கற எண்ணம்..."

"சொல்லேன், கறுப்பா!"

"அம்மா ஒண்ணும் என்னைத் தப்பா நினைச்சுக்கப் படாது..."

"என்ன சமாசாரம், சொல்லேன்?"

"எனக்கும் சொல்லச் சங்கடமாகத்தாங்க இருக்குது. என் குடிசைக்குப் பின்னாலே ஒரு சமாசாரம் கண்டேன். எசமானி அம்மா மனசுக்கு அது தெரிஞ்சா நல்லதுங்கற எண்ணம் எனக்கு."

"என்ன அது? சொல்லு!"

"ஒண்ணுமில்லே; நம்ம பெரிய பொண்ணு, மேலத் தெரு அப்புண்ணி இருக்காரில்லே, அவரோடு கூட நெருங்கிப் பழகிக்கிட்டு வராங்க. அது நம்ப எஜமானியம்மா குடும்பத்துக்கு முறையில்லாத செயலாச்சுங்களே."

"அடி பாவி மகளே! கெடுத்தியே குடியை!" தேள் கொட்டி விட்டாற்போல், துடிதுடித்து எழுந்தாள் பெரியம்மா. பிறகு, "என் குருவாயூரப்பா! இந்த மானங் கெட்டவளை ஏதுக்காகத்தான் எனக்குக் கொடுத்தாயோ?" என்று முறையிட்டாள்.

உடனே, உள்ளே விரைந்து, இடி முழங்குகிறமாதிரி, "மாளுக்குட்டி!" என்று அழைத்தாள்.

குட்டி அக்கா வந்தாள்.

அழுகையை அடக்கிக்கொண்டு பெரியம்மா கேட்டாள்; "என்னைக் கொண்டுபோய் சுடுகாட்டிலே வைக்கிற வரைக்குமாவது..."

''என்னம்மா?''

''ஏண்டி, நீ குடும்பத்து மானத்தைக் குலைக்கத் தானே வந்திருக்கிறே?''

''என்னம்மா சொல்லுகிறீங்க?''

''அப்புண்ணியோடு பேசிக்கொண்டு நிற்க உனக்கு என்னடி வேலை?''

குட்டி அக்கா வாய் திறக்கவில்லை. பெரியம்மா அவளுடைய இரு கன்னங்களிலும் மாறி மாறி அறைந்து, ''சொல்லடி!'' என்று கத்தினாள்.

குட்டி அக்கா பதில் சொல்லவில்லை.

''நீ படாத பாடெல்லாம் படப் போகிறே, பார்! இனிமேல் இந்த வீட்டு வாசல்படி தாண்டினாயோ, உன் சவம் இங்கே விழும்.'' குட்டி அக்கா அழாமல், கன்னத் தைத் தடவிக்கொண்டு, மாடிக்குப் போய்விட்டாள். அவள் காதுபட, ''வீட்டிலே ஆண் இல்லாதபோது, தூணைப் பார்த்தாவது பயந்து நடக்க வேணுமடி!'' என்றாள் பெரியம்மா.

அதற்குப் பிறகு, குட்டி அக்காவுக்கு வெளியே போக அனுமதி கிடையாது. அவள் யாரோடும் பேசாமல், ஒரு மூலையில் முடங்கிக் கிடப்பாள். என்ன கேட்டாலும் பதில் சொல்லமாட்டாள். 'கொந்தங்கல்லு' (காயாட்டம்), பதினஞ்சு நாயும் புலியும் (வெட்டுப்புலி ஆட்டம்) எதுவும் ஆட வருவதில்லை.

ஒருநாள், அந்தி மயங்கும் நேரம். குட்டி அக்கா, கொல்லைப் புறத்து வேலி ஓரமாக யாருடனோ பேசிக் கொண்டு நின்றாளாம். கண்டவள் ஜானு அக்காதான். அவள் உடனே கொள்ளி வாக்காக நெஞ்சைச் சுடும்படி சொல்லிவிட்டாள். ''குட்டி அக்கா, நான் பார்த்து விட்டேன்.''

"பார்த்துவிட்டாயில்லையா? ரொம்ப நல்லது."

"வெட்கம், மானம் இருக்கவேண்டும் குட்டி அக்கா! கீழ்ச்சாதிக்காரனோடு போய்..."

"நீ என்னைச் சீர்த்திருத்த வேண்டாம்."

பேச்சு தடித்தது. கடைசியில், காது மணிக்காகக் காதையே அறுத்துக்கொண்ட நிகழ்ச்சி குறுக்கிட்டது. கரிப்பூராடம் (பெண்களுக்கு ஆகாத நாள்) என்று ஜானு அக்கா குட்டி அக்காளை அழைத்தாள். ஜானு அக்காவுக்குச் செம்மையாய் அடி விழவேண்டிய சமயம்; பெரியம்மா ஓடிவந்தாள்.

"அந்தி சாய்கிற வேளையிலே இங்கே என்னடீ வம்பு?"

ஜானு அக்கா, அழுதுகொண்டே நடந்ததை எல்லாம் சொன்னாள். பெரிய அக்கா வேலி ஓரமாக நின்றுகொண்டு, யாரோ ஆணோடு ரகசியம் பேசிக்கொண்டிருந்ததை நேரில் கண்டதுதான் இவ்வளவுக்கும் காரணமென்பதைத் தெரிவித்தாள். "இது என் பிசகா அம்மா?' என்று முடித்தாள் ஜானு அக்கா.

பெரியம்மா உச்சந்தலையில் கைவைத்து அப்படியே குன்றிப்போனாள். அம்மா முணுமுணுத்தாள். "குடும்பம் கெட்டுப் போகிற காலம் வந்து விட்டது."

பெரியம்மா சட்டென்று மூலையில் சர்த்தி வைத்திருந்த விளக்கு மாற்றை எடுத்து வந்து, குட்டி அக்காவைப் பல வீச்சுகளாக அடித்தாள். ஓங்கி ஓங்கிப் புடைத்துக் கொண்டே, "ஒண்ணு நீ திருந்தணும்; இல்லே, நீ செத்துப் போகணும்!" என்று இரைந்தாள். அவள் ஆத்திரத்தையும் ஆவேசமாக அடிப்பதையும் பார்த்த போது, குட்டி அக்காவுக்கு இன்று சாவுதான் என்று எனக்குத் தோன்றியது. நான் நடுங்கிப்போய், அம்மாவை இறுகக் கட்டிக் கொண்டேன்.

"சொல்லேண்டீ! இனிமேல் இதுபோல் நடப்பாயா?"

விளக்குமாற்று அடி மீண்டும் வலுத்தது...

"குட்டி அக்காவை அடிக்கவேண்டாம், அம்மா!" நான் அழுதுகொண்டே அம்மாவிடம் முறையிட்டேன்.

"அவளுக்கு இவ்வளவும் வேண்டியதுதான். மூதேவி!" என்றாள் அம்மா.

குட்டி அக்கா அவ்வளவு அடிகள் வாங்கியும்கூட அழவில்லை. அடி விழும்போதெல்லாம், வாசல் கதவைப் பிடித்துக்கொண்டு உடம்பை நெளித்து நெளித்துக் கொடுத்தாள்...

மீண்டும் அடிகள்...

"இனிமேல் இப்படி என் காதுக்கு இது எட்டுமாடி?"

தொடர்ந்து அடிகள்.

"நான் சாகப் போகிறேன்..."

"நீ செத்துத் தொலையடி!"

"நான் உயிரை விடப்போகிறேன்."

"நீ செத்துத் தொலையடீ..."

துடைப்பம் கட்டவிழ்ந்து, ஈர்க்குச்சிகள் சிதறி விழுந்தன. பெரியம்மா ஓர் அலறல் அலறிக்கொண்டு, தரையிலே விழுந்து, உரக்க அழத் தொடங்கினாள்...நான் அம்மாவின் மார்பில் புதைத்திருந்த முகத்தை நிமிர்த்திப் பார்த்தபோது, அங்கே குட்டி அக்கா கதவுப் பலகையைப் பற்றி நின்றுகொண்டே, கண்களை மூடியபடி, "நான் சாகத்தான் போகிறேன்" என்றாள்.

அன்று இரவு வீடே அமைதியில் மூழ்கி யிருந்தது. யாருமே பேசவில்லை.

பெரியம்மா சாப்பிடவில்லை. அம்மா போய் அழைத்த போது, குட்டி அக்காவும் சாப்பாடு வேண்டாம் என்று சொல்லி விட்டாள். ஜானு அக்காவும் அன்று சாப்பிட வில்லை. எனக்கு மட்டும் எதற்கு? எனக்கும் சாப்பாடு வேண்டாம். அம்மா எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள். எனக்கு வேண்டாமென்றால் வேண்டாம்தான். வழக்க மில்லாத செயலாய், அம்மா என் தொடையில் ஓர் அடி வைத்தாள். அதுதான் சாக்கு; அப்படி ஒரு காரணத்துக் காகத்தான் காத்திருந்தேன். உரக்க அழுதுகொண்டே நான் எழுந்துபோய், குட்டி அக்காளின் படுக்கையில் படுத்துக்கொண்டு விட்டேன். தளர்ந்த குரலில், "வாசு நீ சாப்பிட்டியாடா?" என்று கேட்டாள் குட்டி அக்கா.

"எனக்கு ஒண்ணும் வேண்டாம்."

அம்மா, பிறகு வந்து, தன் பக்கத்தில் படுத்துக் கொள்ள அழைத்தாள். யாரிடமோ சொல்வது போல, "நான் இங்கேதான் படுத்துக் கொள்ளப் போகிறேன்." என்றேன்.

குட்டி அக்கா என்னைக் கட்டி அணைத்தபடியே படுத்திருந்தாள். வாசல் கதவையும், அடுக்களைக் கதவையும் சாத்தித் தாளிடுவது காதில் விழுந்தது. விளக்குகளெல்லாம் அணைக்கப்பட்டன. எனக்கு உறக்கம் வரவில்லை. குட்டி அக்காவும் தூங்கவில்லை என்பது தெரிந்தது. அவள் நெஞ்சத்தோடு ஒட்டிப் படுத்திருந்ததால், அவள் கேவிக்கேவி விம்முவது தெரிந்தது. இருட்டில் கொஞ்ச நேரம் கண் விழித்துக் கிடந்தபின், நான் மெல்ல, "குட்டி அக்கா!" என்று அழைத்தேன்.

"தூங்குடா."

"ரொம்பவும் வலித்ததா, குட்டி அக்கா?"

"இல்லை; நீ தூங்கேன்."

குட்டி அக்காளின் மார்பகத்தோடு நெருங்கி நான் படுத்திருந்தேன். அது நனைந்து இருந்தது.

“வாசு, நீ நல்ல பையனாக இருக்கவேண்டும். அம்மாவையும் பெரியம்மாவையும் வயசான காலத்தில் கவனித்துக்கொள்ள வேண்டும்...”

நான் “உம்” என்றேன். என் முதுகில் இதமாக தாளமிட்டன குட்டி அக்காளின் விரல்கள்.

தூங்குடா, வாசுக்கண்ணு, தூங்கு.

உறக்கம் மெல்ல மெல்ல, என்னை ஆட்கொண்டது.

விடியற் காலையில் ஓர் அலறல் சப்தம் கேட்டு நான் திடுக்கிட்டு எழுந்தேன். கண் திறந்து, திரும்பிப் பார்த்தேன். அம்மாவும் பெரியம்மாவும் தலையில் கை வைத்து, கதறி அழுது கொண்டிருந்தார்கள். ஜானு அக்காவும் பெரியம்மாவைக் கட்டிப் பிடித்துக்கொண்டு அழுதாள். பயம் மேலிட நான் சுற்றும் முற்றும் பார்த்தேன். நடு வராண்டாவின், உத்தரக் கட்டையில் தொங்கும் கயிற்றில், கழுத்துச் சுருக்கு இறுக, குட்டி அக்காளின் உடல் ஆடிக்கொண்டிருந்தது.

தமிழாக்கம் :
சௌரி

# 8

# மகன்சிங்கின் மரணம்

டி. பத்மநாபன்

பனி ஹாலுக்குப் போய்ச் சேர்ந்தபோது, இருட்டி விட்டது. வழக்கம்போலவே, பண்டித்ஜியின் ஹோட்ட லுக்கு எதிரில் மகன்சிங் பஸ்ஸை நிறுத்தினன். ஆட்கள் நெருக்கிக்கொண்டு, கும்பலாகப் பஸ்ஸைவிட்டு இறங்கி ஞர்கள். மகன்சிங் மட்டும் தன் இடத்தைவிட்டு எழுந் திருக்கவில்லை; ஸ்டியரிங்கில் தலை சாய்த்து கண்மூடிக் கிடந்தான். ஏனே தெரியவில்லை, ஓர் அசதியும் ஆற்ருமை யும் அவனை ஆட்கொண்டது.

பார்க்கப்போனல், அவன் இவ்வளவு தாமதமாக்குக் காரணமே இல்லை. மற்ற நாட்களிலாவது, வழியில்

மிலிட்டரி டிரக்குகள் நிறைய எதிர்ப்படும். அவைகளுக்கெல்லாம் வழி விட ஒதுங்கி, 'சைடு' கொடுக்க வேண்டும். இன்றைக்கு அந்தச் சங்கடமெல்லாம் இல்லை; இருந்தும் தாமதமாகிவிட்டது.

இதற்கு முன்பு நேரமானதுண்டு; ஆனால், இது போல் அதிக நேரம் ஆனது கிடையாது.

இதன் காரணத்தைப்பற்றி யோசித்தபோது, மகன் சிங்கிற்குத் தலையே பிளந்துவிடும்போல் இருந்தது. எதைப்பற்றியும் எந்தச் சமயத்திலும் யோசித்துப் பார்ப்பதில்லை என்று தீர்மானித்திருந்தான். ஆனால், எப்போது ஒன்றைத் தீர்மானம் செய்து, அதைக் கடைப்பிடிக்க முடிந்திருக்கிறது ?

'இப்படி இருப்பதைவிட சாவது மேல். ஏன் அன்றைக்கே இறக்கவில்லை நான்?' மகன்சிங் தனக்குத் தானே சொல்லிக்கொண்டான்.

அதை நினைத்தபோது, அவன் உடல் நடுங்கியது 'எப்படியெல்லாம் நடந்துவிட்டது! எப்படியெல்லாம்... பிறந்த மண்ணிலிருந்து வீசி எறிந்தாற்போல் ஆகிவிட்டதே. இப்படி ஆகியும் உயிரை வைத்துக்கொண்டிருக்கிறேன். வாழ வேண்டுமென்கிற ஆசைக்காக அல்ல; விதி! இப்படி விதித்திருக்கிறது. இப்படியொரு சமாதானம்! ம்த்சு; ஒண்ணும் சுகமில்லை! இனிமேல், இந்தப் புது மண்ணில் ஊன்றி, வேரோடி, வலுப்படுத்திக் கொண்டு, தழைக்க வழி பார்க்க வேண்டும்.

'இதுவரையிலும் தேடி அலைவதிலேயே காலம் போய்விட்டது—அப் புதுமண் எது, எங்கே இருக்கிறது?

இதுவரைக்கும் ஏதும் தீர்மானக் செய்ய முடியவில்லை. தில்லிக்குப் போகலாமென்று ஒரு சமயம் தோன்றுகிறது. இந்தியாவுக்குள் இருந்தாக வேண்டும்

கட்டாயம். எங்காவது ஓரிடத்தில் வாழ்ந்தாக வேணும்; இப்போதுள்ள நிலை இதுதான்.

'வாழ வேண்டும் என்று தீர்மானித்தபிறகு, கடந்ததையெல்லாம் மறந்தாக வேண்டும். மறக்க முயலும் போதெல்லாம் மேலும் அதிகமாகவே, அவை நினைவில் வந்து அலைமோதுகின்றன.'

பச்சன்சிங் ஒருநாள் வந்து சந்தித்தபோது சொன்னான்: "நான் அந்தமானுக்குப் போகப் போகிறேன். அங்கே பதினைந்து ஏக்கரா நிலம் இருக்கிறது."

பதினைந்து ஏக்கரா! நம்ப முடியவில்லையே. எதற்காக இவனுக்கு இவ்வளவு நிலம்? பச்சன்சிங் ஒண்டி ஆளாக இருந்துகொண்டு சாகுபடி செய்துவிடுவானா? யாரையாவது கூட்டாளியாகச் சேர்த்துக்கொள்ளத் தானே வேண்டும். அப்போது...

அங்கே கோதுமை விளையுமோ? விளைந்தாலும் விளையலாம். நல்ல செழிப்பான நிலம் என்று கேள்வி.

'எனக்கென்று ஒரேவொரு ஏக்கரா நிலம் கிடைத்தால்கூட போதும்.'

ஆனால், மகன்சிங் ஒருகாலும், அந்தமானுக்குப் போகப் போகிறதில்லை. இங்கே கிடந்து செத்தாலும் சரி; இதிலாவது ஒரு நிம்மதி உண்டு. 'என் பாட்டன், தந்தை, உற்றார் எல்லாரும் வாழ்ந்து மறைந்த இந்தப் பூமியைவிட்டு என்னால் போக முடியுமா?'

மகன்சிங்கின் மூடிய இதயத்திலிருந்து நினைவுகள் புகைக் கூறுகளாக இழைந்து எழுந்தன.

பஸ்ஸின் மேல் மூடி இருந்த கித்தான் விரிப்பை நீக்கி, சாமான்களை இறக்கும் சப்தம் கேட்டது. நேரம் அதிகமாகத்தான் ஆகியிருக்கிறது. எல்லாரும் இரவுச்

சாப்பாட்டை முடித்துக்கொண்டிருக்கிறார்கள். உண வைப்பற்றி நினைத்தபோது, அவனுக்கு அலுப்புத் தட்டி யது. ஒண்ணும் வேண்டாம் என்று முடிவு செய்து கொண்டான்.

பஸ்ஸிலிருந்து இறங்கி, எதிரே ஹோட்டல் வராந் தாவுக்குச் சென்றான் மகன்சிங். இருவரும் அங்கே நின்றுகொண்டிருந்தார்கள்—தாய்க் கிழவியும் யுவதி யான மகளும்.

மகன்சிங்கின் கால்களில் கனத்த சங்கிலி பூட்டி யிருந்தது போல் இருந்தது. ஒவ்வோர் அடி எடுத்து வைக்கும்போதும், அப்படிக் கனத்தது! அவ்விருவரை யும் கண்டவுடன், சட்டென்று நின்றுவிட்டான். அவர் களுடைய வெறித்த கண்கள் அவனைத் தேடியது மாதிரி இருந்தது. உற்றுப்பார்த்தான். அவைகளில் ஏதோ நம்பிக்கை சுடர்விட்டு ஒளிர்வது போல் தோன்றியது. வெள்ளத்திலே சிக்கித் தத்தளித்து மூழ்கிக் கொண்டி ருப்பவருக்கு, பற்றிக்கொள்ள ஒரு சிறு கொடி கிடைத் தாற்போல் இருந்தது அந்த இரு பெண்டுகளுக்கும்.

எளிய கோலமும், ஏழ்மையும் திக்கற்ற நிலையும் சேர்ந்து உருவானது போன்ற அவ்விரு உருவங்களும் இருளிலிருந்து வெளிச்சத்திற்கு வந்து சேர்ந்தன. மகன் சிங்கிற்கு அவர்களுடைய முகங்களைப் பார்க்கவே கூசியது. திரும்பி நின்றுகொண்டான். உள்ளும் புறமும் வெந்து கொண்டிருந்தது. அவனுடைய உதடுகள் துடி துடித்தன ; கண்கள் நீர் மல்கி மங்கிப் போயின.

'இந்தச் சமயத்தில் பூமி வெடித்து என்னை அப்படியே கொண்டு போயிருந்தால்...'

'என் தந்தையையும் நான் அவமானப்பட வைத் திருக்கிறேன்.'

கோழை !

"சர்தார்ஜி!"—யாரோ உரக்க அழைப்பது கேட்ட்து.

ஆமாம், பண்டித்ஜிதான்.

"பண்டித்ஜி!"

"என்னப்பா?"

மகன்சிங்கிற்கு என்ன பேசுவதென்றே தோன்றவில்லை. அவன் நெற்றியில் கை வைத்துப் பார்த்தார் பண்டித்ஜி.

"ஜுரம் அடிக்கிறது போல் இருக்கிறதே!"

இருந்துவிட்டுப் போகட்டும்.

"வாயேன்; உள்ளே போகலாம், வா!"

மகன்சிங் நகரவில்லை.

எதற்காக உள்ளே போவது? இந்த இருவர் பார்வையிலிருந்தும் மறையவா?

"பனி கொட்டுகிறது, பார்!"

"கொட்டட்டும்."

அந்த வெறும் தரையில் அப்படியே குப்புற விழுந்து, கதறி அழ வேண்டும்போல் இருந்தது. இவர்களுக்கு எதிரே தலை நிமிர்ந்து நிற்கும் தகுதியில் இருந்தால் எப்படி இருக்கும் என்று எண்ணிப் பார்த்தான்; அப்படி ஆசைப்படவும் பட்டான். அப்போது கூடவே வேதனை கலந்த பல நினைவுகள் உணர்வுப்புற்றிலிருந்து கிளம்பின. அம்மா, அப்பா, மனைவி—எல்லாரும் எதிரே தோன்றினார்கள். நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டான். அந்த நினைவுகள் கொதிப்பெடுத்த குருதிப் பெருக்கைப் போல் இதயத்தைப் பிளந்துகொண்டு, வெளியே பாய முனைவது போல் இருந்தது. அவன் தனக்குத்தானே, "நான் இவர்களுக்கு உதவப் போகிறேன்." என்று சொல்லிக் கொண்டான்.

பிறகு, பண்டிட்ஜியுடன் சென்றான்.

பனிஹால் மலை-மேடுகளிலெல்லாம் நிலவு படர ஆரம்பித்தது.

அங்கிருந்து குளிர்ந்த காற்று வீசத் தொடங்கியது.

மகன்சிங் அப்போதும், அடுப்பிற்கு அருகில் நின்று கொண்டிருந்தான். அடுப்பில் தீ இல்லை; உள்ளத்தில் தான் கனன்று எரிகிறதே, போதாதா? தீப்பிழம்புகளாக மேலே எழாத நெருப்பு அது; அதனால்தான் உள்ளத் தீயைப் பிறர் பார்க்க முடிவதில்லை. உடையவனுக்குத் தெரிகிறது அதன் பஸ்மீகர சக்தி எத்தகையதென்று.

மகன்சிங் இவ்வளவு நேரமும் யோசித்தபடியேதான் உட்கார்ந்திருந்தான். பண்டிட்ஜி எல்லாருக்கும் சாப்பாடு போட்டார்; அந்த இரு பெண்டுகளுக்கும் கூடக் கொடுத்தார்.

[அப்பெண்டுகளிடம் காசு கிடையாது. எனக்கு அது முதலியே ஊகமாகத் தெரிந்தது. என் கையில் ஏதாவது இருந்தால் கொடுத்திருக்கலாம். அவர்களுக்கு எதுவும் தேவை இல்லை. ஒரு மூலையில் போய் பேசாமல் நின்று கொண்டிருந்தார்கள். என்னைப்போல், அவர்களுக்கும் நிறைய யோசிக்கவேண்டியவை இருக்கும்.

மனிதன் எதைப்பற்றியும் யோசிக்காமல் இருக்க முடியாதோ?

நான் பண்டிட்ஜியிடம் சொன்னேன்: "அந்த இரு பெண்களுக்கும் ஏதாவது சாப்பிடக் கொடுக்க வேண்டும்."

பண்டிட்ஜி அதற்குக் காசு கேட்டார்.

எனக்கு வெறுப்பல்ல, திகைப்புதான் ஏற்பட்டது. சொந்தத் தாய், பெண் முதலியவர்களுக்குச் சாப்பாடு

போட்டால், எவனாவது அதற்குக் காசு கேட்பானா? இவனும் தன்னைப் பிராம்மணன் என்று கூறிக்கொள்ளு கிறானே — நாய்ப் பயல்!]

...எல்லாரும் படுத்துக் கொண்டார்கள். அவ்விரு பெண்டுகளும் ஒரு மூலையில் முடங்கிக் கிடந்தார்கள். மகன்சிங் மட்டும் உறக்கம் இல்லாமல் ஏதேதோ சிந்தித்துக் கொண்டிருந்தான்.

சாமக்கோழி கூவியபோது, அவன் எழுந்து வெளியே வந்தான். பஸ்ஸிற்குள் படுத்திருந்த ராம்லால்-கண்டெக்டர்-குறட்டை விட்டுக் கொண்டிருந்தான்.

"உடம்பை – முகத்தை எல்லாம் மூடிப் போர்த்திக் கொண்டு தூங்குகிறான் போலிருக்கிறது. நல்ல குளிர் தான். தூங்கட்டும; இளம் வயசுக்காரன். ஆனால் எனக்கென்னவோ இன்றைக்குத் தூக்கம் வரப் போவ தில்லை."—தனக்குள் சொல்லிக்கொண்டான் மகன்சிங்.

இந்த மாரிக் குளிர் நாளில் முன்பெல்லாம்-சிறு வயதில்-வயலுக்குக் காவலுக்காகப் படுத்துக் கிடந்தது நினைவு வந்தது.

கோதுமைப் பயிர்கள் கதிர் முற்றித் தலை சாய்த்து நின்றுகொண்டிருக்கும்.

அறுவடைக்கு முன்பு கழனியில் யாராவது காவலுக் குப் படுத்துக்கொள்ள வேண்டும். இப்போது யார் இருப்பாரோ?

மகன்சிங் பெருமூச்சு விட்டான். பனிஹால் தெரு வில் அவன் கால்போன போக்கில் நடந்து போனான். ஊரே அமைதியுற்றுக் கிடக்கிற வேளை. மேலே மலைப்பாதையில் ஏறி வளைந்து போகிற ரோடு, அந்த நிலா வெளிச்சத்தில் கருநாகம் போல் நெளிந்து விளங்கியது. நாள்தோறும் அவன் இந்தப் பாதையில்

தான் போய் வருகிறான். நாளையும், பிறகும் போய் வரத் தான் போகிறான். ஆனால்...

இந்த நிலாவுக்குப் பால் வண்ணத்தைத் தவிர, வேறு ஏதோ ஓர் அலாதி நிறம் புலப்படுவது போல் இருக்கிறதே. என்ன நிறம்? ஆம், குருதியின் செக்கச் சிவந்த நிறம்.

மனிதச் சடலம் வெந்து கரியும் நிணநாற்றம் வேறு வீசுகிறது.

பழைய 'கார்ட்ராய்' கால் சட்டையின் கையில் பையில் கை விட்டவாறு நடந்தான் மகன்சிங்.

அவன் எதையோ நினைவுபடுத்திக் கொள்ளுகிறான்.

மகன்சிங்கின் பார்வையிலிருந்து அந்த நிலவு, மலைப் பாதை; குன்றுகள் எல்லாமே மறைந்து போயின. வழவழப்பான கால்சட்டைத் துணியின் சுகமான ஸ்பரிசம் மட்டுமே அவனால் உணர முடிந்தது.

மகன்சிங் அச்சட்டையை விரலால் தடவிக்கொண்டிருந்தான்.

நினைத்துப் பார்க்கவே முடியவில்லை.

'லாகூரில் வாங்கிய சட்டை இது.

'அன்று அவளும் என் பக்கத்தில் இருந்தாள்.

'என்னுடைய முதலாவது...

'லாகூர்!

'லாகூர் இப்போது...

'அன்று வாழ்க்கை எவ்வளவு நிறைவாயிருந்தது!'

மகன்சிங் பெருமூச்சு விட்டான். 'கடந்தவையாவும் வெறும் கனவுகளாக இருந்திருந்தால்!'

'ஆனால், எப்படி ஆகமுடியும்? லாகூர் போய்விட்டது. ராவல் பிண்டி போய்விட்டது. பஞ்சாபின்...'

'இந்தப் பெண்டுகள் இருவரும் எங்கிருந்து வந்திருப்பார்கள்? கேட்டுப் பார்க்கவேண்டும் போல் இருந்தது. நாளைக் காலையில் எல்லாம் கேட்டுத் தெரிந்து கொள்ளுவோம்.'

மகன்சிங் ஹோட்டலுக்குத் திரும்பினான். களைப்பு மேலிட்டிருந்தது. போனதுமே தூங்குவதற்காகப் படுத்துக் கொண்டான். அப்படியும் உறக்கம் வரவில்லை. பலவற்றையும் நினைத்துப் பார்த்தான். அக்கிழத்தாயும் யுவதியும் கருத்திலிருந்து மறையவில்லை. தொலைவில் நின்றுகொண்டு, அழுதவாறே, ஏதோ தேவையை எதிர் பார்ப்பதுபோல் தோன்றியது. உதவியை நாடி நிற்கிறார்கள். விவரம் புரியாத விசனம் மகன்சிங்கை ஆட்கொண்டது.

'இவர்களுக்கு உதவவேண்டும்; உதவ வேண்டியது என் கடமை.

'இந்த நிலையில் இவர்களுக்கு உதவாவிட்டால்,பிறகு நான் வாழ்வதில்தான் என்ன பயன்?

'கையிலே ஒரு காசுகூட இல்லாமல் போய்விட்டதே!

'பண்டித்ஜியிடம் கேட்டுப் பார்க்கிறேன்; கிடைத்தால் நல்லது.

'தெய்வம் ஒரு வழி காட்டாமலா போகும்.'

ஆறுதலுடன் சமாதானப்படுத்திக் கொண்டான். பொழுது புலரும் வேளையில் சற்றுக் கண்ணயர்ந்தான். அந்த மயக்க உறக்கத்திலும், அப்பெண்டுகளைப் பற்றிய தெளிவில்லாத சிந்தனை, அவன் மனதில் பனித்திரையாகப் பரந்து கவிந்திருந்தது.

'எங்கே இவர்களை முதலில் கண்டேன்? பத்தான் கோட்டிலோ? இருக்கும்; இருக்கும். ஆனால், சரியாகக் கவனித்ததுமாதோப்பூரில் தான்.' அதற்கு ஒரு காரணமும்

உண்டு. பஸ்ஸைச் சோதனைபோட எல்லாச் சாமான்களையும் வெளியே எடுத்து வைத்தார்கள். டீக்கடைக்குப் பக்கத்து மரத்தடியில் நின்றுகொண்டு, மகன்சிங் அதை வேடிக்கை பார்த்து ரசித்துக் கொண்டிருந்தான்.

அன்றைக்கு இந்த ஏற்பாடெல்லாம் முன்பை விடக் கடுமையாகத்தான் இருந்தன. சாதாரணமாக ஒரு நோட்டம் பார்த்துவிட்டு, விட்டு விடுகிறதாக இல்லை. ஒவ்வொரு பிரயாணியையும் முழுக்க முழுக்கப் பரிசோதனை செய்து வந்தார்கள். ஒரே கூட்டம்.

'இன்றைக்கு யாரோ விசேஷ அதிகாரிகள் வந்திருக்கிறார்கள் போல் இருக்கிறது. அதனால்தான் இவ்வளவு ஆர்ப்பாட்டம்.' என்று எண்ணிக் கொண்டான் மகன்சிங்.

கண்டெக்டர் ராம்லாலிடமிருந்து குறிப்புப் புத்தகத்தை வாங்கிப் பார்த்தார் முன்ஷி (பரிசோதனை அதிகாரி).

"இரண்டு பேர்கள் அதிகமாக இருக்கிறார்கள்." திறந்த பேனாவை மேல் நோக்கிப் பிடித்தவாறே கேட்டார்.

முன்ஷிக்கு எப்போதுமே பொறுமைக் குறைவு. "எங்கே அவர்கள்?"

அவர்கள் பஸ்ஸில்தான் இருந்தார்கள்.

முன்ஷிக்குக் கோபம் வந்தது. கோபம் வந்தால் அவர் பேசமாட்டார், அலறுவார்.

முன்ஷி கேட்டார்: "காது செவிடா? சாமான்களெல்லாம் எங்கே?"

ராம்லால் சொன்னான்: "முன்ஷி, அவர்களிடத்திலே சாமான் எதுவும் கிடையாது."

"அப்படியா?"

முன்ஷி இரண்டடி முன்னால் சென்று, "எங்கே போக ணும்?" என்று கேட்டார்.

"ஸ்ரீநகர்."

கிழவிதான் சொன்னாள். அவளுடைய குரல் குழறு கிறது என்று மகன்சிங்கிற்குத் தோன்றியது.

அவன் மரத்தடியிலிருந்து எழுந்தான். ஏதோ தவறு நடந்திருக்கிறது. ஏன் அந்த அம்மாள் அழுகிறாள்? மாதோப்பூரில், நடு ரஸ்தாவில், பட்டாளக்காரர்களும் பிரயாணிகளும், கடைக்காரர்களும் கூடி இருக்க, அவர் கள் முன்னிலையில் எதற்காக அழுகிறாள்? முதிய அம்மாள் கையிலிருந்த துணி மூட்டையிலிருந்து ஒரு டிக் கெட் எடுத்துக் கொடுப்பதைப் பார்த்தான் மகன்சிங்.

"இது ஜம்மு போகவல்லவா வாங்கியிருக்கிறது?"

யாரும் ஏதும் பேசவில்லை.

முன்ஷி பேனா கொண்டு காற்று வெளியில் ஏதோ வரைந்தார்.

கடைசியில் ஒரு பட்டாளக்காரன் சொன்னான்: "போகட்டும் முன்ஷிஜி! உங்களுக்குச் சம்பந்தமில்லாத காரியம். அவர்கள் எங்கேயாவது போய்க்கொள்ளட் டுமே; உங்களுக்கு என்ன வந்தது?"

முன்ஷிக்கு எரிச்சலாக வந்தது. "ஓ, அப்படியா?" என்று சொல்லிக்கொண்டே, போகிற போக்கில், "நீங் கள்தானே பஞ்சாபின் கதையை முடித்தவர்கள்......" என்றார்.

இதைக் கேட்டபோது மகன்சிங்கிற்கு உடம்பெல் லாம் பதறியது. அவன் பஞ்சாபின் கதையை இன் னும் மறக்கவில்லை. அவனும் பஞ்சாபிலிருந்து வந்த அகதிதான். பஞ்சாபைவிட்டு வெளி இடத்திற்குப் போகவேண்டும் என்கிற ஆசை அவனுக்குக் கிடையாது.

அவனுடைய தந்தை ஒரு விவசாயி; பாட்டனாரும் குடியானவர்தான். அவனுடைய வீட்டில் பரம்பரைச் சொத்தாகப் பல வாள்கள் உண்டு பழையனவாக இருந்தாலும், துருப்பிடிக்காதவை. அதற்காக, அவைகளைக் கொண்டு யாரையும் கொலை செய்ததாக அவன் கேள்விப்பட்டதில்லை.

அப்படியிருக்கிறபோதுதான்......மகன் சிங்கால் பொறுக்க முடியவில்லை. காய்ந்த குச்சிமாதிரி நோஞ்சலாகக் கிடக்கிற அந்த அதிகாரி ஏன் அப்படிச் சொன்னாரோ தெரியவில்லை. யாரைக் குறித்துச் சொன்னாரோ? என்னைக் குறிப்பிட்டோ? அப்படி இருந்தால் பரவாயில்லை. நான் யாரையும் பழிவாங்கவில்லை. அன்றைக்கு நினைத்திருந்தால் பழிவாங்கியிருக்கலாம். ஆனால் ஏனோ அப்படிச் செய்யவில்லை. எந்த எண்ணத்தில் அதிகாரி சொல்லியிருக்கிறாரோ ?

நான் ஏன் பழி வாங்கவில்லை ?

மகன்சிங் பற்களை நெரித்தான். ஏதாவது செய்ய வேண்டும்போல் இருந்தது அவனுக்கு. வாய்ப்பு கிடைக்கவில்லை. அந்தச் சமயத்தில் அவன் அங்கே இல்லை. பிற்பாடுதான் நண்பன் பச்சன்சிங் சொன்னான் : "உன் தகப்பனாரை வாள் கொண்டு, வெட்டி வெட்டிக் கொன்றார்கள்." அவனும் நேரில் பார்க்கவில்லை. பின் யார்தான் பார்த்தது ? தந்தையைக் கொன்றவரைப் பழி வாங்க வேண்டியது, மகனுடைய கடமைதான். கொலை பாதகர்களை எப்படிக் கண்டுபிடிப்பது ? யாரைக் கேட்டால் தெரியும் ?

அம்மா...அவள் முன்பே இறந்துவிட்டாள். நல்ல காலம். இல்லையென்றால் அம்மாவை அந்த அரக்க வெறியர்கள்......

நான் ஊரைவிட்டு முதலில் புறப்படும்போது, அப்பா வுக்கு அருகில் அவளும் இருந்தாள். யாராவது ஏதாவது தகவல் கொடுப்பார்களா என்ருல், ஒன்றும் கிடைக்க வில்லை.

எங்கெல்லாமோ தேடிப் பார்த்தாகிவிட்டது!...

எப்படி ஆனளோ; இருக்கிருளோ என்னவோ?

இறந்திருக்கமாட்டாளென்றுதான் தோன்றுகிறது.

மகன்சிங்கின் நெஞ்சு அப்படியே வெடித்துவிடும் போல் இருந்தது.

அவளுடைய பெயர் மாற்றப்பட்டிருக்கும். நான் இங்கே இருந்துகொண்டு அவளைப்பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கிறேன். அவளும் இப்படித்தானே என்னை நினைந்து ஏங்கிக்கொண்டிருப்பாள்? என் மாதிரி அவளும் நெடுமூச்சு விடத்தானே செய்வாள்? ஆனல், நாங்கள் இனி ஒருகாலும் சந்தித்துக்கொள்ளப் போவதில்லை.

என் பிரிய 'பிரீதம்!'

நீ எங்கே இருக்கிருய்?

கராச்சியிலா?

மகன்சிங்கின் வரவுக்காகப் பஸ் காத்துக்கொண்டு நின்றது.

கண்டெக்டர் ராம்லால் வந்து, "சர்தார்ஜி, புறப்பட லாமா?', என்று கேட்டான்.

மகன்சிங் ஒரு பெருமூச்சு விட்டுக்கொண்டு, பஸ் ஸைக் கிளப்பினன்.

பெரிய பெரிய உருளைக் கற்கள் சிதறிக் கிடக்கிற விசாலமான தரிசு நிலங்கள், ஒட்டகங்களைக் கொண்டு பாசனம் செய்யும் சோளக் கழனிகள், சிறு சிறு குன்று

கள்—இவைகளையெல்லாம் பின்தங்க விட்டு, பஸ் ஜம்மு வுக்கு வந்தபோது, மகன்சிங் யோசனையில் ஆழ்ந்திருந் தான்.

'எப்படி—ஆனாலும் சரி; பிறருக்குத் தீமை செய்ய என்றால் முடியாது. இப்படி இருக்கும்போது, பழி வாங்குவதைப் பற்றி ஏன் நினைத்து, மூளையைக் குழப்பிக் கொள்ள வேண்டும்? போனது போனதுதானே?

மகன்சிங் வேறு பல நிகழ்ச்சிகளையும் எண்ணலா னான். தில்லியிலிருந்து சின்னம்மாவின் கடிதம் வந்து மூன்று நாட்கள் ஆகின்றன. அவளுடைய மகன் பள்ளிக் கூடம் போகிறான். ஏதாவது பண உதவி செய்யவேண் டும். அடுத்தபடியாக, ரூப்சந்தின் மகளுக்குக் கலியா ணம் நிச்சயமாகியிருக்கிறது. ஏதாவது அன்பளிப்பு அனுப்பவேண்டும். அவன், பாவம், கிழவன். வறுமை யில் அல்லல்படுகிறான். காலத்தில் செய்கிற உதவிக்குத் தானே மதிப்பு உண்டு?...

இதையெல்லாம் நினைத்துப் பார்த்தபோது, மகன் சிங்கிற்குச் சிரிப்புதான் வந்தது—புன்சிரிப்பு. மகத்தான மனத் திருப்தி ஏற்பட்டமாதிரி இருந்தது. சம்பளத்தில் அவனுக்காக மட்டும் செலவாவது மிகவும் சொற்பம். மீதியெல்லாம் இப்படித்தான் தர்மச் செலவுக்காகப் பயன்படுகின்றன.

பட்டாளத்தின் முகாமைக் கடந்த சமயத்தில், ஒரு வண்டிக்காரக் கிழவன் தவறான பக்கத்தில் வந்ததைக் கண்டித்து, "மாமா, உங்க உசிரு பத்திரம்!" என்று எச் சரித்தான் மகன்சிங்.

ஓய்வு விடுதிக்கு வந்ததும், பஸ்ஸை நிறுத்திவிட்டு, மகன்சிங் ஹோட்டலுக்குள் நுழைந்தான். அந்தக் கிழவியையும் அந்த இளம் பெண்ணையும் அப்போது

அவன் மறந்தே போனான். திரும்பி வந்தபோது, பிரயாணி கள் பேசிக்கொண்டிருப்பது காதில் விழுந்தது. அந்த இரு பெண்டுகளைப் பற்றியதுதான் பேச்சு.

"பத்தான்கோட் வரையிலும் அவர்கள் நம்மோடு தான் வந்தார்கள்." இளைஞன் ஒருவன் சொன்னான்.

பஸ் புறப்படும் சமயம் நெருங்கியது.

"ஸ்ரீநகருக்குத்தானே அவர்கள் போக வேண்டும்?" யாரோ கேட்டார்கள்.

"என்ன சொன்னீங்க?"

"பாவம், ரொம்பவும் கஷ்டப்படுகிறவங்களாகத் தான் இருந்தாங்க."

"அகதிகளாக இருப்பாங்களோ?"

"அப்போ, ஸ்ரீநகருக்கு எதற்காகப் போக வேண்டும்?"

"பட்டாளத்தில் உள்ள அந்தப் பெரிய அம்மாளின் மகனுக்கு ஏதோ காய்ச்சலாம்."

"அப்படியானால், இந்நேரம் அவன் செத்திருப் பான்."

"அப்படிச் சொல்லாதே சகோதரா!"

"ஓ!"

"பெற்ற தாயில்லையா?"

"மற்றவள் அவன் மனைவியாக இருப்பாள்."

"கடவுள் துணை புரியட்டும்."

மகன்சிங்கின் மனம் வேதனைப்பட்டது. அவ்விரு பெண்டுகளுக்கும் ஏதாவது உபகாரம் செய்யலாமென் றால், இப்போது அவர்களைக் காணவில்லையே. எங்கே போயிருப்பார்கள்?

யாரிடமென்று தெரியாமல், மகன்சிங் சொன்னான்: "அவர்கள் போய்விட்டார்கள் என்று தோன்றுகிறது."

"ஓ, எங்கே போயிருப்பார்கள்!"

"இல்லை; போய்விட்டார்கள்."

"அப்படியானால் இருநூறு கல் தூரமும் நடந்தே போவார்களா?"

"நடந்தாலும் நடப்பார்கள்;"

"இரண்டு ஜோடி செருப்புகளாவது வேண்டுமே."

"சரியாகச் சட்டை கூடக் கிடையாதே?"

"அப்படியும் கிளம்பிவிட்டார்களில்லையா?"

"இதிலே என்ன ஆச்சரியம்?"

"அவர்கள் அழுது கொண்டிருந்தார்கள்."

"இன்றைக்கு இரவே அவர்கள் குளிர் தாளாமல் விறைத்துச் செத்துப் போவார்கள், அதற்காகத்தான்."

"இல்லாவிட்டால்..."

"அந்த யுவதி பார்க்க நன்றாக இருந்தாள். பெரியவர்களுக்குக் கொஞ்சம் ஆசை ஏற்பட்டாலும்..."

"கல்கத்தா, தில்லி-இங்கேயெல்லாம் நிலைமை அதுதான்."

பனிஹாலுக்குப் புறப்பட்டபோது, பஸ் பிரயாணிகள் இப்படி அளவளாவிக் கொண்டிருந்தது. மகன் சிங் காதில் விழுந்தது. அதெல்லாம் இப்போது எதிரொலித்துக் கொண்டிருக்கின்றன. அந்த இளம் பெண்ணின் உருவம் அவன் மன வெளியில் உயர்ந்து தெரிந்தது. தொடர்ந்து சின்னம்மாவின் உருவம் நினைவுக்கு வந்தது.

சின்னம்மா தில்லியில் இருக்கிறாள்.

தில்லியில் அகதிப் பெண்கள் தங்கியிருக்கிறார்கள்... மகன் சிங் வேதனைப்பட்டான்.

சந்தடி மிகுந்திருந்த ஜம்மு நகரின் தெருக்களைக் கடந்து போய்க் கொண்டிருந்தது பஸ். மாளிகை ஒன்றைக் கடந்து, முடுக்குத் திரும்பியதும், மகன் சிங் பஸ்ஸை சட்டென்று நிறுத்தினான்.

அங்கே அவ்விரு பெண்டுகளும், தனிவழியே நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களுக்கென்றே படைத்துள்ள பாதை போலும்.

இருவரும் சந்தேகத்துடன் நின்றார்கள்.

மகன் சிங் அவர்கள் முகத்தைப் பார்க்கவில்லை. இருந்தாலும், "பஸ்ஸிலே வருகிறீர்களா?" என்று கேட்டான்.

இளவயசுக்காரி எங்கோ பார்த்தாள். கிழவியின் கண்கள் மல்கின; "மகனே எங்களுடைய கையிலே பணமில்லையே," என்றாள்.

மகன் சிங், காலமான தன் தாயை நினைக்கலானான். அவள்தான் இவ்வளவு பாசத்துடன் 'மகனே' என்று உணர்ச்சி புலப்படக் கூப்பிடுவாள்.

"நீங்கள் ஏறிக் கொள்ளுங்கள்," என்றான் மகன்சிங்.

இருவரும் தயங்கி நின்றார்கள்.

"ஏறி உட்காருங்களேன்."

ராம்லால் கதவைத் திறந்துவிட்டான்.

"ஆண்டவன் உங்களுக்கு நன்மை செய்வார்."

கிழவியின் குரல் தழுதழுத்தது.

பஸ் புறப்பட்டது.

மகன் சிங் அவர்களைப் பற்றி எண்ணலானான். வியப்பாக இருந்தது;விசனமும் கூடவே எழுந்தது. பெருமூச்செறிந்தான். ஐயோ! பஞ்சாப மக்கள் இப்படி ஆதரவற்றவர்களாகிவிட்டார்களே!

எத்தனை குடும்பங்கள் சீர்குலைந்து, சின்னபின்னமாய் சிதறிப் போயின. உறவு ஒற்றுமையெல்லாம் ஒழிந்துபோயினவே!

ஆனால், இதோ—இங்கே, ஒரு தாய், எத்தனையோ மைல்கள் தொலைவுக்கப்பால் நோயில விழுந்துகிடக்கிற மகனைக் காண, முன்பின் யோசிக்காமல் புறப்பட்டு வந்திருக்கிறாளே!

பாசம் மட்டுமே உள்ளது.

இந்த இளம் பெண், கணவனைக் காண ஏங்கித் தவித்துக் கொண்டிருக்கிறாள் போலிருக்கிறது. அவனும் இவளை எதிர்பார்த்துக் கொண்டிருந்தாலும் இருப்பான். இருவர் கண்களும் ஆவல் பொங்க இணைந்து பரிமாறும் போது ..

அந்த உறவு—அந்தப் பந்தம்—அறாத பந்தம்; வற்றாத உறவு; வாடாத அன்பு. இவர்களைப் போலத் தானே என் தந்தையும் மனைவியும் எனக்காக ஏங்கியிருப்பார்கள்!

நல்ல வளமான இந்த மண்ணில் வாழ்வு துளிர்விட்டுத் தழைத்தெழுந்து பசுமை பூசிப் பொலிவதை மகன்சிங் உவகையுடன் பார்த்துக் கொண்டிருந்தான். அவனுக்கு மிகவும் பிடித்தமான காட்சி இது. பைன் மரங்கள் நிறைந்த குன்றுகளின் சரிவுகளையும், மாதுளஞ் செடிகள் காய்த்துக் குலுங்கும் செழுமையைக் கொண்ட மேடுகளையும், கண்டு மகிழ்ந்தான். அவைகளின் புதுமையும் பொலிவும் என்றைக்கும் மங்காதவை. அங்கே கொஞ்ச நேரம் நிறுத்திவிட்டு, அந்தக்காட்சி இன்பத்தை ரசித்துவிட்டுத்தான் மகன்சிங் போவது வழக்கம். ஆனால், இன்றுமட்டும் அப்படிச் செய்யவில்லை.

கடந்த சம்பவங்களின் நினைவுகளாகிற கொடுங் காற்று, இதயத்தில் படபடப்பைக் கிளப்பிவிட்டிருக் கிறது.

இதற்கு முன்பும், பஞ்சாபிலிருந்து வெளியேறி வந்தவர்களை மகன்சிங் கண்டிருக்கிறான். ஆனால், மனம் இவ்வளவு அல்லல்பட்டதில்லை. இத்துணை அநுதாப உணர்ச்சி எழுந்ததில்லை. போனதெல்லாம் போய்விட் டது; இனிக் கடந்த காலம் திரும்பப் போவதில்லை. அந்த வாழ்க்கையை இனிமேல் அனுபவிக்கப் போவதில்லை. எப்படி இருந்தாலும் சரி, புதிய இடத்தில், புதிய சூழ் நிலையில் புது வாழ்க்கை தொடங்க வேண்டியதுதான். எப்படியாவது வாழ்ந்தாக வேண்டுமல்லவா! இனிக் கடந்தவைகளை நினைத்து மனத்தைப் புண்ணாக்கிக் கொள்வதில்லை என்று நிச்சயித்திருந்தான். ஆனால், இப்போது இந்த உதவி, அன்பு அனுதாபம் இவைகளைக் காணும்போது, பழைய உறவுகள்—தொடர்புகளெல்லாம் நினைவு வந்துவிடுகின்றன. முடியாத காரியமென்று தெரிந்தும், மனம் பறக்கிறது; திரும்பவும் லாகூருக்கே போய்விடலாமா என்றொரு நப்பாசை உந்துகிறது; இயலுமா?

'விண்ட் ஸ்க்ரீன்' வழியாக அறிமுகமுள்ள முகங்கள் தென்பட்டு மறைந்தன. காற்றின் வழியே பழைய குரல் களும் எதிரொலித்தன.

என்ன! இதோ, என் அப்பா அழைக்கிறாரே! அவர் குரலேதான்.

'ஸடன் பிரேக்' போடடு, பஸ்ஸை நிறுத்தினான் மகன் சிங். நல்ல காலம், எதிரே ஒரு கிடுகிடு பள்ளத்தை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது பஸ், ஒரு குலுங்கு குலுங்கி நின்றது.

மகன்சிங் திகைத்து வியர்த்துப் போனுன். ஐய்யோ! எவ்வளவு பேர்களுடைய உயிர்கள் அவன் கையில் இருக்கின்றன!

அவன் பழைய தீர்மானத்தை நினைவுபடுத்திக் கொண்டான்; இனி எதைப்பற்றியும் சிந்திப்பதில்லை.

இந்தக் கிழவியையும் இளம் பெண்ணையும் கண்டதுதான் பிசகாயிற்று. பார்க்காமல் இருந்திருக்க வேண்டும்.

பஸ் மேலே போய்க் கொண்டிருந்தது. அந்திப் போதுக்கு முன்பாகப் பனிஹால் போய்ச் சேர முடிய

உஷைக் கன்னியின் முதல் ஒளிக்கதிர்கள் குன்றுகளில் படிந்த போது, மகன்சிங் படுக்கையை விட்டு எழுந்தான்.

பிரயாணிகள் புறப்படுவதற்காக ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்கள். பண்டித்ஜி டீ தயாரித்துக் கொண்டிருந்தார். மகன்சிங் அவரிடம் போய், ''பண்டித்ஜி, ஒரு சிக்கலிலே அகப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.'' என்ருன்.

பண்டித்ஜி டீக் குவளையைக் கீழே வைத்துவிட்டு டிரைவரின் முகத்தை ஏறிட்டுப் பார்த்தார். ஆஜானுபாகுவாக நெடிதுயர்ந்த கம்பிரமான உடல். 'இவன் இப்படி இதற்கு முன்பு கேட்டதில்லையே' என்று யோசித்தார் பண்டித்ஜி.

'என்ன அப்படித் தேவை வந்துவிட்டது இவனுக்கு? ஏதாவது நோய் நொடிக்கு ஆளாகியிருக்கிருனே? அப்படியானல் இனிமேல் இந்த ஹோட்டலில் வந்து தங்குவது சந்தேகம்.'—குழம்பிக் கொண்டிருந்தார் பண்டித்ஜி.

''பண்டித்ஜி, எனக்குக் கொஞ்சம் பணம் வேணும். சம்பளம் கிடைத்ததும் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன்.''

வாழ்க்கையிலே முதல் தடவையாக ஒருவரிடம் கடன் கேட்கிருன்.

பண்டித்ஜி வறுமையைக் காட்ட, கையை விரித்து "பணமா? சர்தார்ஜி, நானே மொடையில் தவிக்கிறேன். போயும் போயும், இல்லாத சமயமாகப் பார்த்துக் கேட்கிறீரே! என்றும் கேட்காத ஆசாமி; இப்போதுதானே பொழுது விடிந்திருக்கிறது?" என்று சொல்லிவிட்டார்.

மகன்சிங்கின் முகம் வாடியது. ஏன் கேட்டோம் என்று ஆகிவிட்டது. கேட்டதற்குப் பயன் அவமானம் தான் வெளி வரந்தாவில் வந்து நின்று ஏதோ யோசித்துக்கொண்டிருந்தான்.

இரவில் முடங்கி அமைதியில் தோய்ந்திருந்த பனி ஹால், சந்தடி கிளர்ந்து ஜீவகளை பெறத் தொடங்கியது. கடைகள் திறக்கப்பட்டன. மதுக்கடைகளிலிருந்து இடையர்கள் சிவந்த முகத்துடன் வெளியே வந்தார்கள். அவர்களுக்கு முன்னல் ஆட்டு மந்தையும், காவல் நாய்களும் சென்றன. பின்னல், பெண்டுகளும், குழந்தைகளும் வந்தார்கள். என்ன கூச்சல்!

டிரக்குகள் வரிசையாகச் செல்லும் சந்தடி கேட்டது. கூலிக்காரப் பையன்கள், உறக்க மயக்கம் நீங்காத கண்களுடன், வாயில் பல்குச்சியை வைத்துக் கடித்தபடியே அருவியை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார்கள்.

ஊற்றுநீர் வந்துவிழும் ஓசை வேறு கேட்டது. மகன் சிங்கிற்கு அலுப்பு மேலிட்டது. புறப்பட வேண்டிய நேரம் நெருங்கிக் கொண்டிருந்தது. கனத்துப் போன இதயத்துடன் அவன் தன் இடத்தில் வந்து உட்கார்ந்தான். வளைந்தும், சரிந்தும் ஒருவாருகப் பஸ் சமவெளிக்கு வந்து சேர்ந்தது. சுங்கச்சாவடிப் பக்கம் வந்தடைந்த போது, கால்கள் மரத்துப் போயின.

இன்ஸ்பெக்டர் வந்து சேர்ந்தார் செக்கிங் (பரிசோதனை) செய்ய.

மகன்சிங்கிற்கு வியர்த்து விட்டது.

இது வரைக்கும் ஒரு கெட்ட பெயர் வாங்கியதில்லை.

இப்போது...

சனியன்பிடித்த வேளையடா இது. இந்த நேரம் பார்த்தா இந்தத் துரோகிப்பயல் வந்து சேர வேண்டும்?

எங்காவது ஒளிந்து கொண்டிருந்தானே?

தொலைந்து போகட்டும்.

இன்ஸ்பெக்டர், ராம்லாலின் கையிலிருந்த குறிப்புப் புஸ்தகத்தை வாங்கிப் பார்த்தார். மகன்சிங் இன்ஸ்பெக்டரின் முகத்தைப் பார்த்துக் கொண்டிருந்தான். பஸ்ஸில் உள்ளவர்களை எண்ணினார் இன்ஸ்பெக்டர். பிறகு, "இரண்டு பேர்கள் அதிகப்படியாக இருக்கிறார்களே!" என்றான்.

ராம்லால் மகன்சிங்கின் முகத்தைப் பார்த்தான்.

"யார் அந்த இரண்டு பேரும்?"

கிழவியும் யுவதியும் கடைசி சீட்டில் ஒதுக்கமாக உட்கார்ந்திருந்தார்கள். மற்றப் பிரயாணிகளின் கண்கள் அவர்கள் பக்கம் சாய்ந்தன. இரு பேதையரும் தலை தாழ்த்திக் கொண்டார்கள்.

இன்ஸ்பெக்டர் அருகில் போய், "டிக்கெட் எங்கே?" என்று கேட்டார்.

டிக்கட் இல்லை.

"கீழே இறங்கு" என்று கத்திவிட்டு டிரைவரின் நம்பரைக் குறித்துக் கொண்டார் இன்ஸ்பெக்டர்.

மகன்சிங் சிந்தித்துப் பார்த்தான்: 'வேலை போகும், நிச்சயம்.'

இல்லாவிட்டால்...

போகட்டும்...

மகன்சிங், ஸ்ரீநகரில் நோயாளியாக இருக்கும் அந்த இளைஞனை நினைத்தான். அவன் இவர்களுக்காகக் காத்துக் கொண்டிருப்பான்.

இன்று உச்சிவேளைக்குத்தான் போய்ச் சேர முடியும்.

ஆனால், அந்தப் பண்டித்ஜி...மகன்சிங்கிற்கு வெறுப்பாக வந்தது. இப்போது ஓர் இன்ஸ்பெக்டர் வந்து தடுத்து நிறுத்துகிறாரே !

இவர்களுக்கெல்லாம் மனிதனின் வேதனையை உணரமுடியாது.

மகன்சிங் இன்ஸ்பெக்டருக்குப் பக்கத்திலே போய், "இன்று நடுப்பகலுக்குள் இவர்கள் ஸ்ரீநகருக்குப் போய்ச் சேரவேண்டும். அந்தக் கிழவியின் மகன் அங்கே நோயாளியாகக் கிடக்கிறான்'' என்று சொன்னான்.

இன்ஸ்பெக்டர் இலட்சியமாக, ''அதற்காக?'' என்று கேட்டான்.

மகன்சிங்கின் கண்களில் தீப்பொறி பறந்தது.

''அதற்காகவா? அதற்காக நீங்கள் இந்த இருவரையும் தொடர்ந்து இப் பஸ்ஸிலேயே போக அநுமதிக்க வேண்டும். அவர்கள் ஏழைகள்; அகதிகள் அவர்கள் ஏன் இப்படி ஆனார்கள் என்பது போகட்டும். என் கையில் பணமிருந்தால், நானே கொடுத்திருப்பேன். இப்போது என்னிடம் பண மில்லையே என்பதுதான் வருத்தமாக இருக்கிறது." என்றான்.

பிரயாணிகளுக்கு ஒரே வியப்பாக இருந்தது. அவன் பேச்சு அப்போதும் அங்கே முழங்கிக் கொண்டிருந்தது.

மகன்சிங் மேலும் சொன்னான் : "நான் இப்போது உங்களுக்கு எதிரிலேயே டிக்கட் வாங்குகிறேன. பணத்தை ஸ்ரீநகர் போனதும் சரிப்படுத்திக் கொடுத்து விடுகிறேன்."

இன்ஸ்பெக்டர் அப்பணிவான வேண்டுகோளுக்குப் பதிலோ மதிப்போ கொடுக்காமல், திரும்பிச் சென்றார். சுங்கச் சாவடியிலிருந்து, ஏதோ உரக்கக் குரல் கேட்கிறதே என்று வெளியே வந்த போலீஸ்காரர் ஒருவரைப் பார்த்து அந்த இன்ஸ்பெக்டர் சொன்னார்: "இந்தப் பஞ்சாப்காரன்களை நம்பவே கூடாது."

மகன்சிங்கிற்கு அப்படியே குருதி கொதித்தது.

"என்ன சொன்னே? நம்பவே கூடாதில்லே? நான் யார் என்பதைக் காட்டுகின்றேன்." இதுவரை அடக்கி வைத்திருந்த எல்லா உணர்ச்சி வேகங்களும் அணை பிளந்து பொங்கிப் பாயத் தொடங்கிவிட்டன. வேதனை, வருத்தம், வெறுப்பு, பகைமை எல்லாம் அவனுடைய கண்களில் இருளாக வந்து கவிந்தன.

மகன்சிங் முஷ்டியை இறுக்கிக்கொண்டு முன்னே சென்றான்.

இன்ஸ்பெக்டர் ஒதுங்கிக் கொண்டார். யார் யாரோ வந்து மகன்சிங்கைப் பிடித்துக்கொண்டார்கள். கண்டெக்டர் ராம்லால் அவன் இடுப்பைக் கட்டிப்பிடித்து, "சர்தார்ஜி, சர்தார்ஜி..." என்று கெஞ்சினான். நல்லவனை ஒரு மனிதனை ராம்லால் இந்த நிலைமையில் காண்பது இதுதான் முதல் தடவை.

சுய நிலையில் இல்லாத ஆசாமியைப் போல மகன்சிங் சொன்னான் : "விடு, என்னை விடு. அவனுடைய குடலைக்

குத்திப் பிளக்கப் போகிறேன். அப்புறம் நான் செத்தா லும் சரி."

போலீஸ்காரர் குறுக்கிட்டு, "போகட்டும், விடுங்கள் சர்தார்ஜி! அந்த ஆள் அறியாதவர். ஏதோ தெரியாமல் சொல்லிவிட்டார். அவருக்காக வேண்டி நான் மன்னிப்பு கேட்கிறேன். போதுமா?" என்றார்.

மகன்சிங் இதைக் காதில் போட்டுக்கொள்ளாமல், "எனக்கு இனிமேல் இந்த வேலை வேண்டாம். எவனாவது வந்து பஸ்ஸை ஓட்டிக்கொண்டு போகட்டும்."

"சர்தார்ஜி! நீங்கள் இப்படிச் சொல்லக்கூடாது. நீங்கள் ..." போலீஸ்காரர் சொன்னார்.

மகன்சிங் அவர் பேச்சுக்குப் பதிலளிக்காமல், இரு கைகளையும் போலீஸ்காரருக்கு விரித்துக் காண்பித்து, "இந்தக் கைத் தழும்பைப் பார்த்தியா ஐயா? ஒரு பயலை யும் அடித்துப் போட்டதனாலே ஏற்பட்ட தழும்பு இல்லை இது. இந்தக் கம்பெனிப் பஸ்ஸை ஓட்ட ஸ்டியரிங் பிடித்துப் பிடித்து ஏற்பட்ட தழும்பும் இல்லை இது. நிலத்திலே உழுது பாடுபட்டு விவசாயம் செய்ததனாலே உண்டான தழும்பாக்கும் இது. எங்க அப்பா, அவருக்கு அப்பா எல்லாரும் பயிர்த்தொழில் செய்து வாழ்ந்து வந்தார்கள்தான், தெரிந்ததா? நாங்கள் யாரையும் வஞ்சித்தது கிடையாது. இப்போது இவன் வந்து, 'பஞ்சாபிகளை நம்பக் கூடாது' என்று சொல்லுகிறான்!..." என்றான், பொறுமிக்கொண்டே.

மகன்சிங்கிற்கு ஆத்திரம் அடங்கவில்லை. போலீஸ் காரர், "போகட்டும், விடுங்கள் சர்தார்ஜி! அதை மறந்து விடுங்கள்." என்று வேண்டிக் கொண்டார்.

"மறக்கவா முடியும்?"

பிறகு ஏதோ யோசித்து, "நான் இதுவரையில் மறந்துதான் இருந்தேன். இனி என்னலே முடியாது." என்ருன்.

போலீஸ்காரருக்குக் கவலை மேலிட்டது.

"சர்தார்ஜி! எத்தனை பேர்களை இந்தப் பிரயாணிகளை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பார்கள், யோசித்துப் பாருங்கள்." என்று கேட்டுக் கொண்டார்.

எத்தனை பேர்கள் காத்துக் கொண்டிருப்பார்கள்? நோயாளியான வாலிபன் ஒருவன் காத்துக்கொண்டிருப்பான். அவனுக்குத்தான் தாயையும் மனைவியையும் சந்திக்க முடியாதே. பின்னே நான் எதற்காக...?

இதேபோல் மற்றவர்களுக்கும் நிலைமை இருந்தால்?...

"சர்தார்ஜி, பெரிய மனது பண்ணிக் கிளம்புங்கள்."

மகன்சிங் ஏதும் பேசாமல் பஸ்ஸைக் கிளம்பினன். மேடான ரோட்டில் அது மெல்ல விரையத் தொடங்கியது. காலைப் போதின் இளம் வெயில் 'கண்ணுமூச்சி' விளையாடிக் கொண்டிருந்தது. குன்றுப் பிரதேசத்துக் காடுகளில் மரங்கள் உராயும் ஓசை செவியை வந்து தாக்கியது. ஒரு குன்றுக்குப் பின்னல் மற்ருெரு குன்று; இப்படி உயர்ந்துகொண்டே வரிசையாகத் தென்படுகின்றன. குன்று வரிசைக்கு ஒரு முடிவே கிடையாதா?

காற்று பேரொலிப்புடன் தாக்குகிற மாதிரி வீசிக் கொண்டிருந்தது. மகன்சிங்கின் புண்பட்ட மனத்துள்,

கடந்த நினைவுகள் கொதிநீர் மாதிரி தளும்பித் தளும்பி அடங்கின; பொங்கின.

சிறிய குன்று நிழல் படிந்து இருண்டதைப்போல் தென்பட்டது. தொலைவில் தெரிந்த மற்றொரு குன்று வெயிலில் பொலிவுற்று, அப்படியும் இப்படியும் அசைவது போல் தோற்றியது.

குன்றுகளுக்குக் கூட உயிர் இருக்குமோ ?

அவை மரிக்கவும் செய்யுமோ ?

பஞ்சாபிலே மனிதர்களைக் கொன்று குவித்திருக்கிறார்கள். பச்சன்சிங் சொன்னான்: என் தந்தையை வாள் கொண்டு வெட்டிக் கொன்றார்களாம். நானும் இந்தப் பஸ்ஸில் உள்ள அவ்வளவு பேர்களையும் இப்படியே குடை சாய்த்துக் கொன்று விடட்டுமா ?...ஓ ! நெஞ்சு வலிக்கிறது; மூச்சு முட்டுகிற மாதிரி இருக்கிறது. பஸ் எங்காவது குடை சாய்ந்து விழுந்து விடுமோ?...

பஸ் விழுந்து விட்டால் ... மாதோப்பூரிலிருந்து ... இரவில் எல்லாவரையும் ஓநாய்கள் வந்து இழுத்துப் போகும், பஸ் விழாது; அந்தரத்தில் அப்படியே தங்கி நிற்கும். அப்போது நான் கேட்பேன்: ''பஞ்சாபிலிருந்து வந்தவர்களை நம்பக்கூடாது. இல்லையா ?"

எனக்கு வேதனை தாளவில்லை. நான் இறந்து விடுவேனென்று...

லாகூருக்குப் போவேன். நான் என் 'பிரீத'மையும் அழைத்துக்கொண்டு லாகூரில் போய் தங்கினேன். ஆனால்...எனக்கு வேதனை தாளமுடியவில்லை.

இன்று உச்சிப் பொழுதுக்குப் போய்ச் சேர்ந்து விடலாம் ஆனால், . நான் போய் சேர முடியாது. தில்லியில்...என் முந்திய அறிமுகமுள்ள எவரையும் காண முடியவில்லை...கையில் தழும்பு ஏறியிருப்பதாகச் சொன்னேன்...நான் இறந்தால்...லாகூரில் கோதுமைப் பயிர்கள் விளைந்து நிற்கும்...எனக்காக யாராவது... ஒருக்கால் இளம் வயதில்...

குளிர் தாக்குகிறது; பொறுக்க இயலாத குளிர்... இந்தக் 'கார்ட்ராய்' கால் சட்டையை லாகூரில் தான்...

'டன்னல்' (சுரங்கவழி) நெருங்கிக் கொண்டிருக்கிறது.

மகன்சிங்கின் நினைவுகள் ஒடுங்கின. அவனுக்குத் தாங்க முடியாத களைப்பு ஏற்பட்டது. பெரும் வெள்ளத்தில் சிக்கி, இழுத்துச் செல்லப்படுகிற மாதிரி இருந்தது. காவற்காரரின் சமிக்ஞைக்குக் கூடக் காத்து நிற்காமல், பஸ் சுரங்க வழிக்குள் புகுந்து சென்றது.

பஸ் சுரங்கப் பாதையைக் கடந்ததும் மெல்ல நின்றது; கதவைத் திறந்து கொண்டு மகன்சிங் தரையில் உருண்டு விழுந்தான்.

ரம்மியமான காச்மீரத்தின் தாழ்வரையில் கதிரொளி அலைபாய்ந்து கொண்டிருந்தது.

பிரயாணிகள் திடுக்கிட்டுப் போய், இறங்கி வந்தார்கள்.

ராம்லாலும் காவற்காரர்களும் ஓடிவந்து பார்த்த போது, மகன்சிங் வெறும் தரையில் விழுந்து கிடந்தான். மூடிய கண்களிலிருந்து நீர்த்துளிகள் வழிந்து, தாடியில் கட்டியிருந்த 'லேஸ்' துணியை நனைத்திருந்தது.

*பிரயாணிகளில் ஒருவர், "கடவுள் காப்பாற்றினர். இல்லாவிட்டால், நாம் எல்லோரும் பதினையிரம் அடி களுக்குக் கீழே விழுந்து கிடப்போம்!" என்ருர்.*

*ராம்லால் குழந்தையைப் போல் கதறி அழுதான்: "சர்தார்ஜி!...சர்தார்ஜி!..."*

*ராம்லாலின் சர்தார்ஜி, அவனது அழைப்பைக் கேட்க முடியவில்லை. சர்தார்ஜி பஞ்சாபில் ஏதோ ஓரிடத்தில் விளைந்து நிற்கிற கோதுமை வயல்களைக் கனவு கண்டு கொண்டிருந்தான்:*

தமிழாக்கம் :
**சௌரி**

# 9

# உதயகிரி

**ஸ்ரீ அசுவதா**

பாரதத்தின் தலைநகரில், ராஷ்டிரபதி பவனத்தைச் சேர்ந்த தோட்டத்தில், காட்டுச் சக்கரவர்த்தியான உதயகிரி, கல் கட்டட மண்டபத்தில் அசைந்தாடிய படியே நின்றிருந்தான். கிரி என்னும் பெயருக்குப் பொருத்தமாகவே ஒரு குட்டி மலை போலவே அவன் இருந்தான். உயர்ந்து ஓங்கிய கிரியின் தேக்கின் அடி மரம்போல் இருந்த கால்கள் மாறி, மாறி மேலே கொஞ்சம் தூக்கியபடி ஆடிக்கொண்டிருந்தன. கடை வாயி லிருந்து ஆறடி நீளத்துக்கு வெண்மையான தந்தங்கள் நீட்டிக்கொண்டிருந்தன. அவற்றின் வெண்மை உதய கிரியின் கருநீலத்தை இன்னும் அதிகமாகவே எடுத்துக்

காட்டிக்கொண்டிருந்தது. நிலத்தைத் தொட்டும் தொடாமலும் நுணியில் சுற்றிச் சுற்றி வளைந்திருந்த துதிக்கை உயிரற்றதுபோலத் துவண்டிருந்தது. சதா அசைந்து கொண்டே இருக்கும் காதுகள் இரண்டுங்கூட கொசுவையும் ஈக்களையும் துரத்திக் கொண்டிருக்கவில்லை. வெகு தூரத்தில் உள்ளவற்றைக்கூடத் தெளிவாகக் காணும் பார்வை; உதயகிரியின் பாதி திறந்த கண்களில் இருந்தது. எண்ணெய் போன்ற மதநீர் கன்னத்திலும் முகத்திலும் வழிந்தோடிக் கொண்டிருந்தது.

சற்றுப் பின்னங்காலை அசைத்தபொழுது எழுந்த இரும்புச் சங்கிலியின் ஒலியோ முன்னும் பின்னும் தலையை இழுத்தபோது தாம்புக் கயிற்றின் அழுத்தத்தால் ஏற்பட்ட வலியோ உதயகிரியைச் சுய நினைவுக்குக் கொண்டு வரவில்லை.

உதயகிரி கனவு கண்டு கொண்டிருந்தான்.

அப்பொழுது அவன் அஸ்ஸாமின் காடுகளில்; அலைந்து திரிந்துகொண்டிருந்தான். சின்ன வயது தாயின் நிழலூடே நடமாடிக்கொண்டிருந்தான்; பால் குடிக்கும் பருவம். சுற்றிலும் அப்பாவைப் போலவே ஆகாயத்தைத் தொட்டு நின்ற கருநீலக் குன்றுகளின் வரிசைகளைப் போன்ற அவனுடைய கூட்டங்கள். அப்பாவும் பெரிய அண்ணன்மார்களும் துதிக்கையால் மரத்தின் கொம்புகளை முறித்து உடம்பைத் தேய்த்துக் கொண்டும் நீரை இரைத்துக்கொண்டும் இருந்ததுபோல் —மலைகள் தங்கள் சிகரங்களாகிய துதிக்கைகளை எடுத்து மேகங்களாகிய பாறைகளை உடைத்து உடம்பைத் தேய்த்துக் கொண்டிருந்தன. அந்த வழியை அடைத்துக்கொண்டிருந்த குளிர்ந்த பச்சை மரங்களின் இலைகளை உருவித் தன் உடல்மேலே உதயகிரி போட்டுக் கொண்டிருந்தான்.

அந்தக் காட்டு மரங்களின் மத்தியில் அம்மாவுடன் எத்தனை தடவை அவன் ஒளிந்து விளையாடியிருக்கிருன்! அன்னையை விட்டுத் தொலைதூரம் சென்றுவிட்ட சில சமயங்களில் அம்மா குரல் எடுத்துக் கூவுவாள். உடனே அவள் பக்கம் அவன் ஓடி நிற்பான். அப்பொழுது அம்மா தன் துதிக்கையால் இவன் உடலைத் தடவி முத்தம் கொடுத்திருக்கிருள்! ஆலந் துளிரைப் பறித்து அவன் வாயில் ஊட்டியிருக்கிருள். மார்பைக் கடித்தால்கூட உதைக்கமாட்டாள். அம்மா படுத்திருக்கும்போது அவள்மேல் விழுந்து துவண்டு புரண்டால் இவனுக்கு எத்தனை ஆனந்தமாக இருந்தது! அவளுக்கு மிகவும் வலித்தால் அவள் 'கம்'மென்று ஒலி எழுப்புவாளே தவிர வேறு ஒன்றும் செய்யமாட்டாள். ஆனல் அப்பாவுடன் அத்தனை நட்பு இருக்கவில்லை. அவருடைய தந்தத்தைப் பார்த்தாலே பயமாக இருந்தது. அப்பாவிடம் இவனே, இவன் சின்னம்மா, பெரியம்மா இவர்களின் குழந்தைகளோ குறும்பு செய்தபோது, அப்பா தலையாட்டிக் கொண்டு விளையாட்டுக்காக மெத்தென்று குத்தினர். அப்பொழுது எல்லோரும் 'கோ' என்று கத்திக்கொண்டு தங்கள் தாயார்களின் பக்கத்தில் சென்று ஒளிந்து கொண்டிருந்திருக்கிருர்கள். "அப்பா இப்படிச் செய்தார்" என்று தங்கள் தாயார்களிடம் புகாரும் செய்திருக்கிருர்கள்.

அப்பா விளையாட்டுக்காகவோ, கோபத்தாலோ மரங்களைப் பறித்து, உதைத்தபோதும், பூமியை நடுங்கச் செய்து இதர இனங்களுடன் போராடினபோதும் இவன் அம்மாவின் பின்னல் நின்று பார்த்தவண்ணம் நடுங்கிக் கொண்டிருந்தான். ஒரு சமயம் காட்டானை ஒன்றுடன் நடந்த சண்டையில் அப்பாவின் இடது தந்தம் பாதியாக முறிந்து போய்விட்டது. எனினும் சற்றும் பின் வாங்காமல் எதிரியின் மேல் விழுந்து வலது கொம்பினலேயே

முட்டித் தாக்கி அவனைத் துரத்தித் துரத்தியடித்தார். கடைசியில் அவனுடைய மனைவியையும் தனக்கு வசப் படுத்திக்கொண்டார். அப்பாவின் பின்னால் நடந்த அவர்களுக்கு எப்பொழுதுமே எவ்விதப் பயமும் இருக்க வில்லை. காட்டானை, காண்டா மிருகம், புலி, சிறுத்தை இவை எல்லாம் அவர்கள் வழியிலிருந்து தாங்களாகவே ஒதுங்கிச் சென்றுகொண்டிருந்தன.

அப்பாவின் கம்பீரமும் அபாரமான பலமும் இவ னுக்கு மிகவும் பெருமையாக இருந்தன. அப்பொழுது இவனுக்கு இருந்த மகத்தான ஆசை அப்பாவைப் போலத் தானும் ஆகவேண்டும் என்பதே. அதற்குக் காலம் மிகவும் கடக்க வேண்டும் அல்லவா?

கொம்புகள் கொஞ்சம் வெளி வந்தவுடன் இவனும் அப்பாவைப்போல் மரங்களின் மேல் மோதி உராய்ந்து கொண்டான். சின்னஞ்சிறிய மரங்களையும் செடிகளை யும் துதிக்கையால் வளைத்து வேருடன் பறித்தெறிந் தான். உடம்புக்கு வேலையில்லாமல் கொஞ்ச நேரம் சும்மா இருக்கமாட்டான். இவனைவிடச் சிறிய மற்ற (யானைக்) குட்டிகளை வழிமறித்தோ குத்தியோ அவர்கள் துதிக்கையில் இருக்கும் இலைகளையும் கிளைகளையும் பறித்துக்கொண்டோ ஏதாவது வீண் சண்டை செய்து கொண்டிருப்பான். இத்தகைய சண்டைகளில் சில சமயம் அவனுடைய தந்தையே வந்து குறுக்கிட்டு இரு வரையும் விடுவிக்க வேண்டியிருந்தது.

இப்படி ஓடி ஆடி விளையாடியபடியே, தந்தை போலவே உயரமாக வளர்ந்துவிட்டான். நீரில் மூழ்கிப் பார்த்துக்கொண்டபொழுது இவனும் தந்தையைப் போலவே, அதே உடற்கட்டும், பெரிய தலையும், தரை யைத் தொடும் அளவுக்கு வளர்ந்த துதிக்கையும், நீண்ட தந்தங்களும் பெற்று காட்சி அளித்தான். இப்படித்

தன்னைப் பார்த்தபொழுது அளவிடமுடியாத ஆனந்தமும் பெருமையும் இவனுக்கு வந்துவிட்டன. தந்தையின் தந்தத்தைப்போல் அல்லாமல், இவனுடைய தந்தம் இன்னும் முறியாதிருப்பதனால் இவன் இன்னும் அழகாகக்கூட இருந்தான். யானைக் கூட்டத்தின் முன்னால் அதிலும் தன்னைவிடச் சின்னவர்களான சின்னம்மாக்களின் முன்னால் இவன் பெருமையாக நடந்துசெல்வான். அவர்கள் மெச்சும்படியாக மரங்களுடனும் மற்ற வாலிபர்களிடமும் தன் கை வரிசைகளைக் காட்டுவான்.

ஒருநாள் இவனுக்கு ஏதோ ஒரு விசித்திர அநுபவம ஏற்பட்டது. தலைக்குள் எதுவோ புகுந்து என்னவோ செய்துகொண்டிருந்தது. எல்லாப் பக்கமும் புகுந்து துவம்சம் செய்து தன் பலத்தைக் காட்ட வேண்டும் என்று சொல்லும் வகையில் நெற்றியில் தினவெடுத்தது. பக்கத்தில் இருந்த அரளி மரத்தில் நெற்றியை வைத்துத் தேய், தேய் என்று தேய்த்துக்கொண்டான். நெற்றி ஈரமாகிவிட்டது. துதிக்கையால் துடைத்துப் பார்த்தான். ரத்தம் அல்ல; மதநீர் கசிந்து கொண்டிருந்தது; முகத்தின் மேல் வழிந்தது! இப்பொழுது முழுக்க முழுக்கத் தந்தையைப்போலவே ஆண்மையுள்ளவனாகி விட்டான்.

தந்தைக்கு மதநீர் வழிந்தபோது அவருடைய மென்மையான பார்வை மாறி வெறி பிறந்திருந்தது. அதைக் கண்டு அப்போது மற்றவர்கள் எல்லோரும் பயந்து கொண்டிருந்தார்கள். அப்போது தந்தையின் ஓங்கார சப்தம் காடெல்லாம் எதிரொலித்தது. மற்றவர்களை வலுச் சண்டைக்குச் சவால் விடுத்துக் கூப்பிடுவது போல், கணக்கில்லாத மரங்களை முறித்து, செடிகளைப் பறித்து எறிந்து கொண்டிருந்தான். பாறைகளை மேலேயிருந்து கீழே உருட்டித் தள்ளினான். பிரம்மபுத்திரா

நதியில் இறங்கிக் குதித்து விளையாடினான். மற்றச் சமயங்களில் எத்தனை கம்பீரமாகவும் சாந்தமாகவும் நடந்து கொண்டானோ அதைவிடப் பன்மடங்கு பைத்தியமாக ஆடினான். அப்பொழுது அவன் பார்வை முழுவதும் பெண்கள் மேலேயே விழுந்திருக்கும். அவனுக்குத் திருப்தி ஏற்படாமல் இருந்தால் இன்னொரு எதிரி யானையின்மேல் விழுந்து அவனுடன் சண்டை பிடித்துத் துரத்தி அவனுடைய மனைவியையும் தன்னுடையவளாக்கிக் கொண்டிருந்தான். சில சமயங்களில் தன்னந்தனியாக வந்த குட்டிப் பெண்களைப் பின்தொடர்ந்து முத்தம் கொடுத்து, தன்னுடனேயே அழைத்துவரத் தொடங்குவான். அவனுக்கு விருப்பமான பெண்ணுடன் எத்தனையோ காலம் சுகித்து இன்பக் கேளிக்கைகளில் லயித்த பின்னர் சாந்தமடைந்து மீண்டும் பழைய மாதிரி இருப்பான். அப்பொழுதுதான் இவர்கள் எல்லோருக்குமே மீண்டும் தைரியம் வரும்.

இப்பொழுது இவனுக்கு மதநீர் வழிந்த பொழுது என்ன செய்ய வேண்டும் என்று தெரிந்துவிட்டது. மரங்களுடன் மோதியும் பாறைகளை உருட்டித் தள்ளியும் நதியிலே திளைத்து விளையாடியும் தன்னுள்ளே அரித்துக் கொண்டிருந்த சக்தியை, உணர்ச்சியை, வெளிப்படுத்த முயற்சி செய்தான். இதைப் பார்த்த இளவயசுகள் பயந்தன. தந்தைக்கும் கவலையாக இருந்தது. தன்னைக் கண்டு மற்றவர்கள் ஒதுங்கி யிருப்பதைக் கண்டு இவனுக்கு இன்னும் உற்சாகம் ஏற்பட்டது. தன் முன்னால் யாரும் நிற்கமாட்டார்கள் என்ற எண்ணமும் தோன்றியது. தந்தையை அலட்சியமாகப் பார்க்க ஆரம்பித்தான். இந்தச் சந்தர்ப்பத்தில் ஒரு நாள் பிரம்மபுத்திரா நதியின் இடப் பாகத்தில் இவர்கள் எல்லோரும் ஒருவர் மேல் ஒருவர் நீர் இறைத்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். ஒருவரோடொருவர் துதிக்கையால் அடித்துக்

கொண்டும் வேடிக்கையாகச் சண்டை பிடித்துக் கொண்டும் இருந்தார்கள். தந்தை புதிதாக வசப்படுத்தியிருந்த இளம்பெண் ஒருத்தியின் விளையாட்டு இவனுக்கு மிகவும் பிடித்திருந்தது. அவள் இவனைக் காந்தம் போலக் கவர்ந்தாள். அவளுடைய அழகான உடலின் தோல் இன்னும் தேய்ந்து போகாமல் கட்டுமஸ்தாக, வழுவழுப்பாக இருந்தது. 'ஆஹ்; என்று துதிக்கையால் தண்ணீரை இறைக்கும் பொழுது திறந்த வாய், மாந்துளிர் போலச் சிவப்பாக இருந்தது. ஒருசமயம் முன் கால்களையும் இன்னொரு சமயம் பின் கால்களையும் தூக்கித் தூக்கிக் குதிப்பது போல் அவள் விளையாடினாள்.

அவளையே பார்த்துக் கொண்டிருந்த இவனுக்கு உடனே அவளை நன்ருக இறுகத் தழுவி முத்தம் கொடுக்க வேண்டும் என்று மனம் துடித்தது. தந்தை வேறு பெண்கள் சிலருடன் நதியில் திளைத்து, மணலில் படுத்துப் புரண்டு கொண்டிருந்தார். அந்த இளம் பெண்ணின் அருகே சென்று அவள் உடம்பெல்லாம் தண்ணீரை வாரி இறைத்தான். அவளும் சற்றும் சளைக்காமல் இவன் மேல் திருப்பி இறைத்தாள். அவள் துதிக்கையை பிடிக்க இவன் தாவினன். உடனே அவள் அந்தப் பிடிக்குச் சிக்காமல் தப்பி ஓடுவதைப் போல ஆட்டம் காட்டினள். கொஞ்ச நேரத்தில் அவர்கள் துதிக்கைகள் பிணைந்து கொண்டன. இருவரும் மெல்ல விளையாடினர்கள். இவன் அவள் துதிக்கையைத் தூக்கி அவள் வாயில் தன் துதிக்கையின் நுனியை வைத்தான். அவள் அதை மெல்லக் கடித்தாள். 'ஆ' என்று சொல்லிக் கொண்டே இவன் விஷமச் சிரிப்புச் சிரித்தான். அவள் இன்னும் பக்கத்தில் வந்தாள். இவன் துதிக்கையால் அவள் உடல் முழுதும் தடவிக் கொடுத்தான். அவள் வாலைத் தூக்கிக் கொண்டு அக்கரையில் இருந்த மலை மேல் தாவி ஓடினள். இவன் அவள் பின்னலேயே

தொடர்ந்து ஓடிச் சென்று குஞ்சம் போன்ற வாலைப் பிடித்து இழுத்து விளையாட ஆரம்பித்தான். அவள் மலையின் மேல் ஏறி, அடர்ந்த வனத்திலே நின்று கூவினாள். இவனும் கூவிக் கொண்டே அவளைப் பின் தொடர்ந்து கொண்டிருந்தான். திடீரென்று தந்தையின் கோபக் குரல் பின்னால் இருந்து கேட்டது. அடுத்த கணத்தில் தந்தையின் குரல் மிகவும் நெருங்கிவிட்டதைக் கண்டு அவன் சற்று நடுங்கிவிட்டான். இவனுக்கு என்ன செய்வது என்றே புரியவில்லை. பின்னால் திரும்பிப் பார்த்தால், தந்தை பக்கத்தில் வந்து நின்றிருந்தான். அடுத்த நிமிஷமே தந்தையின் வலிமை பொருந்திய நெற்றி இவனுடைய உடலைத் தாக்கியது. அந்தப் பலமான மோதலைத் தாங்க முடியாமல் இவன் தத்தளித்தான். மலையின் மேலே அடர்ந்திருந்த கானகத்திலிருந்து அவள் குரல் மறுமுறை கேட்டது. மறுகணத்திலே இவன் மெய்மறந்து கோபமிகுதியால் கூவிக்கொண்டு, தன் முன்னால் இருப்பவன் தந்தை என்பதையும் கருதாமல் அவன் மேலே பாய்ந்தான்.

துதிக்கையுடன் துதிக்கை சுற்றிக் கொண்டது. நெற்றிக்கு நெற்றி முட்டிக் கொண்டது. முன் கால்களால் ஒருவரை ஒருவர் உதைத்துக் கொண்டனர். அவனும் இவனும் முட்டிக் கொண்டு விழுந்து எழுந்து புரண்டு எத்தனையோ நாழிகை சண்டை பிடித்துக் கொண்டார்கள். இருவருடைய கூக்குரல்களும் ஆர்ப்பாட்டங்களும் மலைகளில் எதிரொலித்தன. இவனுடைய தந்தத்தின் கூரிய நுனி அவன் கண்ணில் குத்தினபோது அவன் திகைத்தான். அந்தக் கோபத்தில் அவன் முன்னே பாய்ந்து முட்டினான். அந்த வேகத்தில் அவனுடைய ஒரே கொம்பு இவன் முன் காலின் கக்கத்தில் ஆழமாகக் குத்திவிட்டது. ரத்தம் தாரையாகக் கொட்ட ஆரம்பித்தது. இவனால் அந்த வலியைத் தாங்க முடியவில்லை.

பலமாக அடிபட்டுவிட்டோமே என்ற ரோஷத்தால் அருகே இருந்த மண் மேட்டின் மேலேறி அங்கே யிருந்த படிதந்தையின் மீது விழுந்தான். சற்று நேரம் இருவரும் ஒருவருடன் ஒருவர் உருண்டார்கள். தரையிலிருந்து அவன் சுதாரித்துக் கொண்டு எழுந்திருப்பதற்குள், இவன் எழுந்து அவன் தலையை முட்டி மற்ெருரு கொம்பில் துதிக்கையைச் சுற்றி முறித்துவிட்டான். உடனே சிறிது நேரம் கூடத் தாமதியாமல் நதிக்கரை யோரமாக மலையின் மேல் ஏறிச் சென்றுவிட்டான். தரை யிலிருந்து மெல்ல எழுந்து நின்ற தகப்பன் ஆர்ப்பாட்டம் செய்தான். ஆனுல் பின் தொடரவில்லை. மேலே காட்டி லிருந்து இவன் சங்கநாதம் செய்தான். போரிலே தான் வென்ற பெண்ணுடன் கூடி இன்பம் அநுபவித்தான். இன்ெெருரு தடவை தகப்பனின் குரல் கேட்டபோது அது நதியின் மறு பக்கத்திலிருந்தே வந்தது. இனிமேல், இந்தப் பக்கத்தின் கரையோரம் உள்ள குன்றுகள், காடு கள் எல்லாவற்றுக்கும் தானே ராஜா என்று நினைத்துக் கொண்டான். அப்படி நினைத்துக்கொண்டதும் சந்தோஷ மிகுதியால் சுற்றுப்புறம் முழுவதும் அதிரும் வகையில் பிளிறினுன். எங்கும் அந்தக் குரல் எதிரொலித்தது. தன் பிரிய ராணியுடன் இவன் வனராஜ்யத்தை அடைந்தான்.

## 2

இவன் தனிக்காட்டு ராஜாவானுன். தந்தையுடன் நடந்த சண்டையில் நேர்ந்த காயங்களுக்கு வனமூலிகை களைப் பறித்து அப்பிக் கொண்டான். காயங்கள் நிதான மாக ஆறின. சிறிது காலங் கழித்து இரண்டு புது ராணி கள் இவனுக்குத் துதிக்கையால் மாலை போட்டார்கள். காட்டுப் பாதையில் சென்று கொண்டிருந்த வியாபாரி ஒருவன் இவனுடைய பூதாகாரமான சரீரத்தைப் பார்த்தே பயந்து கொண்டு ஓடிப்போனுன்.

அவ்வப்பொழுது பெரிய பெரிய கோர யுத்தங்கள் செய்து தகப்பனைப் போலவே, இவனும் ராணியர் எண்ணிக்கையை வளர்த்துக்கொண்டான்; இன்னும் வளர்த்துக் கொண்டும் இருந்தான். குழந்தைகள் பிறந்தன. தந்தையை விட இவன் குடும்பம் பெரிதாகி விட்டது. இப்பொழுது இவன் இதர யானைகளை வென்று ஓட்டிக்கொண்டிருந்தான். இல்லாவிட்டால் அவற்றைப் பணிந்து போகும்படி செய்துகொண்டிருந்தான். இவனுக்கு மதம் பிடிக்காதிருந்த வேளைகளைத் தவிர மற்றச் சமயங்களில் காட்டு விலங்குகள் எதையும இவனைத் துரத்திக்கொண்டுபோய்த் துன்புறுத்தியதில்லை. தகப்பனிடம் காட்டிய மரியாதையை, யானைக் கூட்டங்கள் இவனிடமும் வைத்திருந்தன; தலைவன் என்ற கௌரவத்தை அளித்திருந்தன.

ஒரு சமயம் இருட்டில் இவன் சென்றுகொண்டிருக்கும்போது, புலியின் குட்டி ஒன்று மிதிபட்டுச் செத்து விட்டது. தன் குட்டி இறந்ததைச் சில விநாடிகள் கழித்து அறிந்த தாய்ப் புலி ஆர்ப்பாட்டத்துடன் வந்து இவன் மேலே விழுந்துவிட்டது. ஆனால் இவன் துதிக்கைக்குப் புலியின் கால் ஒன்று சிக்கியதால் காரியம் வெகு எளிதாகிவிட்டது. புலியை எடுத்து வீசிப் பக்கத்தில் இருந்த மரத்தில் திரும்பத் திரும்ப அடித்தான்; பிசைந்த மண்ணைப்போல். அந்த அடிக்குப் புலியின் மண்டை சிதறி உடைந்து கீழே விழுந்தது; முதுகெலும்பும் முறிந்தது. துதிக்கையை விட்டபொழுது, புலி வெறும் சக்கையாக விழுந்தது. புலியின் நகம் பட்டதால் காயங்கள் குணமாக வெகு காலம் பிடித்தது.

இன்னொரு நாள் இவனுக்கு மதம் பிடித்துவிட்டது. எங்கேயோ சென்று கொண்டிருந்த காண்டா மிருகம் ஒன்றை வலுச்சண்டைக்கு இழுத்தான். அது ஆங்காரத்துடன் இவனை நோக்கிக் குத்த நேராக வரும்போது,

சற்று நகர்ந்துகொண்டான். காண்டா மிருகம் பாய்ந்த வேகத்தில் வெகு தூரம் பின்னால் தள்ளிப் போய் விழுந்தது. அந்த நல்ல சந்தர்ப்பத்தை இவன் பயன்படுத்திக் கொண்டு, காண்டா மிருகத்தின் மீது மோதி, தன் பாரம் முழுவதையும் கொண்டு அதை அழுத்தி, பின்னர் கொம்புகளால் குத்தியும் நெற்றியால் புடைத்தும் கழுத்து மாமிசங்களைக் குத்திக் குதறிப் பிய்த்துத் தள்ளிவிட்டது. இந்த விளையாட்டு அபாயமானது என்று இவனுக்குத் தெரியும். ஆனால் மதம் பிடித்தபொழுது எதைத்தான் இவன் சட்டை செய்திருக்கிறான்.

காட்டரசனைப்போல் தன் ராஜ குடும்பத்துடன் கானகத்தில் ஆட்சி செலுத்தி, தன்னிச்சையாக, எவ்வித பயமும் இல்லாமல் இவன் அலைந்துகொண்டிருந்தான். மரத்தின் இளங் கிளைகளைப் பறித்துத் தன் கூட்டங்கள் உண்ண வழியெங்கும் போட்டுக்கொண்டிருந்தான்; தானும் வயிறார வேப்பப் பழங்களையும் ஆலம் பழங்களையும் விரும்பிக் கிளைகளுடன் பறித்து உண்டான்.

ஒவ்வொரு சமயம் கானகத்தின் எல்லையைத் தாண்டி, தோட்டங்களில் புகுந்து ருசி மிக்க கரும்புகளை முறித்துப் போடுவதும் உண்டு. கரும்புகளை யானை முறித்துப் போடும் சப்தத்தைக் கேட்டு தோட்டக்காரர்கள் பலத்த குரலில் கூவுவார்கள். தாரை, தப்பட்டைகளை அடித்து விசித்திரமான விநோத ஒலிகளை எழுப்பி யானையை விரட்ட முயன்றிருக்கிறார்கள். இரண்டொரு சமயங்களில் துப்பாக்கியால் சுட்டபோது, இவனுடைய ராணியில் ஒருத்திக்குக் காயம் பட்டுச் செத்துவிட்டாள். எனினும் இவன் கொஞ்சமும் அஞ்சவில்லை. அவ்வப்போது தன் இச்சையாகக் கரும்புத் தோட்டத்தில் புகுந்து, கரும்புகளைப் பறித்து, முறித்து, துவம்சம் செய்வதை நிறுத்தவே இல்லை.

சூரியன் தலைக்கு மேல் வந்ததும் பிரம்மபுத்திரா நதியில் இவன் கூட்டங்களுடன் நீந்திக்கொண்டிருந்தான். உல்லாசமாக நீர் விளையாட்டில் லயித்துக்கொண்டிருந்தான். நிலாக் காலங்களில் எவ்வளவோ தடவை எல்லோரும் விளையாடிக்கொண்டிருந்தார்கள். மதநீர் வந்தபோது இவன் வெறியைப் பார்த்து பெருமிதம் கொண்ட மனைவிகளும் மக்களும் இன்னும் வெறி அதிகரிக்கும்படி தூண்டினார்கள். எவ்விதக் காரணமும் இல்லாமல் இவன் வனத்தில் அட்டகாசம் செய்த பொழுது அவர்களும் சேர்ந்துகொண்டார்கள். மலையின் மேலேறி இவன் பெரிய பாறைகளைத் தலையினால் பெயர்த்து இடறினபோது, அவை பயங்கரமான சப்தம் செய்துகொண்டே கீழே உருண்டு புரண்டு எதிரே கிடந்தவற்றையெல்லாம் தூள் தூளாகச் செய்தன. ஒவ்வொரு சமயம் அந்தப் பாறைகளும் வேகத்தின் மிகுதியால் பிளந்து துண்டு துண்டாகித் தரையை அடைந்தன. சில சமயங்களில் இவர்கள் உருட்டிய பெருங் கற்கள், மலைப் பாறைகளில் வேகமாகப் புகுந்து ஓடி வரும் அருவியுடன் சேர்ந்து நீரின் வேகத்துடன் சென்று மலையில் உள்ள நீர்த் தேக்கங்களில் விழும். அப்போது நாலு பக்கங்களிலும் சிதறி விழும் நீர்த் திவலைகளின் இனிய காட்சியைத் தங்கள் சின்னஞ் சிறு கண்களால் பார்த்து மகிழ்ந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் தங்களுடைய சக்திக்கேற்பத் தூக்க முடிந்த கற்களைத் தந்தங்களால் உருட்டிக் கொண்டிருந்தார்கள். மரத்தில் இருந்த பாம்பு, குரங்கு முதலிய சிறிய விலங்குகளில் எது கிடைக்கிறதோ அதைத் துதிக்கையால் மேலே தூக்கி எறிந்து இவன் பந்தாட்டம் ஆடும்போது மற்றவர்களும் அதில் பங்கு கொண்டார்கள். இவன் இழுத்தும் குத்தியும் செய்த இம்சைகளை எல்லாம் மற்றப் பிராணிகள் சகித்துக்கொண்டிருந்தார்கள்; ஒவ்வொரு சமயம் கசகிக்

முடியாவிட்டால் இவனுக்கு அடங்கியே இருந்தார்கள். இவனுடைய குறும்புகளைப் பிரியத்துடன் ஏற்றுக் காமத்தைச் சாந்தப்படுத்துவதற்காகச் சிலர் காத்துக்கொண்டிருந்தார்கள். அவர்களால் முடியாத சமயங்களில் புதிதாக ஒருத்தியைத் தேடி எவனுடனாவது போரிட்டு வென்று கொண்டுவந்து விடுவான்.

இவனுடைய இன்ப சாம்ராஜ்யம், நானூறு மைல்கள் பரந்த ரம்மியமான கானகம். குளிர்ந்த வாடைக் காற்று; கேட்பதற்கு இனிமையான நானாவித இசை 'ஒலிகள்; பசித்தபோது வகை வகையான சுவையுள்ள ஆகாரம்; கேளிக்கைக்கும் இன்பத்துக்கும் வேண்டிய அளவு பெண்கள்; வயது நிரம்பாத மக்கள்; ஆட வேண்டிய ஆட்டத்துக்கெல்லாம் சந்தர்ப்பங்கள்; தன்னை வெல்ல எவரும் இல்லை என்ற கர்வம்; பயமே இல்லாத கட்டுப்பாடற்ற சுதந்தரம் இப்படி எதற்குமே குறையே இருக்கவில்லை. எதற்கும்...

வேகமாகப் புழுதிக் காற்று வீசிற்று. உதயகிரி திடுக்கிட்டுக் கண் விழித்தான். தன் முன்னால் புல்கூட முளைக்காத கடினமான கட்டாந்தரை. விளையாட்டுச் சாமான்களை அடுக்கிவைத்தாற்போல வீடுகள். அவற்றை விட்டால் அலங்காரத்துக்காக வரவழைத்திருந்த முரட்டுப் புல்லும் பூம்பாத்திகளும். அசாமின் சோளம், சணல், மூங்கில் இவற்றுக்கு இணையாகுமா இவை? ஒரு முறை இவன் மிதித்தால் முன்னால் கிடப்பது எல்லாம் கலைந்து நாசமாகிவிடுமே! யாரோ சொல்லிச் செய்து கொண்டு வந்து நிறுத்தியதுபோல் பலமற்ற மரங்கள் பெயரளவுக்குத்தானே நின்று கொண்டிருக்கின்றன. என் ராஜ்யத்தின் மரங்களின் ஒரு கிளைக்கு இவை ஈடாகா. பிரம்மபுத்திரா நதியில் முழுகும் அளவு ஆழம் இருக்கும், இங்கே முன்னால் உள்ள தோட்டத்தின் வாய்க்கால்களில் இவன் முழங்கால் மண்டிக்கொண்டு

முழுகுவதற்குக்கூடப் போதுமான தண்ணீர் இல்லை! அஸ்ஸாமின் காடுகள் முழுவதும் நடந்து முடித்திருக்கும் போது முன்னால் இருக்கும் இந்த வனம் உள்ளங்கை அகலம் என்றுதான் சொல்லவேண்டும்! தின்று தின்று தீராமல் கிடந்த நல்ல ஆகார வகைகள் எங்கே! இப் போது முன்னால் கிடக்கும் பழைய தழைகளோ—அதுவும் இந்த ஜனங்கள் கொடுத்த அளவுதான்! இவை எங்கே நிறைந்த குடும்பத்துடன் நடத்திய அந்தப் பூரண வாழ் வும் ஒரு காலம் ஒருவனாகத் தன்னந்தனியே உள்ள இந்த நிலையும்! அந்தப் பூரண சுதந்திரத்திலிருந்து—இந்த இரும்புச் சிறைக்கு. உம்! இவனைச் சிறைப் பிடித்துக் கொண்டு வந்திருந்தார்கள்; அந்த மேல்நாட்டிலிருந்து இந்தப் பொட்டல் காட்டுக்கு! உதயகிரியின் மனம் தன்னைச் சிறைப்பிடித்த நாட்களுக்குப் போயிற்று.

## 3

முன் போலவே ஒரு நாள் கூட்டத்துடன் உதயகிரி காட்டில் அலைந்து கொண்டிருக்கும்போது, சுற்றிலும் தூரத்திலிருந்து காது செவிடாவதுபோல் சப்தங்கள் முழங்கின. நாலு புறங்களிலிருந்தும் அந்த ஒலி மிகவும் நெருங்கிக் கொண்டிருந்தது. அந்த நாராச சப்தத்தி லிருந்து எட்டப் போய்விட வேண்டும் என்று இவன் கூட்டம் பின்னால் நகர்ந்து சென்றது. அந்தப் பக்கத்தி லிருந்தும் சத்தம் மெல்ல வந்தது. ஒரு பக்கத்தில் மட்டும் சப்தம் வெகு அதிகமாக இருந்தது. இவர்கள் ஒரு பக்கமாக ஒதுங்கிச் சென்றார்கள். கொஞ்ச தூரம் போவதற்குள் காட்டிலேயே கரும்பின் வாசனை வந்தது. இவர்களுக்கு ஆச்சரியத்தைத் தந்தது. அதே திசையில் இன்னும் கொஞ்ச தூரம் சென்றதும், அங்கேயே ஒரு கரும்புத் தோட்டம் இருந்தது. சிறிது நாட்களுக்கு

முன்னால் இந்தப் பக்கங்களில் ஓடி ஆடி விளையாடிய பொழுது கரும்புத் தோட்டம் இருந்த அடையாளமே இருக்கவில்லையே! இப்பொழுது மட்டும் எப்படி வந்தது?

இந்தத் தோட்டத்தைச் சுற்றிலும் பலமான வேலி; ஒரே ஒரு பெரிய வாசல். இவர்கள் எல்லோரும் தோட்டத்தின் கரும்பை முறித்து உண்பதற்காகத் தோட்டத்துக்குள் தாவினார்கள். ஆனால் இவனுக்கு மட்டும் ஏனோ தயக்கமாக இருந்தது. அந்த வாசலின் முன்பு நின்று தன் மனைவிகளை உள்ளே போகாமல் தடுத்து நின்றான். தூரத்தில் கேட்ட சப்தங்கள் நெருங்கி வந்தன. மற்றும் தோட்டத்துக்கு அருகே மனிதர்கள் சிலர் நடமாடுவதும் தெரிந்தது. இவன் துதிக்கையைத் தூக்கி மற்றவர்களைக் கூப்பிடுவதுபோல் பிளிறினான். உடனே வெகுவேகமாக மனிதர்கள் குறைவாக இருந்த பக்கத்தில் புகுந்தான். இவனுடைய கூட்டமும் அப்படியே பின்பற்றின. மனிதர்கள் தாறுமாறாக ஓடத் தொடங்கினார்கள். இவன் தன் கூட்டத்துடன் வேறு பத்திரமான இடத்துக்குப் போய் விட்டான். மனிதர்கள் அங்கே மீண்டும் வர முடியவில்லை.

இரண்டு மூன்று தினங்கள் கழிந்தன. காட்டின் இன்னொரு பாகத்தில் இதே போன்று ஒரு நிகழ்ச்சி நடைபெற்றது. அதே நாராச சப்தம்; கரும்புத் தோட்டம், வேலி, வாசல் வழி எல்லாம். அதற்குள் என்னவோ மோசம் இருக்கவேண்டும் என்று இப்பொழுது இவனுக்கு நன்றாகத் தெரிந்துவிட்டது. அந்தத் தோட்டத்தின் பக்கமே நெருங்கவில்லை. மீண்டும் ஓர் ஆபத்திலிருந்து தப்பித்துக் கொண்டார்கள். இதே மாதிரி இன்னும் இரண்டு மூன்று தடவை நடந்தது. ஆனால் இவனுடைய கூட்டம் எதிலும் சிக்கிக் கொள்ளாமல் ஒரு தொந்தரவும் இல்லாமல் நலமாகவே இருந்தது.

சிறிது நாட்களில் இந்த ஆட்டம் நின்றுவிட்டது. இப்படிச் சில நிகழ்ச்சிகள் நடந்தன என்பதையே இவர்

கள் அநேகமாக மறந்துவிட்டார்கள். ஆனால் மனிதர்கள் மட்டும் மறக்கவில்லை. மற்றொரு நாள் இவன் கூட்டத்துடன் விளையாடிக் கொண்டிருந்தான். அப்போது கூட்டத்தில் கடைசி ராஜகுமாரனைக் காணவில்லை; தேடிப் பார்த்தார்கள். அவனுடைய தாயையும் காணவில்லை. பிள்ளையைத் தேடுவதற்குப் போயிருந்தாளோ, என்னவோ! சுற்றுமுற்றும் தேடிப் பார்த்துக் கொண்டிருந்த போது தூரத்தில் அவளுடைய தீனமான கூக்குரல் கேட்டது. அவள் தான் இவனுடைய இளைய ராணி. இளம் பருவம், அழகு ராணி. இவன் செய்த சண்டைகளிலெல்லாம் அவளுக்காகச் செய்ததுதான் அதி பயங்கரமானது; அதிகக் காயங்களை விலையாகக் கொடுத்து அவளைச் சம்பாதித்திருந்தான்.

அந்தத் தீனமான குரலைக் கேட்டவுடன் அந்தத் திக்கை நோக்கி இவன் தாவினான்; இவன் கூட்டமும் பின் தொடர்ந்தது. தன்னுடைய ஆசைக் காதலியும் அருமை மகனும் அதோ, அந்தப் பள்ளத்தில் இருந்தார்கள். கரும்புத் தோட்டம் துவம்சமாகிக் கிடந்தது கண்ணில் பட்டது. ஆனாலும என்ன? மனைவியும் மகனும் சிக்கிக் கொண்டிருந்தார்களே! இவனுக்கு உடனே அவர்கள் இருந்த பக்கம் போய்ச் சேரவேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. ஒரு கணமும் யோசனை செய்யாமல் இவன் பள்ளத்தில் குதித்துவிட்டான்; இவனுக்குப் பின்னால் இவன் கூட்டமும் குதித்தது. பள்ளத்தில் கிடந்த மனைவியைத் தொட்டதும் இவனுக்கு ஏற்பட்ட சந்தோஷம் எத்தனை! ஆனால் மறுகணமே அந்தப் பள்ளத்தில் தானும் தன் கூட்டமும் சிக்கிக் கொண்டு விட்டோமே என்ற நினைவு வந்தது.

பள்ளத்திலிருந்து மேலே ஏற முயன்றார்கள். முடியவில்லை எல்லோரைப் போலவும் இவனும் உதவியற்ற நிலையில் தவித்த தவிப்பினாலும் கோபத்தினாலும் பிளிறி

ஞன்; பிளிறினன்; கானகமெல்லாம் அதிரப் பிளிறினன். இப்பொழுது தெரிகிறது, குழந்தை ஆசைப்பட்ட ஒரு கரும்புத் துண்டுக்காக இவன் மனைவி சிறைப்பட்டிருக்கிருள். பள்ளத்தில் விழுந்த இவர்களுடைய கதறல்கள் அந்த மோசக்கார மனிதர்களை வரவழைத்து விட்டன. அடிமை யானைகளின்மேல் அவர்கள் அமர்ந்து வந்தார்கள். அந்த அடிமை யானைகள் தங்களுக்கும் அந்தக் கதியே ஏற்படும் என்பதைத் தெரியப்படுத்தின.

அன்றையிலிருந்து ஆரம்பமாயிற்று சித்திரவதைகள். பசியே என்னவென்று அறியாதவனைப் பட்டினி போட்டு, நின்ருல் விழுந்துவிடும் நிலைக்கு, சாவின் சமீபத்தில் கொண்டு வந்துவிட்டார்கள். மனிதனின் கண்காணிப்புக்குச் சிக்காமல் பள்ளத்திலேயே சாகவேண்டும் என்ற நினைவு அவனுக்கு உண்டாயிற்று. ஆனல் அவர்கள் தன் மக்களை முதலில் இழுத்துக்கொண்டு சென்றதும், அதைத் தொடர்ந்து தாய்மார்களும்—தன் மனைவிகளும் பின் தொடர்ந்தபோது இவன் மட்டும் தன்னந் தனியனுக அங்கே இருக்க முடியாமல், மனைவி மக்களுடன் கூட்டமாக இருக்கும் ஆசையினல் பள்ளத்திலிருந்து வெளியில் வந்தான்.

கயிறு மாட்டிக்கொண்டு இரண்டு அடிமை யானைகளுக்கு மத்தியில் பள்ளத்திலிருந்து மேலே வந்தவுடன் தான் தெரிந்தது—தான் கூட்டத்திலிருந்து முற்றும் தனிமைப்படுத்தப் பட்டோம் என்று—இவர்களிடம் சிக்கிக்கொண்டது தப்பு என்று தெரிந்தது. தன்னை இனி மனைவி மக்களுடன் இருக்கவிட மாட்டார்கள் என்பதையும் உணர்ந்து கொண்டான். இனி என்ன பயன்? அன்று காணுமற்போன மனைவியரை இன்று வரையில் காணவில்லை. அவர்களிடம் இவன் எத்தனை அன்பு வைத்திருந்தான். இவனைப் போலவே, தன் மக்களும் எங்கெங்கே என்ன வேதனைப்படுகிருர்களோ! பாவம்!

பள்ளத்தில் விழுந்தது ஒன்று; மனைவி மக்களிட மிருந்து பிரிக்கப்பெற்றது மற்றொன்று. இந்த இரண்டு மோசங்களையும் நினைத்தபோது கோபம் பீறிட்டெழுந் தது. பிளிறினான்; மிகுந்த ஆர்ப்பாட்டம் செய்தான்; தப்பிச் செல்ல முயற்சிகள் செய்தான்; மனிதர்கள் எவரை யும் அருகே அண்டவிடவில்லை. ஆனால் கயிற்றுச் சங்கிலி கள் பலமாக இருந்தன. இவன் பலம் எல்லாம் ஒடுங்கிப் போயிற்று. ஆனாலும் அடிக்கடி கயிற்றை இழுத்துப் பார்ப்பதை விடவில்லை. எங்கே கயிற்றை அறுத்துக் கொண்டு தப்பி ஓடிவிடுமோ என்று பயந்து, பாதத்தின் அடிப்பாகத்தில் தோலில் அறுத்துக் காயங்களைச் செய்து அதில் கயிற்றைக் கட்டியிருந்தார்கள். அந்தக் கால் காயம் ஆறாமல் இருக்க, சீமெண்ணெய்யைக் கொட்டி புண்ணை அதிகப்படுத்தி யிருந்தார்கள். அப்பொழுது காலை இழுத்தால் புண்ணின்மேல் சூடு இருந்தாற்போல் வேதனையாகிக் கொண்டிருந்தது. தப்பித்துக் கொள்வ தற்காகக் கயிற்றை இழுக்கலாம் போலத் தோன்றியது. ஆனால் இழுப்பதற்கும் முடியவில்லை.

தனிமை, பசி, தாகம், பலவீனம், புண், புண்ணில் எப்போதும் மொய்த்துக் கொண்டிருக்கும் ஈக்களின் தொல்லை, மனிதர்களின் தீய பார்வை—இந்தத் துன்பங் கள் போதாவோ என்பது போல, இவனைப் பழக்குவதற் கான கடினமான பயிற்சிகள் வேறு; பிறர் சொல்லிச் செய்வதையே அறியாத, கட்டுப்பாட்டையே கண்டிராத இவனுக்குப் பயிற்சிகள் சொல்லித்தர ஒரு மனிதன்! அந்தப் பாவி சொன்னால் நிற்கவேண்டும், நடக்க வேண்டும், காலைத் தூக்கவேண்டும், துதிக்கையைத் தூக்கிச் சலாம் செய்யவேண்டும்—இன்னும் என்னென் னவோ சொல்வதை எல்லாம் செய்யக் கற்கவேண்டி யிருந்தது. அவ்விதம் செய்தால்தான் பிடி புல்லும் கொஞ் சம் கரும்பும் வெல்லமும்—இப்படி ஆசை காட்டினார்கள்.

இல்லாவிட்டால் இவன் உடம்பின் மேலேறி, கழுத்தின் மேல் உட்கார்ந்திருப்பவன் உயிர்போகும் மாதிரி குத்தினான், வாலை முறுக்கினான். இவன் எத்தனை வேதனைகளை அவனிடம் அனுபவித்திருக்க வேண்டும்! அவர்களுக்குத் திருப்தியாக நடந்து கொண்டால் ஒருநாள் தப்பித்துக் கொண்டு, தன் ராஜ்யத்துக்கு ஓடிவிடும் வாய்ப்புக் கிடைத்துவிடும் என்ற அடக்க முடியாத ஆசையால் எல்லா இம்சைகளையும் இவன் சகித்துக்கொண்டான்.

இப்பொழுது தன் நாட்டிலிருந்து எத்தனையோ தூரம் இந்தப் பாழான இடத்துக்கு அழைத்துக்கொண்டு வந்திருக்கிறார்கள். வனத்தில் காட்டரசனைப் போல இருந்தவன் இங்கே எளியவனாகி விட்டான்! அற்ப மனிதர்களின் குழந்தைகள் பார்க்க வேண்டிய காட்சிப் பொருள்! அவர்களுடைய சந்தோஷத்துக்குரிய விளையாட்டுச் சாமான்! அவர்கள் கொடுத்த பண்டங்களைத் தின்ன வேண்டியிருந்தது; சொன்னதைச் செய்யவேண்டியிருந்தது. மற்றவர்களுடைய தயை, கேலி, பரிகாசம், அதட்டல், அதிகாரம் இவை எல்லாவற்றுக்கும் உட்பட்டு வாழவேண்டியிருந்தது. பிரம்மபுத்திரா நதியின் சேற்றிலே புரண்டு, அதன் கரையோரம் அடர்ந்திருந்த காடுகளின் மரம் செடி கொடிகளுடே விருப்பம்போல நடந்து திரிய வேண்டியவன், இவர்கள் செய்த விகார அலங்காரகளுடே, இந்த ஊரின் ஜனக் கூட்டங்களின் மத்தியில் தன்னை அடிமைப்படுத்தி ஊர்வலம் நடத்தினார்கள். தங்கள் பெருமையைப் பிரகடனப்படுத்திக் கொள்ள அவ்விதம் செய்தார்கள்.

அப்பொழுது கயிற்றுச் சங்கிலிகள் ஒன்றும் பிணைந்திருக்கவில்லை. எனவே, அந்தச் சமயத்தைப் பயன்படுத்திக் கொண்டு தன் ராஜ்யத்துக்கு மீண்டும் ஓடிப் போக வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது. ஆனல்

அந்தப் பாழாய்ப் போன ஜனங்கள், மலை நாட்டின் கொசுக்களைப் போல மொய்த்துக் கொண்டிருந்தார்களே! அவர்களை இழுத்துப் போட்டு, எடுத்து ஏறி ஏறிந்து எப்படியோ போகலாம் என்றால் இவனுடைய ராஜ்யத்தின் திக்கு ஏதோ? அது எத்தனை தொலைவில் இருக்கிறதோ? அவனுக்கே தெரியாது.

இப்பொழுது உதயகிரியின் முகத்தில் மதநீர் வழிந்து கொட்டிற்று. இவன் திறந்த கண்கள் நெருப்புப் போலானது. தலை முழுவதும் என்னவோ அரித்தது. உடம்பு இறுகியது; அதிர்ந்தது. ஆஹா! மதம் ஏறின இந்த நாட்களில் அவன் எப்படி எப்படியெல்லாம் ஆடியிருக்கிறான்; எங்கே அந்த மலைகள்! எங்கே கொடி, தழை, சருகுகள்! எங்கே பெண்கள்! ஓ!...ஓ!!...ஓ!!!... ஐயோ! இந்தக் கட்டுப்பாடு—தளை—தனிமை—பாழ்! உதயகிரி துதிக்கையைச் சுற்றிலும் துழாவினான். கிடைத்ததை எடுத்து எறிய வேண்டும் போல இருந்தது.

சில தினங்களுக்கு முன்னால்—மதம் பிடித்தபொழுது ஆகாரம் கொண்டு வந்த மனிதன் துதிக்கையில் சிக்கி விழுந்தான்; அவனைத் துதிக்கையால் சுழற்றி எடுத்த போது அவன் எப்படி விறிட்டுக் கதறினான்! தொப்பென்று நிலத்தில் அவனை அடித்தபொழுது பேச்சு மூச்சின்றிக் கிடந்தான். மீண்டும் அவனைத் துதிக்கையால் பற்றி மேலே ஆகாயத்தில் பந்துபோல் வீசி நிலத்தில் தொப்பென்று விழச் செய்தானே, அந்த விளையாட்டு எவ்வளவு நன்றாக இருந்தது. ஆனால் பாறைகளை உருட்டினது போல், மரத்தை முறித்து எறிந்தது போல் அவ்வளவு நன்றாக இருக்கவில்லை. பரவாயில்லை!

அந்தச் சம்பவத்துக்குப் பிறகு ஒரு மனிதனாவது பக்கத்தில் வரவில்லை. சங்கிலிகளை அதிகப்படுத்தி,

துதிக்கையையும் கட்டிவிட்டார்கள். வைத்தியர் வந்தார், கசப்பு மருந்துகளை வாயில் ஊற்றினர். உடம்பில் பல பாகங்களில் குத்தினர்கள்; தட்டினர்கள். அந்தப் பாழும் இம்சைகளைப் பொறுத்துக் கொண்டு, கோபத்தை அடக்கி, குறும்புகளை விட்டு, சாந்தமாகிவிட்டவன் போலக் காண்பித்துக் கொண்டான். உதயகிரியின் போக்கு வைத்தியருக்கும் திருப்தி தந்தது. அதிகப்படியான கட்டுகள் தளர்ந்தன. கொஞ்சம் சுதந்திரம் தந்தார்கள். இப்படியே தன்மானத்தை உள்ளேயே அடக்கிக் கொண்டு எவ்வளவு நாட்கள் இருப்பது? உஹூம் உஹூம்...தன்னால் சாத்தியம் இல்லை....இல்லை. ஆனது ஆகட்டும்! இன்றைக்குத் தன் விருப்பப்படி ஆடியே தீருவது. இந்த அற்பப் பிள்ளைகள் என்ன செய்துவிட முடியும்? இந்த இடங்களை எல்லாம் துவம்சம் செய்து விட்டால்...

இந்தச் சந்தர்ப்பத்தில் மாவுத்தன் பாவா ஜான் உதயகிரியின் மேல் ஏறினன். உதயகிரிக்கு அசாத்தியக் கோபம் வந்துவிட்டது. 'ஆகட்டும். காலைக் கொஞ்சம் மடக்கட்டும். அப்புறம் காட்டுகிறேன் என் ஆட்டத்தை' என்று நினைத்து வெறுமே இருந்தான் உதயகிரி.

பின்னங்காலின் சங்கிலியை ஆள் ஒருவன் அவிழ்த்துப் பின்னர், கழுத்தின் கயிற்றை வளையத்திலிருந்து அவிழ்த்தானே இல்லையோ, கிரியின் துதிக்கை அவன் பக்கம் பாய்ந்தது. அவன் பயந்துகொண்டு விழுந்தடித்துக் கொண்டு மண்டபத்தின் மேலே ஏறித் தப்பித்து ஓடிப் போனன். இப்படி தன் இலக்குக்குத் தப்பி ஓடியதைக்

கண்டதும் உதயகிரிக்கு இன்னும் கோபம் அதிகரித்தது. துதிக்கையைத் தூக்கி, போர் முழக்கம் செய்து கொண்டு வெறி பிடித்தவனைப்போல மண்டபத்திலிருந்து வெளியே புறப்பட்டான். மாவுத்தன் பாவா ஜானின் வார்த்தையை உதயகிரி காதில் போட்டுக்கொள்ளவே இல்லை. அவன் தொடர்ந்து அங்குசத்தால் குத்தினான்; அது வலித்துக் கொண்டே இருந்தது. அதனால் உதயகிரியின் ஆக்ரோஷம் அதிகரித்ததே தவிர அடங்கவே இல்லை. மாவுத்தன் கடைசியில் துதிக்கையில் அங்குசத்தால் குத்தினான். அந்த வலி பொறுக்கமாட்டாமல் உதயகிரி பிளிறினான். மாவுத்தன் மீதிருந்த கோபத்தைப் பக்கத்திலிருந்த மரமொன்றின் மேல் உதயகிரி தீர்த்துக் கொண்டான். வேரோடு பறித்து இவன் வானத்தில் விட்டெறிந்த அந்த மரம் ஓர் வீட்டின் மேல் விழுந்து அதன் முன் பகுதி உடைந்து போயிற்று.

சுற்றுமுற்றும் இருந்த ஜனங்கள் குழந்தை குட்டிகளை எடுத்துக் கொண்டு, திக்குக்கு ஒருவராக ஓடினார்கள்; வீட்டின் முன் வாசலைப் பத்திரப்படுத்தினார்கள். 'குய்யோ முறையோ' என்று கூவிக் கொண்டிருந்தார்கள் எங்கும் ஒரே கலவரம்; ரகளை; ஜனங்களிடையே பீதி பரவியது. ஜனாதிபதியின் ராணுவ காரியதரிசி கர்னல் கோப்ரான் மற்றும் மெய்காப்பாளர்கள், போலீஸ்காரர்கள் எல்லோரும் வரவழைக்கப்பட்டார்கள். சிறிது நேரத்தில் தீயணைக்கும் என்ஜின் வந்து சேர்ந்தது. எல்லோரும் வெகு தூரத்தில் நின்று கொண்டிருந்தார்கள். உதயகிரியைச் சாந்தப்படுத்தும் முயற்சியில் சிலர் ஈடுபட்டிருந்தார்கள். ஜனங்களுக்கு அவ்வப்போது எச்சரிக்கை சொல்லிக் கொண்டிருந்தார்கள். எல்லோரும் முடிந்த அளவு உயரமான மாடியிலேயே இருக்க வேண்டும் என்று மக்களுக்குச் சொல்லிக்கொண்டே இருந்தார்கள்.

உதயகிரியைத் தடுத்து நிறுத்த யாராலும் முடியவில்லை. அவன் புகுந்த இடமெல்லாம் நாசமாகிவிட்டது. எத்தனையோ தூண்களைத் தாக்கிப் பிடுங்கி வீடுகள் சரிவதைக் கண்டு உதயகிரி ஆனந்தப்பட்டான். வீடுகளில் புகுந்து சோபா, மேஜை, நாற்காலிகளைத் தூக்கி எடுத்து அடித்துப் பொடியாக்குவது அவனுக்கு ஒரு வேடிக்கை விளையாட்டாக இருந்தது. திறந்த வாசல்களில், ஜன்னல்களில் துதிக்கையைப் புகுத்தி, கிடைத்த பொருள்களை இழுத்துத் தள்ளினன். ஜனங்கள் கைக்குச் சிக்காமல் தப்பித்துக் கொண்டு செல்வதைக் கண்டு அவனுக்கு ஆக்ரோஷம் வளர்ந்தது. வீட்டுச் சுவர்களைத் தலையினல் மோதி அடித்து கால்களால் உதைத்துப் பெயர்த்தான். மூன்று டன் கனமுள்ள ராணுவ லாரி ஒன்றை உருட்டி, முறித்துத் துண்டு துண்டாக்கிப் பாழ் படுத்திவிட்டான்.

பாவா ஜான் அங்குசத்தினல் குத்திக் குத்திச் சோர்ந்து விட்டான். உதயகிரியின் நெற்றியிலிருந்து வழிந்த ரத்தம் மதநீருடன் சேர்ந்து கலந்து இறங்கி வீதியில் சொட்டிக் கொண்டிருந்தது. மாவுத்தனின் சக்தி முழுவதும் இழந்து சிறிது நேரத்தில் யானை மீதிருந்து சறுக்கி விழுந்துவிடுவானே என்ற நிலையை அடைந்துவிட்டான். அவன் கீழே விழுந்தால் உதயகிரியின் வெறிக்கு உடனே பலியாகிவிடுவான். அதற்குள் நல்ல வேளையாகக் கர்னல் கோப்ரான் மூன்ருவது மாடியிலிருந்து கயிற்றைப் பாகன் மேல் எறிந்து, கயிற்றை இறுக்கி, அவனை மேலே இழுத்துக் கொள்ளும்படி செய்தார். அங்குசத்தின் தாக்குதல் நின்றதும் உதயகிரிக்கு இன்னும் தைரியம் வந்துவிட்டது. இன்னும் மதம் விடவில்லை. அவனுக்கு இன்னும் ஆடவேண்டும் போல இருந்தது.

, அப்போது அவன் மனத்தில் வனசாம்ராஜ்யம் தெரிந்தது. அதுதான் அவனுடைய பலத்துக்கு ஏற்ற இடம். அவனுள் குதித்துக் கொண்டிருந்த வெறிச் சக்திக்கு பூரண சந்தர்ப்பம் அங்கேதான் இருக்கிறது. அவனுடைய ராணிகள் அங்கே இருக்கிறார்களோ, இல்லையோ! இல்லாவிட்டால் என்ன, புதுப் பெண்கள் கிடைக்காமலா போய்விடுவார்கள். உதயகிரியை அரித்துக் கொண்டிருந்த காம இச்சை திருப்தியாக வேண்டுமானால் அங்கேயே—ஆமாம் ஆமாம்—அங்கேயே போக வேண்டும். அந்தக் கணமே!...ஆனால் போகும் வழி? ஹூம் எந்த வழியானால் என்ன? எந்தத் திசையானால் என்ன? அலைந்து அலைந்து அங்கேயே சேர்ந்தால் ஆயிற்று. இல்லாவிட்டால் இந்த இடம் வெறும் பாழ்! இங்கேயிருந்து போயே ஆக வேண்டும். தூர—தூரப் போய்க்கொண்டே இருந்தால் தன்னுடைய வனத்தை அடையாமலா போய்விடுவோம்! ஹூம!

கிரிக்கு அந்த எண்ணம் தோன்றிற்றோ இல்லையோ, அந்தக் கணமே ராஷ்டிரபதி பவனத்தின் காட்டிலிருந்து வெளியில் தாவினான். அப்பொழுது ஜனங்களிடையே பெரும் கூக்குரல் எழுந்தது. "உதயகிரி தப்பித்துக் கொண்டு டில்லி நகரத்துக்குப் போய்க் கொண்டிருக்கிறது. இன்னும் என்ன ஆபத்து நேரிடுமோ. ஓ! தடுத்து நிறுத்துங்கள்!...நிறுத்துங்கள்! ... விடாதீர்கள்!...ஏதாவது செய்யுங்கள்"—ஜனங்களின் ஓலம் அதிகரித்தது.

ஜனாதிபதி ஊரில் இருக்கவில்லை. அங்கே கூடியிருந்த அதிகாரிகள் தீர்மானித்தார்கள். கர்னல் உத்தரவு கொடுத்தார். துப்பாக்கிகள் முழங்கின. கிரியின் உடம்பில் குண்டுகள் ஊடுருவின. துவாரம் துவாரமாக இருந்த உடம்புடன் உதயகிரி அமைதியாக உருண்டு விழுந்தான்; அவன் உயிர் பிரிந்தது. மறுபடியும்

தனக்குப் பிரியமான இடத்தை அடைவதற்காக எட்ட ...எட்ட...ரொம்ப தூரம் போனான்.

மறுநாள் பாரதத்தின் பத்திரிகைகளில் எல்லாம் 'உதயகிரி'யின் கோர மரண நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகள் வெளிவந்திருந்தன. அந்தச் செய்திகளைப் படித்த எத்தனை பேர் அந்தத் துரதிர்ஷ்டசாலியான காட்டரசனின் வாழ்க்கைக் கதையை அறிந்தார்களோ? அவனுடைய கடைசிக் கால ஆசையை ஊகித்து உணர்ந்தார்களோ?

தமிழாக்கம் :

கமலா தாமோதரன்.

10

# இயற்கை

யு. ஆர். அனந்தமூர்த்தி

**வா**ய்க்கு வந்தபடி பேசினால் என்ன பிரயோசனம்? ஒற்றைக்காலில் தூணில் சாய்ந்தவனாய், வலி வந்தவன் போல கை கால் ஆடியவண்ணம் நின்றிருந்தான் நாராயணன். அவன் தலை குனிந்து நின்றிருக்கும் நிலையைப் பார்த்து 'பேஷ்' என்று சொல்லலாமா என்று தோன்றிற்று சங்கப்பய்யாவுக்கு. பரவாயில்லை, மகன் வளர்ந்து விட்டான்; பெற்றவன் எதிரே நின்று துணிச்சலாகப் பேசவும் தைரியம் வந்துவிட்டதல்லவா? மேலே எடுத்து வாரின கிராப்பு! ரௌடி போல கழுத்திலே ஒரு மப்ளர்!

இதுதான் பேஷன்போலும். பைக்குள் பீடி கட்டு, நெருப்புக் குச்சியும் இருக்கிறதோ என்னவோ?

சங்கப்பய்யா கேலியாக எண்ணிக்கொண்டே பாக்கைக் கத்தரிக்கத் தொடங்கினர்.

கணவனும் மகனும் எதிரும் புதிருமாக நிற்பதைச் சமையலறையிலிருந்தே பார்த்த சீதம்மா எட்டிப் பார்த்து விட்டு உள்ளே சென்று தேங்காய் துருவத் தொடங்கினள். வெளியே வற்றலை வெயிலில் போட்டுவிட்டு லட்சுமி வந்து ஹாலில் நின்ருள். அண்ணு ஒற்றைக் காலோடு வேர்வை சொட்டிய வண்ணம் கைக்குட்டையால் துடைத்துக்கொண்டு நின்றிருக்கும் காட்சியைப் பார்த்து உள்ளே விரைந்து, "என்னம்மா விஷயம்?" என்று கேட்டாள். கேட்டுக்கொண்டிருந்த அம்மா "உஷ்," என்று மெதுவான குரலில் பேசினள்.

பாவாடையின் ஓரத்தைப் பிடித்துத் தூக்கியபடியே ஓடிவந்தாள் சாந்தா. தந்தையும் அண்ணுவும் எதிரும் புதிருமாக அப்படி நிற்பதின் அர்த்தம் தெரியாமல் சங் கப்பய்யாவின் தோளின்மீது கையை ஊன்றினள். அவர் காதுகளின் பக்கமாகத் தன் உதடுகளைக் கொண்டு வந்து, "சுண்ணும்பு வேணுமா அப்பா?" என்று சொல்லி விட்டு அண்ணுவைக் குறும்புச் சிரிப்புடன் பார்த்தாள். மிகவும் கர்வம் பிடித்தவன். சட்டைப் பையிலே ஒரு நோட்டுப் புத்தகம், பேஞ! வாரத்திற்கொரு முறை கையில் பாட்டரியைப் பிடித்துத் தன்னைக் கூப்பிடாமல் பேட்டைக்குப் போய்ச் சினிமா பார்த்து வருவது வேறே! ஆனல் அப்பா கண்களைத் திறந்துவிட்டால் போதும். எப்படி அழுமூஞ்சியாகி விடுகிருன்!. அவன் நிலையைப்

பார்த்து சாந்தாவுக்குச் சிரிக்க வேண்டும்போல இருந்தது. ஆனால் அப்பா பார்க்காதபோது அவன் அடிக்கப் போகிறான் என்று மௌனத்தைச் சாதித்தாள்.

ஹாலுக்குக் கேட்கும்படியாச் சமையலறையில் தன் அண்ணாவுக்கும் அம்மாவுக்கும் நடந்துகொண்டிருந்த சம்பாஷணையைக் கேட்டு, "உத்திரனுடைய வீரம் வீட்டிற்குள்ளேதான்" என்று சொல்லி சிரித்தாள்.—அப்பாவின் முகத்தைப் பார்த்துவிட்டுப் பேசாமல் இருந்துவிட்டாள்.

"அம்மா, நான் இப்பொழுதே சொல்லிவிடுகிறேன் கேள். அப்பா செய்த இருபதாயிரம் ரூபாய் கடனுக்கு அவர்தான் பொறுப்பாளி. இந்தப் பட்டிக்காட்டில் இருப்பதற்கு எனக்கு இஷ்டமில்லை. உன் அண்ணா ஷிமோகாவில் ஹோட்டல் வைக்கலாம் வா என்று அழைக்கிறார். இதோ, இந்த நிலையிலேயே புறப்பட்டு விட்டேன் என்று நினைத்துக்கொள். எனக்கும் உங்களுக்கும் உறவே இல்லை என்று பாவித்துக்கொள்ளுங்கள்..."

மீசையை அப்படியே முறுக்கி விட்டுச் சாந்தாவின் கையை அகற்றிவிட்டு சங்கப்பய்யா எழுந்து நின்றார். சாந்தா ஒன்றும் செய்ய முடியாமல் திகைத்த வண்ணம் விரலைக் கடித்தவாறு நின்று அப்பாவையே பார்க்கத் தொடங்கினாள்.

"என் மீது ஏண்டா விழுகிறாய், நாணி? என் பேச்சுக்கு இவரிடம் ஏதாவது மதிப்பு இருக்கிறதா? உனக்கும் அது தெரியுமே! அந்தப் பாழும் ஆரஞ்சுத் தோட்டத்துப் பைத்தியத்திற்கு ஆயிரக்கணக்கிலே பணத்தைக்,

கொட்டியாச்சு. ஊருக்கு ஊரே வேண்டாம் என்றாலும் அவர் கேட்டாரா? தான் நினைப்பதையே சாதித்து, தன் போக்கிலேயே அவர் நடப்பவராயிற்றே .....ஆறு வருஷமாயிற்று. சரியாக விளைச்சலையே நாம் பார்த்ததில்லை.

"அந்த நிலத்திலே ஆரஞ்சு விளையாது என்று கணக்குப்பிள்ளை கிளிக்குச் சொல்கிறமாதிரி சொல்லவில்லையா அம்மா?"

"தினம் ஒரே கதைதான். இந்தப் பாழும் வீட்டிலே. எனக்கும் போதும் போதும் என்றாகிவிட்டது நாணி! இன்றைக்கு ஒரு மாட்டைப் புலி பிடித்துவிட்டது; நாளை நாயை சிறுத்தை எடுத்துச் சென்றுவிடும்! ஒன்றா? இரண்டா? கொக்கன் சொல்லிக்கொண்டிருந்தாள்—யானை வேறே வந்து சேர்ந்துக் கொண்டிருக்கிறதாம். அது போதாதென்று பயிருக்கு வேறே வியாதி கண்டிருக்கிறது. எல்லா வியாதிகளுடன் மலேரியா வேறே—கைக்கு மூன்று தம்படி ஆதாயம் வராமலிருக்கும் பொழுது ஏன் இங்கே சாக வேண்டும் சொல்லு?"

"இல்லையா அம்மா! நான் சொல்வதும் அவ்வளவு தான். அந்தக் கணக்குப் பிள்ளையாவது இவருக்குப் புத்திச் சொல்லக்கூடாதா? அவர் மகன் கிட்டணுவுக்கு என்கூட ஹோட்டல் வைக்க சம்மதம் கொடுத்திருக்கிறார். அவனே அதிருஷ்டசாலி..."

"அல்லாமல் என்ன சொல்லு! நான் என்ன பாவம் செய்து இவர் கைப் பிடித்தேனோ?—நீ ஏன் என் வயிற்றில் பிறந்தாயோ? எனக்கு ஒன்றும் புரியும்படியாக இல்லை. என் பிறந்தகத்தில் கொடுத்த அவல் நெக்லஸ், கம்மல்,

ஒட்டியாணம் ஆகிய நகைகளுங்கூட அந்தப் பாழாய்ப் போன ஆரஞ்சுத் தோட்டத்திற்கே போய்விட்டது. அவைகளிருந்தால் விற்று ஏதாவது செய்துகொள் என்று உனக்காவது கொடுத்திருப்பேன்."

"என்னம்மா, அவற்றைக் கொடுப்பதென்றால் அவ்வளவு சுலபமா? இது பிதுரார்ஜிதமான சொத்து—நிலத்தில் எனக்கும் பங்கிருக்கிறது. அப்பா இதைத் தெரிந்து கொள்ளட்டும்."

அண்ணா சொல்லும் பேச்சிற்கு மறு பேச்சு பேசாமலும் கன்னத்திற்கு ஓங்கி இரண்டு அறை கொடுக்காமலும் அப்பா ஏன் அப்படியே நிற்கிறார் என்று சாந்தா சங்கப்பய்யாவையே பார்த்துக்கொண்டிருந்தாள்.

"இந்தப் பாத்தியம் போதாதென்று கலியாணமான ஆறு மாதத்திற்குள்ளே கணவனையிழந்து பாழும் நெற்றியுடன் வந்து சேர்ந்திருக்கிறாள் லட்சுமி. நானும் அடித்துக்கொண்டேன்—அந்தத் தேவரய்யாவின் மகனுக்குக் கொடுக்க வேண்டாம் என்று. என் பேச்சிற்கு இந்த வீட்டில் ஏதாவது மதிப்பு இருக்கிறதா என்ன? மாப்பிள்ளை செத்தான் என்று சேதி வந்த நாளாவது அவர் கண்ணில் ஒரு சொட்டு நீர் வந்ததா? அன்றுகூட அந்த ஆரஞ்சுத் தோட்டத்திற்குப் போனார். நான் சொல்கிறேன் கேள். இவர் செய்த பாவம் ஏழேழு ஜன்மத்திற்கும் தீராது. நம் நலனுக்கு உதவாத வேலையை ஏன் செய்ய வேண்டுமோ! குழந்தைகளை என்னத்திற்காக இப்படிக் கஷ்டப்படுத்த வேண்டுமோ—அந்த கடவுளுக்குத்தான் வெளிச்சம்."

"நீ ஏன் அழுகிறாய் அம்மா?"

தன் தலையில் வாடிப்போயிருந்த பூவை எடுத் தெறிந்த சாந்தா அப்பாவின் முகம் எள்ளும் கொள்ளு மாக வெடிப்பதைப் பார்த்தாள். அவர் எழுந்து திடீ ரென்று வாசலுக்கு விரைந்து சென்று, கைகட்டி நின் றிருந்த கொரகனிடம், "வேலைக்குப் போகக்கூடா தாடா?" என்று அதட்டிவிட்டு மீண்டும் தாழ்வாரத் திற்கே வந்தார்.

"லட்சுமியும் மற்ற பெண்மணிகளைப்போல சுகமா யிருக்கக்கூடாதா என்று நினைக்க எனக்கு வருத்தமா யிருக்கிறது நாணி. அப்பாவின் முகம் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தால் போதும் என்று இவர் சொல்லலாம். நீயே சொல்லப்பா, நாணி. நீ போனல் உன் கூடவே இருக்கிறேன் என்று நினைத்துக்கொள். ஆனலும் இனிமேல் நான் மாடுபோல உழைத்துக் கொண்டிருக்க முடியாது. எனக்கும் நான்கு நாள் இந்தச் சனியன் பிடித்த ஊரைவிட்டு மகன் கூட சுகமாயிருக்க வேண்டுமென்று ஆசையாயிருக்கிறது."

"நான் பார்த்துக்கொள்கிறேனம்மா, இவர் ஜம்பம் எத்தனை நாள் நடக்கிறது என்று! நானும் கிட்டண்ணு வும், உன் அண்ணுவுடன்கூட ஷிமோகாவில் ஹோட்டலைத் திறக்காவிட்டால் பார். ஆகாயமே தலை மீது விழட்டும்—பயப்படுவேன் என்று நினைத்தாயா?"

சங்கப்பய்யா விரைந்து உள்ளே சென்ருர். நாரா யணன் பேச்சு அத்துடன் நின்றது. கொல்லை வாசல்படி யாக அண்ணு மெள்ள நழுவுவதைப் பார்த்து, சாந்தா தனக்குள் சிரித்துக் கொண்டாள். சீதம்மா கணவனை ஒருமுறை பார்த்து மறுபடி தன் வேலையிலேயே கவனம் செலுத்தினள். சங்கப்பய்யா குதித்த வண்ணம் அப் படியே நின்ருர்.

"நாராயணு, நில்!" என்ருர் அதட்டும் குரலில். "ஹோட்டல் வைப்பதற்குப் பணம் கொடுக்காவிட்டால் என்ன செய்ய வேண்டுமென்றிருக்கிருய்?" என்று இரைந்து தரையில் ஒரு குதி குதித்தார்.

"வழக்குப் போட்டு என் பங்கைக் கேட்கப்போகிறேன்" என்று நாராயணன் மனதுக்குள் சொல்லிக் கொண்டே தலை குனிந்து நின்ருன்.

'இவர் பலமாகப் பேசினுல் வீட்டின் ஒடே பறந்து போய்விடுமோ?' என்று யோசித்துக்கொண்டிருந்த மனைவியின் பக்கம் திரும்பி கோபாவேசத்துடன் அவர் சொன்னுர்.

"என்கூட இருந்தால் என்ன பாக்கியம் வந்தது என்று லட்சுமி உன்னிடம் சொன்னுளா? இல்லை அதுவும் உன் தலை அரட்டையா? உம்......என்ன சொல்ல வேண்டுமோ சொல்லு!"

தேங்காயைத் துருவிக்கொண்டிருந்த சீதம்மாவின் முகத்தைப் பார்த்து சங்கப்பய்யாவிற்கு வெறுப்பு பிறந்தது. முதலிலேயே குரூபி...ஆனுலும் கைபிடித்த மனைவியென்று இவளை விட்டுத் தாம் வேறே எந்தப் பெண்ணையும் கண்ணெடுத்துப் பார்த்ததுண்டா? அப்படியிருந்தும் இவள் மகனுடன் சேர்ந்து தன்னை விரோதித்திருக்கிருளே என்ற வெறுப்பில் அவர் "தூ" என்று துப்பி ஹாலிற்கே மறுபடி வந்துவிட்டார். வேர்த்துக் கொட்டியிருந்த முகத்தை வேட்டியின் துணியால் துடைத்த வண்ணம், "அடியே சாந்தா, லட்சுமி எங்கேடி?" என்று இரைச்சலிட்டார்.

* * *

பூசை அறையின் முன்பு நின்று அவர் உறக்கப் பேசினுர்: "இல்லை, முடியாது. என்ன ஆனுலும் சரி—

பார்த்துவிடுகிறேன். ஆண்டுதோறும் கொண்டாடப் படும் அனந்தம் விரதம், கௌரி-கணேசர் பண்டிகைகள் எல்லாவற்றிற்கும் தலைவனாக முன் நிற்கும் அவர், மூன்றே சாண் இருக்கும் இந்தப் பையன், பேராசை பிடித்த மனைவி இவர்கள் பேச்சைக் கேட்டு, தலைமுறையாகப் பாதுகாத்து வந்த தோட்டத்தை மாற்றானுக்குக் கொடுத்துவிட முடியுமா? என்ன அதுவும் ஷிமோகாவில் வைதீகப் பிராமணனுக்குப் பொருந்தாத சாதம் விற்கும் ஒரு கடை வைப்பதற்காக?—வந்ததெல்லாம் வரட்டும்—ஒருகைப்பார்த்தே விடுகிறேன்.''

இடுப்பில் கத்தியைச் சொருகிக் கொண்டு நடந்தார். அப்போது பூவைப் பொறுக்கிய வண்ணம நின்றிருந்த சாந்தா, ''அப்பா, நானும் உன்னுடன் வரட்டுமா?'' என்று ஆசை முகத்துடன் தம்மைப் பார்த்துக் கேட்டதும் அவருக்குச் சற்று நிம்மதியாக இருந்தது. எனக்குத் துணையாக யாரும் இல்லாவிட்டாலும் நான் அப்படியே காலந்தள்ளி விடுவேன் என்று தனக்குள் சொல்லிக்கொண்டார். நான் சபதம் செய்கிறேன். வேண்டுமானால் அவன் போட்டி போடட்டும். இவன் பீடியை இழுத்துப் பேட்டையில் திரியும் உல்லாசக் காரன் குச்சிபோன்ற உடலுடையவன். நான் மூன்று வண்டி விறகை உடைத்துத் தள்ளும் பலசாலி. வீட்டுக்கு நற்பெயர் வாங்கும் மகனா இந்த உருப்படாதவன்? இன்னும் கொஞ்சம் பேசியிருந்தால் அப்படியே மென்னி யைப்பிடித்து வெளியில் தள்ளியிருப்பேன்--என்ன நினைத் துக் கொண்டானோ—இந்தப் பையன். இதையெல்லாம் நான் பொறுத்துக் கொள்ள முடியுமா?—இப்படியெல் லாம் முணு முணுத்துக்கொண்டே அவர் வீட்டுக்குப் பின்னாலிருந்த குன்றின்மேல் ஏறத் தொடங்கினார்.

வழியில் சொம்புடன் நின்றிருந்த லட்சுமியைப் பார்த்து அப்படியே நின்றார்—அவளிடம் என்ன கேட்க

வேண்டும்? "நீ விதவையாக வீடு வந்து சேர்ந்தது என் தவறு லட்சுமி!" என்று கேட்பதா? "கணவன் இறந்தால் என்ன? எதற்கும் குறைவில்லாமல் நான் பார்த்துக் கொள்ளுகிறேன்" என்று சொல்வதா? என்ன பேசுவது என்று யோசிப்பவர் போல அவளுடைய வெறும் நெற்றியைப் பார்த்தார். 'வெயிலில் புறப்பட்டாயே அப்பா?" என்று அவள் கேட்டவுடன் அவருக்கு மிக்க சந்தோஷமாயிற்று. நேற்று அவளும் சாந்தாவும் கூடிப் பலவந்தமாக எண்ணெய் தடவி ஸ்நானம் செய்வித்திருந்தனர். குளியல் முடிந்த பிறகு இரண்டு போர்வைகளைப் போட்டு, "நன்றாக வேர்க்கட்டும்; அப்படியே படுத்துக்கொள் அப்பா" என்று சொல்லி அருகில் உட்கார்ந்த லட்சுமியுடன், என்ன பேச வேண்டுமென்று தோன்றிற்று? மனைவி, மகன், பந்துக்கள் யாரிடமும் சொல்ல முடியாததை அல்லவா இவளிடம் சொல்ல வேண்டும்! "லட்சுமி, இந்தத் தடவை பாக்கு விலை உயர்ந்து ஆரஞ்சு விளைச்சலும் நன்றாக இருந்து கைக்கு ஐந்து, ஆறு ஆயிரமாவது கிடைத்தால் கடனைத் தீர்த்து, வீட்டை அழகு செய்து......" கேட்க இஷ்டமில்லாவிட்டாலும் தலையை ஆட்டிக்கொண்டே லட்சுமி நடுவே சொன்னாள், "அப்பா, நீ ஏன் இதையெல்லாம் அண்ணா அம்மாவிடம் சொல்லக்கூடாது?" சே! இதிலெல்லாம் இவளுக்கு விருப்பம் கிடையாது—இவளிடம் சொல்வதைவிட...

"சாப்பாட்டு வேளைக்கு வருகிறேன். நீயும் சாந்தாவும் எண்ணெய் ஸ்நானம் செய்யுங்கள்" என்று இடப் பக்கம் திரும்பினார்.

"வேண்டாம் அப்பா" என்று லட்சுமி சொன்னாள். "குளியலும் வேண்டாத அளவுக்கு உனக்கென்ன கேடு

வந்து விட்டது?" என்று கோபமாகச் சொல்லிவிட்டு பதிலையும் எதிர் பார்க்காமல் நடையைக் கட்டினார்.

எட்டு வருஷங்களுக்கு முன்பு ஜில்லா அதிகாரிகள் தமக்கு மலைநாட்டின் சிறந்த விவசாயி என்று கொடுத்த வெள்ளிப் பதக்கத்தைப் பெட்டியிலிருந்து வெளியே எடுத்துக் கொடுத்து, "லட்சுமி, இதை நீ நன்றாக வைத்துக் கொள்" என்று கொடுத்தால் எப்படி அவள் மகிழ்ச்சியில் மூழ்கிப் போவாள்? சாந்தாவும் இப்பொழுது கூட இருந்தால் எவ்வளவு நன்றாக யிருக்கும்? அங்கேயும் இங்கேயும் ஓடித் திரிந்து அரட்டையடித்துக் கொண்டிருப்பாள். லட்சுமிக்கு இருக்கட்டும், அந்தக் குழந்தைக்கு கூடத் தெரிகிறது. இதென்ன பணத்திற்காகச் செய்யும் வேலையா? வெறி பிடித்து நடனமாடும் ஐம்புலன்களைச் 'சும்மா இரு', என்று சொல்லி அடக்குவது போல இதுவும் ஒரு கடினமான காரியம். என்ன இன்பமிருக்கிறது இந்த மூதேவிகளுக்கு? சிகண்டி (பாரதத்தில் ஒரு பாத்திரம்) ஹோட்டல் வைத்த மாதிரியல்ல, இந்த வேலை. தெரிந்து கொள்ளட்டும். என் உடம்பில் பலமிருக்கிறது என்று தெரிந்து கொள்ளட்டும். பாக்கு விற்று வந்த பணத்தை ஆரஞ்சுத் தோட்டத்திற்கே போட்டால் ஏன் அது செழிப்பாக வளராது? பார்த்தே விடுகிறேன். என்ன? ஆரஞ்சு விளைவது குடகுக்காரர்களுக்கு மட்டுமே குத்தகையல்லவே! மூன்று நான்கு வருஷம் கொஞ்சம் சிரமப்பட வேண்டியிருக்கும். அப்புறம் கடனையெல்லாம் தீர்த்து மீதி பணத்திற்குப் பின்புறமிருக்கும் குளத்துக்குக் கிருஷ்ண பட்டர் போட்டது போல பம்பு வைத்தால் என்னென்ன முடியுமோ அத்தனையும் விளையலாம். தரிசாகக் கிடக்கும் பூமி அப்பொழுது பச்சையாகக் காட்சியளிக்கும்...குளத்

தின் அருகில் நின்று அப்பொழுது என்ன சொல்லுவாள் என்று நினைத்துக் கொண்டார்—என்ன சொல்லுவாள்? நான் நன்றாக இருக்கும்வரை கணவன் இறந்தால் என்ன? அவள் எதற்கும் கவலைப்பட வேண்டியதில்லை...இப்படியெல்லாம் அவர் எண்ணிக் கொண்டார்.

பிறகு சாந்தா எடுத்துத் தந்த மலர்களை மாலை கட்டும்பொழுது லட்சுமி யாருக்கும் காணாமல் கண்களைத் துடைத்துக்கொண்டது நினைவுக்கு வந்தது. சங்கப்பய்யா மூச்சுத் திணறி அப்படியே நின்று விட்டார்—ஏன் அவள் கண்ணீர் விட்டாள்? அது இயற்கைக் குணமாயிருக்கலாம். ஆனால் அவளும் ஏன் என்னைப்போல மனத்தை அடக்கி வீரத்துடன் வாழ்வு நடத்தக் கூடாது என்று நினைத்த வண்ணம் தோட்டத்தின் பக்கம் அடி வைத்தார். ஆரஞ்சுத் தோட்டத்தில் ஏன் பழமாகாது பார்த்தே விடுவோம். ஹோட்டல் வைத்துச் சம்பாதித்து விடுகிறானாம். அது சுலபமாம்—என்னை ஆட்டி வைக்கும் தெம்பு இவனுக்கு இருக்கிறதா என்ன? ஒரு கை பார்த்தே விடுகிறேன்.

சௌடி வனத்திற்கு பிரவேசித்த சங்கப்பய்யா தலைக்குச் சுற்றியிருந்த நீண்ட வேட்டியை எடுத்த வண்ணம் இனிமேல் நான் லட்சுமி சமைத்ததை மட்டுமே சாப்பிடப் போகிறேன் என்று சொல்லிக் கொண்டார். மனைவியும் மகனும் பாழாகப் போகட்டும்—என் உடலில் வலுவிருக்கத்தான் செய்கிறது. இந்தத் தடவை பாக்கு விலை உயர்ந்தால் எல்லாம் சரியாகப் போய்விடும். ஆனால் மாமா பேச்சைக் கேட்டுக்கொண்டு இந்த தகட்டுக் காது நாராயணன் தம் நிலத்தில் பங்கு கேட்க கோர்ட்டுக்குப் போனால்—நம் வமிசத்தில் யாரும் கோர்ட்டுக்குப் போகாதிருக்கும்பொழுது இந்த மடையன் என் பெயரைச் சந்திக்கு இழுத்தால் எப்படி—இவ்வாறு நினைத்துக்

கொண்டு (நடையின் வேகத்தைக் குறைத்து) 'அடடா! வயிற்றில் பிறந்த மகன் கைப்பிடித்த மனைவியுடன் நின்று மார் தட்டுகிறானே!' என்று அவர் பெருமூச்சு விட்டார். (காலில் சுற்றிக்கொண்ட பூச்சி ஒன்றை உதறிவிட்டார்.) என்ன ஆனாலும் சரி, என் பிடிவாதத்தைத் தளர்த்தவே மாட்டேன் — வேண்டுமானால் லட்சுமியையும் ஒரு வார்த்தை கேட்டு விடுவது? "இது சரியா லட்சுமி?"— அவள் துணை இருக்கும்வரை யார் வாய் திறந்தால் என்ன? பார்த்தே விடுகிறேன் ஒரு கை. இப்பேர்ப்பட்டவர்களை வெட்டிப் போட்டாலும் பாவமில்லை......

வனத்தின் நடுவேயிருந்த அருவியின் அருகே போய் நின்றார் சங்கப்பய்யா. எப்பொழுதும் செங்குத்தாக வீழ்ந்து கொண்டிருக்கும் அந்த அருவியின் மோகனக் காட்சியைப் பார்த்துக்கொண்டே இருக்க வேண்டும் போல அவர் மனம் மகிழ்ச்சியில் லயித்தது. அவர் சிறுவனாக இருக்கும் பொழுது ஒருநாள் அவர் தந்தை இதே இடத்தில் நின்று "ஒவ்வொரு தடவை பூமி, மலை களின் சுமையைத் தாங்காமல் நடுங்குவதுண்டு. அப் பொழுது அருவிகள் ஏற்படுகின்றன" என்று சொல்லி யிருந்தார். இப்பொழுது தன்னுடன் சாந்தாவும் இருந்தால் நன்றாயிருந்திருக்கும். "பூமிக்கு நடுக்கம் ஏற் படுகிறதா அப்பா?" என்று அவள் தம்மைப் பல கேள்விகள் கேட்டிருப்பாள்.

அப்படியே நின்றிருந்த சங்கப்பய்யாவின் கண்கள் மெள்ள மெள்ள மூடியவண்ணம் சிறிதாயின; மறுபடி மலர்ந்து பெரிதாயின. திரும்பவும் நிதானமாக மூடிக் கொண்டன. அங்கு அவர் கண்ட காட்சியைப் பார்த்து அப்படியே நடுங்கிவிட்டார். பிறகு கண்களைத் திறந்து நேராக பயமின்றி பார்த்தார். நெருப்பைப்போல கனல்

ஙக்கிக்கொண்டு, அருவிக்கு அந்தப் பக்கம் படுத்திருந்த புலியும் இவரையே பார்க்கத் தொடங்கிற்று. ஆமாம், அதுவும் இவரைப் போலவே கண்ணைத் திறந்து பயமின்றிப் பார்த்துக்கொண்டிருந்தது. அவர் ஆவேசம் வந்தவர்போல அசையாமல் அப்படியே நின்றுவிட்டார். கூச்சல் போடவும் மனம் வரவில்லை; ஏன்? பின்னல் நகர்ந்து ஓடிப்போகவும் முயற்சி செய்யவில்லை—ஏன்? தன்னைத்தானே கேட்டுக்கொண்டார். ஆச்சரியம், மிகுந்த ஆச்சரியம்! யாரிடமும் கடைசியாக லட்சுமியிடமும் சொல்லக்கூடாததை இப்பொழுது சொல்ல வேண்டுமென்று தோன்றுகிறதல்லவா? ஏதோ ஒரு சக்தி பாய்ந்து கொண்டிருக்கிறதே? ஆமாம் வாழ்ந்தால் புலியைப்போலவே வாழ்க்கையை நடத்த வேண்டும்...

உடம்பு வேர்க்கச் சங்கப்பய்யாவிற்குத் தம் நினைவு வந்தது. அது வயல்; காலுக்குக் குத்தினது முள்: எதிரே நிற்பது கணக்குப்பிள்ளை. ஆனல் தாம் புலியைப் பார்த்ததை மட்டும் அவர் சொல்லவில்லை.

"என்ன சங்கப்பய்யா, தோட்டத்திற்குப் புறப்பட்டீரா?"

கணக்குப்பிள்ளை பொடி டப்பாவை எடுத்துப் பார்த்ததும் அவர் அப்படியே நின்றார். ஆனல் அவர் மனதில் எதையோ எண்ணிக் கொண்டிருந்தார்.

"சிறுசுகளின் கோரிக்கைக்கு நாம் ஏன் தடை விதிக்க வேண்டும்? என்ன சொல்ல வந்தேனென்றால், நம் கையிலே என்னவிருக்கிறது சொல்லுங்கள்? உதாரணமாக எடுத்துக்கொள்ளுங்கள்—லட்சுமிக்கு இப்படி நேருமென்று நீங்கள் கனவிலாவது நினைத்திருந்தீர்களா சங்கப்பய்யா?"

அடே கணக்குப்பிள்ளை ; லட்சுமிக்கு என்ன ஆனுல் இவனுக்கு என்ன ?

சங்கப்பய்யாவின் புருவங்கள் நிமிர்ந்தன.

"விதியின் எழுத்தை மாற்றமுடியாது. அதுதான் நான் சொல்வது. எல்லாம் நான் சாதித்து விடுகிறேன் என்று போராடுவது வியர்த்தமான காரியம். இப்பொழுது உங்கள் ஆரஞ்சுத் தோட்டத்து விஷயத்தையே எடுத்துக்கொள்ளுங்கள் சங்கப்பய்யா. இப்பொழுது நான் என்ன சொல்வதென்ருல்—உங்கள் மைத்துனன், என் பையன் கிட்டன், உங்கள் மகன் மூன்று பேரும் சேர்ந்து ஹோட்டல் வைக்க வேண்டுமென்று இருக்கிருர்களாம்...நான் என்ன சொல்ல வந்தேனென்ருல், இந்த விவசாயத்தில் சிறிதளவும் லாபம் இல்லை. இந்த மலையில் முட்டிக்கொள்வதைவிட ஹோட்டல் வைத்தாலே நல்லது; அந்தத் தொழிலில் லாபம் அதிகம் வருமாம். நான் என்ன சொல்லுகிறேனென்ருல்..."

"உங்கள் வேலையைப் பார்த்துக்கொள்ளுங்கள் கணக்குப்பிள்ளை, சும்மா ஏன் அரட்டிக்கொள்கிறீர்கள்?"

கணக்குப்பிள்ளையின் முகம் பொய்ச் சிரிப்பினுல் விகாரமடைந்து சங்கப்பய்யாவின் கண்களைப் பார்த்து பயந்துபோயிற்று. அந்தக் கண்கள் புலியின் கண்களைப் போலல்லவா இருக்கிறது? சங்கப்பய்யா அங்கு நிற்காமல் நடையைக் கட்டிவிட்டார்.

சிப்பாயைப் போல நடையைப் போட்டுக்கொண்டிருந்த சங்கப்பய்யாவிற்கு எதிரே தெரிந்த பெரிய மந்தாரைப் பூ சிவப்பு ஒன்றைப் பார்த்து, அவை எல்லாவற்றையும் பறித்துக்கொண்டுபோய், துர்க்கையின் பூசையைச் செய்ய வேண்டுமென்று தோன்றிற்று.

தாழ்வாரம் முழுவதிலும் சிவப்புக் கோலம் எழுத வேண்டும். அதன் மத்தியில் தேவியைப் பிரதிஷ்டை செய்ய வேண்டும். கிழக்கு வானம் சிவப்பாயிருக்கும் பொழுதே எழுந்து சுத்தமாக மங்கள ஸ்நானம் செய்ய வேண்டும். சிவப்பு வேட்டியை உடுத்திக்கொள்ள வேண்டும். விபூதியைப் பூசி, ருத்ராட்ச மாலையை அணிந்த வண்ணம் மந்திர கோஷம் செய்து தேவியைத் துதிக்க வேண்டும். காடு நடுங்குவது, உட்கார்ந்த நிலம் நடுங்குவது போல, பாவிகளின், பேடிகளின் இதயங்கள் நடுங்குவதுபோல வேத கோஷத்தை முழக்க வேண்டும்; பூரணமாக முழங்க வேண்டும்; புலியின் மீது ஆராகணித்து, தேவி பிரத்யட்சமாகும் வரையிலும் முழங்க வேண்டும்.

மடிப் பாவாடையை அணிந்த சாந்தா ஊதுவத்தியைப் பற்ற வைத்து சந்தனத்தை அரைத்தவண்ணம் தம் அருகில் உட்கார்ந்திருக்க வேண்டும். விதவையானால் என்ன, பீதாம்பரத்தை அணிந்து தியானத்தில் மூழ்கி லட்சுமியும் தம் அருகிலேதான் இருக்க வேண்டும். கரும்பைப் பிழிந்து சாறெடுப்பது போல, ஒரே மனத்துடன் தேவியை வழிபட வேண்டும். அப்பொழுது லட்சுமியின் பாழும் நெற்றியின்மீது குங்குமம் சிவப்பாக, மினு மினுக்கும்; சிவப்பாக, இரத்தத்தினால் பொட்டு வைத்தது போல, சிவப்பாகச் சிரிக்கப் போகிறது; சிரிக்கத்தான் சிரிக்கும். அப்பொழுது ஆரஞ்சுத் தோட்டமே குலுக்கிக் குலுக்கிச் சிவப்பான பழங்களுடன் நிறைந்து விடுகிறது. மந்திரத்தால் கட்டுண்டது போல காடு மலை எல்லாமே தம் காலின் கீழ் அப்பொழுது வந்து விழுகின்றன. கையாலாகாதவர்கள், ஹோட்டல் வைப்பவர்கள் தம் காலில் விழப் போகிறார்கள். புலியின் மீது ஆரோகணித்துத் தேவி தம் எதிரே நிற்கப் போகிறாள்.

ஆமாம் நிற்கப் போகிருள் — தன் முழு உருவத்துடன்—முழு உருவத்துடன்......

சிவ பூசையில் கரடி போல, பூசையின்பொழுது மனைவி குறுக்கே வந்தால் அவள் கழுத்திலிருக்கும் தாலியைப் பிடித்திழுத்து மகனுடன் வெளியே தள்ளி விடுகிறேன் என்று எண்ணிக்கொண்டே தோட்டத்திற்குள் பிரவேசித்த அவருக்குக் கண்முன் இருள் சூழ்ந்து கொண்டுவிட்டது.

கூந்தலைக் கத்தரித்த மொட்டைத் தலையைப்போல வெறிச்சென்றிருந்த தோட்டத்தின் வெறுமை அவர் கண்முன் பூச்சிகளைப்போல் வந்து மொய்த்தது. பச்சையைச் சுமந்து குலுங்குகின்ற பாக்கு மரங்கள் வேருடன் ஏன் இப்படிச் சாய்ந்திருக்கின்றனவே? பூஞ்செடிகள், வெற்றிலைக் கொடிகள் எல்லாமே பாழடைந்து போயிருக்கின்றனவே?...

''ஏ கரியா, எங்கேடா செத்துப் போனுய்?'' என்று சங்கப்பய்யா இரைச்சலிட்டார். பதில் இல்லை. ''ஓகோ, யானை தோட்டத்திற்குள் நுழைந்து பாழ் பண்ணியிருக்கிறதே!" என்று சொல்லிக்கொண்டே கீழே சாய்ந்திருந்த பாக்கு மரங்களைத் தாண்டித் தாண்டி ஓடினுர்...

கரியன் அங்கே குறட்டை விட்ட வண்ணம் படுத்திருந்தான். அவன் தலைக்கு மேலே உடைந்த கோழி முட்டைகள், ரொட்டித் துணுக்குகள் கிடந்திருந்தன. சுற்றிலும் பலாக் கொட்டைகள், அங்கேயே விழுந்திருந்த ஒரு கத்தி, அவனுக்குத் தன் நினைவே இல்லைபோலிருக்கிறது. அவன் கால் பக்கம் காலி கள்ளுச் சட்டி.

குறட்டை விட்டுக்கொண்டிருந்த அவன் வாயில் தூக்கத்தின் சுகத்தை நாற்றத்துடன் வழியும் சொள்ளு...

பலாப் பழத்தின் வாசனைக்கு 'ஞொய்' என்று ஓசையுடன் அருகே வந்திருந்தது ஒரு எருமை. அதன் உடம்பின் சேறு சங்கப்பய்யாவின் வேட்டியில் உராய்ந்த பொழுதுதான் அவருக்குத் தம் நினைவு வந்தது. உடனே இடுப்பிலிருந்த கத்தியின் பக்கம் கவனம் போகவும் கண்முன் இருள் சூழ்ந்தமாதிரி ஆயிற்று. தம்மைத் தாமே தேற்றிக்கொண்டார். கள்ளின் நாற்றத்தினுல் வாந்தி வருவது போலத் தோன்றவே அப்படியே அவர் பின்னுல் ஒதுங்கிவிட்டார்.

மத்தியானத்து கடும் வெய்யில் கத்தரித்துப் போட்டது போலவிருக்கும் குன்றுகளில், மா, பலா மரங்கள் தூர தூரமாக வளர்ந்திருக்கும் இடங்களில், மூங்கில் புதர்கள் கும்பலாக இருக்குமிடத்தில்; கையை நீட்டியிருக்கும் நிழலில்; நெருப்பைக் கட்டிக்கொண்ட வானத்தில் அமைதி குடிகொண்டிருக்கிறது. அவ்வப்பொழுது காக்கைகளுக்கு மட்டும் தாகம். சில பறவைகள் மரத்தையே கொட்டிக்கொண்டிருந்தன. தேனீக்களின் ரீங்கார சத்தம். சேற்றுத் தண்ணீரில் படுத்து இனிமையாக 'ஞொய்' என்று இராகமிழுக்கும் எருமைகள்.

5ன்ன அலட்சியம்...சங்கப்பய்யா யோசித்தார். எதையும் நினைப்பதற்கு இது தக்க நேரமல்ல—இது உறங்குவதற்குச் சரியான நேரம். எலும்புகள், தசை மண்டலம், நரம்புகள்—அலுத்திருக்கும் அனைத்துக்கும் ஓய்வு தேவை—தூக்கத்தில்தான் அவை அமைதி காண முடியும்.

யானை நுழைகிறதோ நுழையட்டும்; பூமி வாயைத் திறந்து கேலிச் சிரிப்பு சிரிக்கிறதோ சிரிக்கட்டும். இரண்டு கைகளிலும் பிடித்து மகனையும் மனைவியையும் தூரத் தள்ளி விடுகிறேன் என்று அவர் சொல்லிக் கொண்டார்.

ஆனால் 'வேலை கெட்டது' என்ற ஒரு சொல் மட்டும் அவர் மனத்திற்குள் திரும்பித் திரும்பி ரீங்காரம் செய்தது. லட்சுமி, "என்னப்பா இப்படியிருக்கிறாய்?" என்று கேட்டால், "யானை தோட்டத்திற்குள் நுழைந்தது—நாசம் செய்தது என்று சொல்லப்போகிறேன்" என்று நினைத்துக்கொண்டார். அப்படியே அந்தக் காட்டிற்குள் நின்று உரக்கச் சொன்னார். "யானை நுழைந்ததால் லட்சுமி வேலை கெட்டுப்போயிற்று."

லட்சுமிக்கு விருப்பமானதென்று வழியில் சில முந்திரிப் பழங்களைப் பறித்தார். சாந்தாவின் நினைவு வந்து அவளுக்கும் சில பழங்களைப் பறிக்கும்பொழுது—அந்தக் கணக்குப் பிள்ளையாகட்டும், அவன் மகன் கிட்டனே ஆகட்டும், கை பிடித்த அந்த மூதேவி மனைவியோ, அகம் பாவம் பிடித்த மகனோ "தோட்டந்திற்குள் யானை நுழைந்த பிறகாவது புத்தி வந்ததா? இனிமேல் நீங்கள் கடன் தீர்ப்பது எப்படி? ஆரஞ்சுத் தோட்டத்தில் இனிமேல் பழம் எப்படிக் காணும்?" என்றெல்லாம் உபதேசம் செய்ய வந்தால் பல்லைப் பிடுங்கிக் கையிலே கொடுத்து விடுகிறேன்—என்று சொல்லிக் கொண்டார். ஒரு கர்ஜனைச் செய்து காடே நடுங்கும்படியாகச் செய்து விடுகிறேன் என்று மூச்சைப் பலமாக இழுத்துக்கொண்டார். வேகமாக நடந்ததனால் கால் வலி கண்டுவிட்டது எனச் சொல்லிக் கொண்டார். கண்களின் முன்பு இருள் சூழவே 'பாழும் வெயில்' என்று தலைக்குத் துண்டை சுற்றிக் கொண்டார். கடன் பணத்திற்குக் கிருஷ்ண

பட்டர் தொந்திரவு செய்தால் மூஞ்சியின்மீது துப்பி அனுப்பிவிடுகிறேன் என்று இடுப்பிலிருந்த கத்தியின் பிடியை இறுகப் பிடித்துக் கொண்டார்.

மனைவியை அழைத்து, "நீ தொட்ட தண்ணியை நான் குடிக்க மாட்டேன். வீட்டை விட்டு நட. சமைத்துப் போடுவதற்கு லட்சுமியும் சாந்தாவும் இருக்கிறார்கள்" என்று சொல்லிச் சபதம் செய்யவேண்டும் என நினைக்கும்பொழுது பாதை தப்பி நடந்துவிட்டது அவருக்குத் தெரிந்தது. ஏதோ ஒரு குன்றின் அடிவாரத்திற்கு வந்து நின்று, இனி அப்படி திரும்பி போகவேண்டுமே என்று

"வழி தவறிவிட்டது" என்று உறக்கச் சொல்ல வேண்டுமென இவருக்கு தோன்றிற்று. அப்படியே சொல்லிக்கொண்டு இடது பக்கமிருந்த மூங்கிற் புதரின் பின்னால் பார்வையைச் செலுத்தினார். தம் கையை மேலே தூக்கி ஆள் உயரம் வளர்ந்திருந்த புல்லின் நடுவே என்னவாகவிருக்கும் என்று இரண்டு மூன்று அடி முன்னால் வைத்தார்.

கீழே விழும்படியான நிலைமை அவருக்கு அப்பொழுது ஏற்பட்டுவிட்டது. சங்கப்பய்யா தம் வேட்டியால் முகத்தை மூடிக்கொண்டார்.

அங்கே, லட்சுமி கணக்குப்பிள்ளை மகன் கிட்டனை அணைத்துக்கொண்டு ஆனந்தமாக நிழலில் படுத்திருந்தாள்.

'வழி தவறிவிட்டதா என்ன?"

குத்துவிளக்கில் எண்ணெய் தீர்ந்த பிறகு எரிந்து போகும் வத்தியைப்போல அவர் மனத்திற்குள் இருள் சூழ்ந்து கொண்டுவிட்டது. இருள் எங்குமே வியாபித்து விட்டது. மரங்களின் மீதிருந்த குரங்குகள் பல்லேக் காட்டி ஏளனம் செய்தன.

வழி தவறிற்று?—அருவியின் அருகில் வந்து நின்று பல்லேக் கடித்துக்கொண்டு சூனியத்தையே பார்க்கத் தொடங்கினர். கிருஷ்ணபட்டர் வீட்டுக்குப் போவதா? இல்லே, தம் வீட்டிற்கே போவதா? பல்லேக்காட்டி ஏளனம் செய்த குரங்கின் நினைவு வந்து அப்படியே திரும்பிப் பார்த்தார். கணக்குப்பிள்ளை அங்கு வந்து நின்றிருந்தார்.

"கேட்டீர்களா சங்கப்பய்யா?"

"ஹா!"

"இந்த அருவியின் கீழே அந்தப் பக்கம் புலி நிம்மதியாகப் படுத்திருந்ததாம். அதற்கென்ன வந்துவிட்டது? கொக்கன் குண்டுபொழிந்து கொன்று போட்டானும்...... இப்பொழுது அதை எதற்குச் சொல்ல வந்தேனென்றல்......"

புயற்காற்றில் சிக்கிக்கொண்ட மரத்தைப் போல அப்படியே நின்றுர் சங்கப்பய்யா.

கணக்குப்பிள்ளைகூட பேச்சு கொடுக்க மனமில்லாமல் மெள்ள நழுவினர். கிருஷ்ணபட்டர் வீட்டுப் பக்கம்... .....

ஆறு மாதங்கள் கழிந்தபிறகு ஒருநாள் அந்தி வேளையில் காலே இழுத்த வண்ணம் அடிமேல் அடி வைத்துக்

கொண்டிருந்த சங்கப்பய்யாவைப் பார்த்து பேட்டை அஹமத் பியாரி ,'சலாம்'' என்ருன். ஏதேதோ பேசிக் கொண்டிருந்த பின்னர், ''ஒருவரே விவசாயம் செய்து கொண்டிருக்கிறீர்களாமே, தோட்டத்தை விற்று கிருஷ்ண பட்டருக்குக் கொடுத்து வீட்டாரையெல்லாம் ஷிமோகா விற்கு அனுப்பி விட்டீர்களாமே உண்மையா?'' என்ருன் பீடி இழுத்துக் கொண்டே. சங்கப்பய்யா பேசாமல் தலையை ஆட்டினர். ''ஆரஞ்சுத் தோட்டத்தில் இந்தத் தடவை விளைச்சல் வரும்; எப்படி பூ விட்டிருக்கிறது பார்த் தீர்களா?'' என்று அவன் சொன்னதற்கும் தலையை ஆட்டி ஞர். ''கிருஷ்ணபட்டர் குத்தகை எண்ணூத்திஐம்பது என்ருர். நான் எழுநூற்றுஐம்பதுக்கு ஒப்புக்கொண் டேன். நஷ்டமேற்படாது அல்லவா?'' என்று கேட்ட தற்கு, ''ஏற்படாது'' என்ருர். ''பாவம், ஒருவரே இருக்க அலுப்பு தட்டாதா?'' என அவன் சொல்லவே, ''அலுப்பு ஏன்?'' என்று விடையளித்து அவர் வீடு வந்து சேர்ந்த பொழுது நன்ருக இருட்டியிருந்தது.

சாப்பாடு வேண்டியிருக்கவில்லை. சாம்பல் பூத்துப் போயிருந்த, அடுப்பைப் பற்ற வைத்து எதற்கு இனி சாதம் செய்வது? காற்றுக்கு விளக்கு அணையவே வெளி யில் வந்தார். வானத்தில் மேகம் படர்ந்து நிலவின் ஒளியை மறைத்திருந்தது.

பன்னிரண்டு மணி வரையில் கைகட்டிக் கொண்டு முற்றத்தில் அப்படி இப்படி நடந்த வண்ணம் நின்ருர். இடுப்பில் சுற்றியிருந்த டவலை எடுத்து, தலைக் குச் சுற்றிக்கொண்டு, கிணற்றின் சுவரில் சாய்ந்தவாறே சொல்லிக்கொண்டார். ''நானும் உன் கூடவே இருக் கிறேன் அப்பா'' என்று வேண்டிக் கொள்வதைப் போல தீன பாவத்துடன் நின்ற சாந்தாவைத் தாம்

அப்படி அதட்டியிருக்கக் கூடாது ...... இப்பொழுது அவள் இருந்தால் தம் நரைத்த மீசையை அப்படியே தடவிக் கொடுத்திருப்பாள். கழுத்தில் மாலையாகத் தொங்கி, தம் தலைமீது கையை வைத்துத் தட்டியிருப்பாள்.

அப்படியே நின்றிருந்த சங்கப்பய்யாவின் கால்கள் பலவீனத்தால் ஒடுக்கமுற்றன. நீண்ட பெருமூச்சு விட்டார். வேட்டியின் நுனியால் ஈரமான தம் கண்களைத் துடைத்துக் கொண்டார். யார் வீட்டாருடையதோ என்னவோ, ஒரு கிழப்பசு வந்து தலையைத் தம்முள் நீட்டவே அன்புடன் அதன் கழுத்தைத் தடவிய வண்ணம் சங்கப்பய்யா அப்படியே நின்றார்.

தமிழாக்கம் :

கமலா தாமோதரன்.